



# வரகவி தாகூர்

சுவாமி சுத்தானந்த பாரதியார்

# வரகவி தாகூர்



சுவாமி சுத்தானந்த பாரதியார்
இயற்றியது




அன்பு நிலயம்
இராமச்சந்திரபுரம் :: திருச்சி ஜில்லா
1942

## தாகூர் வாணி வாழ்க !

கல்யாணி ராகம்] [ஆதி தாளம்

ஜய ரவீந்திர, வரகவீந்திர
தாகூர் வாணி வாழ்கவே!
பயமில் லாத சுதந்த ரத்தில்,
பரமா னந்தப் பண்கள் பொழிந்த (ஜய)

கட்டில் லாத கடலைப் போலக்
கர்ஜிக்கும் கவி வாணி ;
தட்டில் லாத கங்கை போலத்
தாவிப் பொங்கும் காவியநதி (ஜய)

கொஞ்சுங் கிளியுங் கூவுங் குயிலும்,
குதிக்கும் மயிலும் போலே,
செஞ்சொல் இசையுந் தெளிந்த நடையுஞ்
சேர்ந்து திகழுந் தெய்வ வாணி (ஜய)

இடியும் புயலும் போலப் புல்லர்
இகலைப் புடைக்கும் வாணி ;
அடிமைத் துயரை வேரோ டறுத்தே
அமர ஞானம் அளிக்கும் வாணி (ஜய)

அறமும், பொருளும், அழகும், அன்பும்
அமைந்த ஜீவ வாணி ;
கருடன் போலக் ககன வெளியில்
களித்துப் பறக்கும் கடவுள் வாணி (ஜய)

தலை நிமிர்ந்து பரத நாடு
தழைக்க வுதித்த கவிதை ;
கலையுலகம் வியந்து போற்றக்
கதிர்பர விடும் புதுயுகக் கவி (ஜய)

—சுத்தானந்த பாரதி.

# பதிப்புரை

இன்று நம் கவியரசர் தாகூர் திருநாள். 'வரகவி தாகூர்' என்னும் இவ்வரிய நூலை இரவீந்திர வாணிக்குச் சூட்டுகிறோம்.

சென்ற ஆண்டு உலகெல்லாம் திடுக்கிட்ட ஒரு செய்தி, தாகூர் ஊனுடலை உதறிச் சென்றதேயாம். உலகெல்லாம் அவர் கவிச் செல்வத்தைப் போற்றியது; அவர் மறைவை எண்ணித் துன்புற்றது. நாடு, நிறம், சாதி, சமயம், அரசியல் கட்சி வேறுபாடுகள் இன்றி, உலகப் பெரியார்கள் அனைவரும் தாகூரை நினைந்து, போற்றி எழுதினர். தாகூரின் நினைவாக ஒரு மலர் வெளியிட முன்பே நினைத்தோம். நினைப்பு இன்றே கைகூடியது.

தாகூர் அருட் புலவர்; கவியுலகின் அற்புதம்! அவர் அருமை ஆங்கில மொழிபெயர்ப்பால் அதிகம் தெரியாது. வங்கமொழியில் தாகூரை அனுபவிக்க வேண்டும்.

வங்கமொழியிலேயே தாகூர் பாடல்களையும் கதைகளையும் சுவைத் தறிந்த யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் அவர்கள் இந்த அரிய நூலை ஒரு வாரத்தில் எமக்கு எழுதி யளித்தார்கள். இந்நூலின் ஒவ்வொரு வரியும் தாகூர் மயமே. இதன் நடையில் எளிய இனிய தெள்ளிய கலையாறு தவழ்கிறது; பக்கத்திற்குப் பக்கம் ஆழ்ந்த சுவைநிரம்பிய விஷயங்கள் பொதிந்து கிடக்கின்றன. கவிதையின் பிறப்பும் வளர்ச்சியும், உயிரோட்டமும் உணர்ச்சியும் இப்படி என்பதை இந்த நூல் விரிவாகக் காட்டுகிறது. இந்நூல் தமிழ் இலக்கியத்திற்கு ஒரு நவரஸமணியாகும். இதில் தாகூரின் குடும்பம், கல்வியறிவு, கவியெழுச்சி, இளங்கவிகள், முதிர்ந்த கவிகள், கீதாஞ்சலி, போஸ்டாபீஸ், இருட்டறை மன்னன், கனி சேர்த்தல், ஸ்மரண், தாகூர்

கட்டுரைகள், பேச்சுக்கள் முதலிய அனைத்திலிருந்தும் ரசமான பாகங்களை, சுவை ததும்ப ஆசிரியர் எடுத்துக்காட்டியிருக்கிறார். தாகூர் 'நோபெல்' வெகுமதி பெற்றது, உலகம் சுற்றியது, பல நாடுகளில் அவர் பட்ட அனுபவங்கள், பெற்ற பரிசுகள், செய்த சொற்பொழிவுகள், அவர் தேசாவேசம், ஆத்மிக உணர்ச்சி, அவர் அமைத்த கலைக்கோயிலான சாந்திநிகேதனம், விசுவபாரதி, ஸ்ரீநிகேதனம் முதலிய ஆசிரமங்களின் விபரம், தாகூருக்கு வங்க சமுதாயம் செய்த மரியாதை, தாகூர் வீரந் ததும்ப எழுதிய அறிக்கைகள், தாகூரின் இறுதி நாள், அவர் கடைசியாகப் பாடிய கவிதைகள், சாவுடன் அவர் செய்த போராட்டம், தாகூருக்கு நாடு காட்டிய மரியாதை முதலிய பல விஷயங்கள் நிரம்பிக்கிடக்கின்றன.

தாகூரைப்பற்றி வங்காளிகளுக்கு எவ்வளவு தெரியுமோ அவ்வளவும் இதில் உள்ளன. இந்நூலைப் படிப்பது, தாகூரைக் கண்முன் பார்த்து, அவர் உள்ளத்திற் கலந்து, கலையுணர்ச்சி பெறுவதாகும்.

இந்நூலைத் தமிழர் ஏற்றுப் போற்றி எம்மை ஊக்குவார்களாக! இஃது எமது உலகப் பெரியார் தொகுதியில் இரண்டாவது மலர் ஆகும்.

இவ்வாறே உலகிற்குக் கலையாலும், அறிவாலும், அருட்பணியாலும் சேவை செய்த பெரியார்கள் வரலாற்றையும், வாக்கையும் தொடர்ந்து வெளியிட முயன்று வருகிறோம்.

அன்பர் ஆதரவும் இறைவன் அருளும் துணை செய்க! எந்தாய் வாழ்க!!

இராமச்சந்திரபுரம்
7—8—1942. } அன்பு நிலயத்தார்.

## FOREWORD

[M.R.RY. SIR. T. VIJAYARAGHAVACHARYA AVL., KT.,]

*( Dewan of Mewar, Udaipur, Rajputana.)*

I have great pleasure in writing a Foreword to **Sri Swami Shuddhananda Bharatiar's "VARAKAVI TAGORE."** The Swamiji, both by his saintly life and linguistic attainments, is well qualified to deal with this rather difficult subject.

Tagore is a great figure, not only of India but of the world. But, here and there in his writings, there are passages the significance of which can only be grasped by people, like our Swamiji, who have thought much and pondered much over things of life and of the spirit.

While simple, this book avoids the unnecessary flourishes which writers in Indian languages are apt to indulge in, and the book can therefore be read with ease and pleasure even by the ordinary unlearned reader.

I have enjoyed reading this book. This book will convey the genius of Tagore to readers in the Tamil country who are unacquainted with English or Bengali.

UDAIPUR<br>
3rd July 1942.

# முன்னுரை

[மீவார் திவான் ஸர். டி. விஜயராகவாச்சாரியார் அவர்கள்
உதயபுரி, இராஜபுதனம்.]

ஸ்ரீ சுவாமி சுத்தானந்த பாரதியார் அவர்களின் "**வரகவி தாகூர்**" என்ற நூலுக்கு நான் மிக்க மகிழ்ச்சியுடன் முன்னுரை எழுதுகிறேன். சுவாமிகள், தம் அருள் வாழ்வாலும், பன்மொழிப் புலமையாலும், இந்த அரிய பெரிய விஷயத்தைப்பற்றி எழுத நல்ல தகுதி வாய்ந்தவர்கள்.

தாகூர், இந்தியா மட்டுமன்று, உலகமே போற்றும் மகான்; ஆனால், அவர் நூல்களில் ஆங்காங்கே சிற்சில தனிப்பட்ட பகுதிகள் உள்ளன: ஜீவானுபவங்களையும், ஆத்ம தத்துவங்களையும் ஆழ்ந்து சிந்தித்து, தியானத்தில் பரிசீலனை செய்து அறிந்து தெளிந்த நம் சுவாமிகளைப் போன்ற மகான்களே அவற்றின் கருத்தை அறிந்தனுபவிக்க முடியும்.

இந்நூல், மிக எளிய நடையில் எழுதப்பெற்றிருக்கிறது. இந்திய மொழி எழுத்தாளர்களிடம் காணும் அநாவசியமான ஆடம்பர கற்பனைச் சரக்குகள் இந்நூலில் இல்லை. ஆதலால், இதைச் சாதாரணமானவர்களும், பாமரர்களும், எளிதாகவும் உற்சாகமாகவும் படிக்க முடியும்.

நான் இந்நூலைப் படித்து மிக மிக ரசித்தேன். ஆங்கிலம், வங்காளம் தெரியாத தமிழ்நாட்டினருக்கு இந்நூல் தாகூரின் அருட்புலமையை நன்கு விளக்கும்.

உதயபுரி,<br>
3—7—42.

## பொருளடக்கம்

படவிளக்கம்





# வரகவி தாகூர்

## 1. இசையருவி

ஒவ்வொரு மொழிக்கும் கவியரசனொருவன் இருக்கிறான். அவனால் அது புகழ் பெறுகிறது: ஹோமரால் கிரீக்கு, தாந்தேயால் இத்தாலியம், ஷேக்ஸ்பியரால் ஆங்கிலம், காளிதாஸனால் வடமொழி உலகில் புகழ்பெற்றன; வள்ளுவராலும், கம்பராலும் தமிழ் கலையுலகில் தலைநிமிர்ந்து நிற்கிறது. அதுபோலவே, பம்கிம், தாகூர் — இருவரால் வங்க மொழி புகழ்பெற்று விளங்குகிறது.

தாகூரை நினைத்தாலே, ஓர் இசையருவி ஆவேச கர்ச்சனையுடன் வந்து நமது உள்ளத்தில் பரவசமாகப் பாய்வது போலிருக்கிறது. தற்கால இந்திய மொழிகளில் கலைச் சுவை மிக்கது வங்கமே; பல சிற்றாறுகள் கலந்து அகண்ட கங்கையாக விரிவது போல, வங்கநாட்டின் கலையருவியெல்லாம் சேர்ந்து இரவீந்திர கங்கையாகப் பொங்கி ஓடியது. அந்தக் கங்கையை வங்காளம் மட்டுமன்று, பாரத நாடெல்லாம், உலகெல்லாம் அள்ளி யள்ளிப் பருகி வாழ்த்துகின்றன. தாந்தேயைப் படிக்க இத்தாலியம் கற்பதுபோலத் தாகூரைப் படிக்கவே உலகம் இனி வங்கம் பயிலும். தாகூரால் வங்க மொழி உலக மொழிகளில் தகுந்த இடம் பெற்றுவிட்டது.

வங்கம் ஒரு மாகாண மொழியாயிருந்தது; தாகூர் அதை உலகமொழி யாக்கினர். வங்க வாணியால் அவர் பாரதாத்மாவை உலகிற்கு விளக்கினர். அவர் தொட்டதெல்லாம் சாகா வரம் பெற்று விளங்கு கின்றது. ஏனெனில், அவர் வாக்கு அமரத்தன்மை பெற்ற அந்தராத்மாவினின்று பொங்கி யெழுந்தது. அஃது இயற்கை யுலகின் இன்பதுன்பக் கரை வழியே, ஆனந்தவாரிதியான பரமாத்மனைக் கலக்கவே, தடைகளைத் தகர்த்தெறிந்து ஓடுகின்றது. "என்னுள் அனந்த கானம் பொங்குக; அதன் வெள்ளத்தில் மூழ்கி என்னை மறப்பேன்; இறை வனே, எனது ஆத்மகான வெள்ளம் பொங்கிப் பணிந்தோடி, உனது மௌனவாரிதியில் கலந்து பூரணம் பெறுக!" என்று பாடுகிறுர் வரகவி.

தாகூருக்கு ஆவேசமளித்தது பழைய ரிஷிகளின் வாக்கு; அவர் கவிதைகளில் வேதக் கருத்துக்கள் பொதிந்து கிடக்கின்றன. ஓர் உதாரணம் காண் போம்: "மேலாக்கை எடுத்தெறிந்து வானரசியான உஷா கல்யாணி அதோ உலாவுகிருள்" என்பது ரிக்வேத வாக்கு. "மேலாக்கைக் கிழித்தெறிந்து, காலையரசி முழுப்பொலிவுடன் நம்முன் நிற்கிருள். அவளுடைய பொன்னொளி வாணியால் ஆகாசம் பூரிக்கிறது," என்பது தாகூர் வாக்கு. தாகூர் உண் மைக் கவி, நவீன ரிஷி; வங்காளத்தின் ஆத்ம ஞான மும், கலைச் சுவையும் அவர்வடிவாக வந்து, பாரத ஜோதியாக உலகில் விளங்கின.

---

## 2. வங்கக் கலை

காவியம், ஓவியம், நடனம் ஆகிய இம் மூன்றிலும் வங்கக் கலை உலகெங்கும் புகழ்பெற்று விளங்கு கிறது. கவீந்திரரான இரவீந்திரர், சித்திரப்புலவர் அபனீந்திரர், நடனனந்தரான உதயசங்கர் ஆகிய இம் மூவரும் உலகின் உள்ளத்தைக் கவர்ந்துள்ளனர். இரவீந்திரர் கவிவாணி உலகைத் திக்விஜயம் செய் துள்ளது. இதுகாறும் எவரும் பெருத அற்புதப் பெருமை தம் காலத்திலேயே தாகூருக்குக் கிடைத் துள்ளது. பாரதக் கலை இன்றும் தெய்வக் கதிர் பரவி விளங்குவதற்குத் தாகூர் ஓர் அறிகுறி. வங்க நாடு நவநாகரிகத்தின் தொட்டில். பாரதான்மாவை உலகறிய விளக்கிய பெருமை வங்க மாதாவிற்கு உரியது. இராஜாராம் மோஹன்ராய், மகரிஷி தேவேந்திர நாதர், இராமகிருஷ்ண பரமஹம்ஸர், சுவாமி விவேகானந்தர், ரிஷி பம்கிம், ஜகதீச சந்திர வசு, அரவிந்தர், தாகூர் முதலிய பெரியோர்களை உலகம் என்றும் மறக்கமுடியாது.

வங்கர், தம் நாட்டையும் புலவர் மணிகளையும் உலகறியக் கொண்டாடுவது தகும், தகும்! தன் னுயிர் போயினும் வங்காளி தாய்நாட்டை மறக் கவே மாட்டான். "மா, மா, வந்தே மாதரம்" என்று வங்காளி உயிர்க்கிருன். அந்தத் தாயன் பிலும், மொழிப் பற்றிலும் பத்திலொரு பங்கு தமிழருக்கு இருக்குமானல்.........!

" ஆமார ஸோனர் பாங்கலா
அமி தோமாய் பாலபாஸி
சிரதின தோமார் ஆகாஸ், தோமார் பாதாஷ்,
ஆமார் ப்ராணே பாஜாய் பாங்ஸி —"

"எமது தங்கமான வங்காளமே, உன்னிடம் அன்பு கொண் டோம். என்றென்றும், நினது வானும், நினது காற்றும் எங்கள் பிராணனில் பூங்குழலூதுகின்றன—" இந்தத் தாகூர் வாக்கை அறிந்துணராத வங்காளி இல்லை.

நாட்டைப் போலவே தனது கலைச் செல்வத்தையும் வங்காளி நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமுமாக வளர்க்கிருன். காளிதாஸன், கீத கோவிந்தம் இரண்டும் வங்கக் கலை யின் ஊற்றுக்கண்கள். இரண்டும் மேனாட்டில் புகழ் பெற்று விளங்குகின்றன. இத்துடன் காளி, இராதை, கண்ணன் ஆகிய இஷ்ட தெய்வங்களின் மேல் ஏராளமான பாட்டுக்கள் முழங்குகின்றன. சண்டிதாஸ், வித்யாபதி, இராமப்ரஸாத் முதலிய பக் தர்களின் பாடல்கள் வங்கமெங்கும் ஒலிக்கின்றன. இராமப்ரஸாத், வாரன் ஹேஸ்டிங்ஸ் காலத்தில் இருந் தவர். இவர் பாடிய சக்தி கீர்த்தனைகள் பரமஹம்ஸ ரைப் பரவசப்படுத்தின. சைதன்ய பக்தியில் எழுந்த சங்கீர்த்தனங்கள் பல. சக்தி வழிபாடும், கண்ணன் வணக்கமும் வங்க சமுதாயத்திற்கே ஒரு வீறும், அன்புக் கனலும் அளித்தன. அழகு அன்பு ஆகிய இரண்டும் வங்கர் வாழ்வின் இரண்டு உயிர் நாடிகள். இராஜாராம்மோஹன் காலத்திலிருந்து, வங்கக் கலை மேனாட்டின் புலமையுடன் கலந்து உலகளாவத் தொடங்கியது. ஈஸ்வரசந்திர வித்யாஸாகர், ஹேம சந்திர பனர்ஜி, மைகேல் மதுஸூதனன், நபின் சந்திர ஸென், ரிஷி பம்கிம் முதலிய அருங்கலைவாணர் ஆங்கி லக் கலைவிநோதர். மைகேல் மதுஸூதனர் வங்காளத் தின் மில்தன். இவர் "மேகநாத்காவியம்" பாடினூர்; அதன் நடை ஆரியம் கலந்து பழம் புலவர் நடை போலக் கம்பீரமா யிருக்கும். பம்கிம் சந்திரர் வங்க

நாட்டின் நாவலரசர். இவர்தான் பாரததேவியின் சக்தி வடிவைக் கண்டு, வந்தே மாதர கீதம் பாடி, நாட்டில் தாயன்பை யூக்கியவர். இந்த அருட்புலவர் அன்னைக்காக ஆனந்த மடம் கட்டினார். அதை விஸ்வ பாரத நிலயமாக்கி, அன்னையின் அறிவும் திருவும் உலகெலாம் விளங்கச் செய்தது இரவீந்திரரின் வரம் பெற்ற கவிவாணி.

---

## 3. துவாரகநாதர்

**தா**கூர் குடும்பம், பரம்பரையாகக் கல்விக்கும், செல்வத்திற்கும், செல்வாக்கிற்கும் பேர்போனது. 'தாகூர்' (Thakur) என்பது 'ஐயர்' என்பதுபோன்று அந்தணரை அழைக்கும் மரியாதைச் சொல். அஃது ஆங்கிலப் பழக்கத்தால் Tagore (டாகோர்) ஆனது. தாகூர் வம்சத்தினர் சாண்டில்ய கோத்திரப் பிராமணர்கள். ஜயராம் தாகூர் கும்பினி ஆதரவில் செல்வம் சேர்த்தார்; நீலமணி தாகூரே இப்போதிருக்கும் மாளிகை நிலத்தை வாங்கினார். இவர் பேரனே துவாரகநாதர். அவர் பேரனே இரவீந்திரநாதர்; துவாரகநாத தாகூர் இராம்மோஹன்ராயின் அருமை நண்பர். துவாரகநாத தாகூர் (1794-1846) பெரிய வியாபாரி, கொடையாளி, சீர் திருத்தவாதி, இராஜா ராம்மோஹன்ராய்க்கு வலக் கைபோல் உதவியவர்; இவரே பிரிஸ்டலில் அடங்கிய இராம்மோஹனுக்குச் சமாதி கட்டினார்; அவருக்குப் பிறகு பிரம்ம சமாஜத்தை நடத்தினார். இவர் அசல் ஆங்கில முறையில் 'யூனியன் பாங்கும்', 'கார் அண்ட் தாகூர்' கம்பெனியும் வைத்து ஏராளமான பொருள் செய்து தாராளமாகச் செலவிட்டார்; கல்கத்தாவில் ஹிந்து காலேஜ், வைத்தியக் கல்லூரி இரண்டிற்கும் ஏராளமான பொருள் தந்து, அவை

நன்ருக நடக்கச் செய்தார்; சில வைத்திய மாண வரைத் தம் செலவில் சீமைக்கு அழைத்துச் சென்று படிப்பித்தார். இவர் கறுப்புச் சட்டத்தை வீழ்த்தி ஞர்; அச்சுச் சட்டத்தின் கடுமையை நீக்கினர்; ஜனவுரிமைக்காகக் கும்பினியுடன் போராடினர்; மூடக்கொள்கைகளே ஒழிக்க நம்மவருடன் போராடி வென்ருர். உடன்கட்டை யேறும் கொடுமையை வேரோடொழிக்க இவர் இராம்மோஹனுடன் அல் லும் பகலும் பாடுபட்டார். வைதிகர் கூச்சலே மதிக் காமல் காலத்திற்கேற்ற சீர்திருத்தங்களேச் செய்தார். 1841-ல் இவர் இங்கிலாந்து சென்ருர்; பக்கிங்ஹாமில் விக்டோரியா இராணியுடன் விருந்துண்டார். கில்டு ஹாலில் பிரபுக்கள் இவரை வரவேற்றனர்; கும்பி னித் தலேவர் உபசரித்தனர். பிரெஞ்சு மன்னர் லூயி ஃபிலிப், பெல்ஜியம் மன்னர், போப் முதலி யோர் இவரை நல்வரவேற்றனர். 1842-ல் இவர் கல்கத்தாவுக்கு வந்தார்; நம்மவரிடையே ஆங்கிலக் கல்வி பரவத் தொண்டு செய்தார். 1846-ல் இவர் மீண்டும் சீமை சென்ருர்; அங்கேயே இறந்தார். கென்ஸெல் கிரீனில் இவர்தம் ஈமச்சடங்குகள் நடந் தன. ஏராளமான ஆங்கிலச் செல்வரும் அறிஞரும் வந்திருந்தனர். இவருடைய சீரும், சிறப்பும், அற மும், அன்பும் கண்டு, இவரை "Prince" (இளவரசன்) என்று எல்லாரும் அழைத்தனர். பெண்டிங்கு, மெட்காஃப், ஆக்லண்ட் முதலிய பிரபுக்கள் இவரை நன்குமதித்தனர். இவர் ஒரு பெரிய அரண்மனே கட்டி அதற்கு "ஜோர சங்கோ" என்று பெயரிட் டார். அதிலேதான் தாகூர் குடும்பம் செழித்தது, அந்தத் தெருவே துவாரகநாதர் தெருவானது.

---

## 4. மகரிஷி தேவேந்திரநாதர்

துவாரகநாதருக்குப் புதல்வர் மூவர் பிறந்தனர்; மூத்தவரே தேவேந்திரநாதர் (1817-1905). இவர் இராம் மோஹன் பள்ளிக்கூடத்திலும், ஹிந்து கல்லூரியிலும் படித்துக் கல்வியிற் சிறந்தார்; சிலகாலம் தந்தையின் வியாபாரத்தைக் கவனித்தார். ஆனால், இவர் உள்ளம் கடவுளையே நாடியது. ஒரு நாள் "எவர் பொருளையும் கவராதே; எங்கும் நிறைந்த கடவுளையே கருது!" என்ற உபநிஷத்வாக்கு எழுதிய துண்டுக்காகிதம் காற்றி லடித்துவந்து இவர் காலைக் கொஞ்சியது. அதை எடுத்துப் பார்த்ததும் இவர் மனம் 'கார் தாகூர் கம்பெனி' வியாபாரத்தை விட்டு, இறைவனை நாடியது. அளவற்ற செல்வமிருந்தும், அதில் பற்று வைக்காமல் இவர் வேதாந்த நூல்களைப் படித்துத் தியானபரரா யிருந்தார். இவரை நண்பர் "மகரிஷி" என்றழைத்தனர். 1839-ல் இவர் தர்க்க போதினி என்னும் சங்கமும், பத்திரிகையும் நடத்தி உபநிஷத் பிரசாரம் செய்தார். 1828-ஆம் ஆண்டு இராம்மோஹன் பிரம்ம சமாஜம் கண்டார். துவாரக நாதர் அதை ஆதரித்தார். 1833-ல் இராம்மோஹன் சீமையில் இறந்தார். பிறகு பிரம்மசமாஜம் ஆட்டம் கொடுத்தது. அதை மீண்டும் நிலைநிறுத்தினவர் தேவேந்திரநாதர். 1850-ல் இவர் வேதக்கொள்கைகளில் உசிதமானவற்றைச் சேர்த்து "பிரம்ம தர்மம்" என்ற அரிய நூல் எழுதினர்; "ஆத்ம ஜீவனம்" என்ற பெயரால் தம் சொந்த அனுபவங்களை எழுதினர். இவர் எழுதிய பிரம்ம நூல்களுக்கு நல்ல மதிப்புண்டு. சமாஜத்தில் இவர் ஆவேசமாகப் பேசினர்.

உலக விவகாரத்தைக் கவனிக்காததால் இவர் குடும்பம் கடன்வாய்ப்பட்டது. தந்தைக்குப் பிறகு யூனியன் பாங்கு முறிந்தது ; கோடி ரூபா நஷ்டம்! உள்ள நகை நட்டு, நிலம் எல்லாம் விற்று இவர் பைசா பாக்கியில்லாமல் கடனை அடைத்து எளிய வாழ்க்கை வாழ்ந்தார். இவர் சிலகாலம் இமயமலையின்கண் தனிமையில் தியானம் செய்தார். 1863-ல் இவர் தம் தியான சாதனங்களுக்காக போல்பூரில் 6 ஏகர் நிலம் வாங்கி சாந்தி நிகேதனம் கண்டார். 1875-ல் இவர் மனைவி சாரதாதேவி இறந்தார். தேவேந்திரர் தியான வாழ்வில் ஊன்றினர்.

---

## 5. இரவி உதயம்

தேவேந்திரருக்குப் பிறந்த குழந்தைகள் பதினைந்து. முதலில் பெண் பிறந்து இறந்தது. பிறகு துவிஜேந்திரநாதர், சத்யேந்திரநாதர், ஹேமேந்திரநாதர், வீரேந்திரநாதர், ஜோதீந்திரநாதர், புண்யேந்திரநாதர், சோமேந்திரநாதர் என்னும் ஆண்மக்களும், ஸௌதாமினி, ஸுகுமாரி, ஸரத்குமாரி, ஸ்வர்ணகுமாரி, வர்ணகுமாரி ஆகிய பெண்மக்களும் பிறந்தனர். பதினான்காம் பிள்ளையே நம் கவியரசர் இரவீந்திரநாதர். அவருக்குப் புதேந்திரநாதர் என்னும் தம்பி பிறந்து இறந்து போனான். 1928-ஆம் ஆண்டுடன் சகோதர சகோதரிகள் காலம் முடிந்தது. இரவீந்திரரே 1941 வரையில் வாழ்ந்தார்.

துவாரகநாதர் தெருவில் 6-ஆம் எண்ணுள்ள மாளிகைக்கு 'ஜோரசங்கம் வீடு' என்று பெயர் வழங்குகிறது. அந்த விசாலமான மாளிகையில்

தான் தாகூர் குடும்பம் இன்றும் வசிக்கிறது. அதிலே தான் நமது இரவி உதித்தது. ஆங்கிலக் கணக்குப் படி *7-5-1861*, செவ்வாய்க்கிழமை காலை $2\frac{1}{2}$-3-மணிக் கிடையே தாகூர் பிறந்தார். வங்கக் கணக்கின்படி சகாப்தம் *1783*, வைசாகம், திங்கள் 25உ கிருஷ்ண பட்சம், திரயோதசி, இரேவதி நட்சித்திரம் மீன லக்னம், சூரியன் சுக்ரன் புதன் ஆகிய மூன்று கிரகங்கள் உச்சமாயிருக்கும்போது, சுக்கிர திசை யில் தாகூர் பிறந்தார். அவரது இராசிச் சக்கரம் அடியில் வருமாறு :—

| | | |
|---|---|---|
| செ<br>கேது | சூரியன்<br>புதன்<br>சுக்கிரன் | ல<br>சந் |
| வியாழன் | | |
| | | ராகு |

குறிப்பு: இச் சக்கரம் வங்காள முறையை யொட்டி வகுக்கப் பெற்றது. இதில் சனி இடம் பெறாதது குறிப்பிடத்தக்கது.

---

## 6. இளங்கதிர்

**தா**கூர் குடும்பமே கலைக்குடும்பம்; உண்ண வுடுக்கத் தட்டில்லை; அவரவர் தம்மட்டிற்குச் சம்பா தித்தனர். ஆனால், பாட்டனாரின் தொழில்வளமில்லை;

பணஞ் சுரண்டும் திறமையுமில்லை. தகப்பனர் நீரிற் படகுபோல் உலகில் ஒட்டாமல் தியானபரராயிருந் தார். பிள்ளைகளும் அன்னவிசாரம் சொர்ண விசார மில்லாமல், கல்வியும் கலையுமா யிருந்தனர். மூத்தவர் துவிஜேந்திரநாதர் நாவலர். அடுத்தவர் ஜோதீந்திரர் ஓவியர்; இவர் சுதேசிக்கப்பலும் நடத்தினர்; கட்டி வரவில்லை. அடுத்தவர் ஐ. ஸி.எஸ். தாகூரின் மைத்துன ரான அபனீந்திரரும், கஜேந்திரரும் புகழ்பெற்ற சித் திரப்புலவர்கள். குடும்பத்தில் எல்லாருக்கும் பாட்டு வரும். காவியம், ஓவியம், பாட்டு, நடனம், நாடகம், வேதாந்தம், இலக்கியம்—இவற்றுல்அத்திருமகள்விலா சம் கலைமகள் விலாசமா யிருந்தது. இவர்களை ஈன்ற தந்தை மகரிஷி; தாய் சாரதாதேவி. வீடும் சாரதா நிலயந்தான். அதன் கலைமணத்தில் ஊறிவளர்ந்த நமது இரவியும் கவியாக மலர்ந்ததில் வியப்பில்லை. தாகூருக்கு இரண்டு வயதிருக்கும்போது தகப்பனர் போல்பூரில் வாங்கிய நிலமே, சாந்திநிகேதனமாகி விசுவபாரதியாக வளர்ந்தது.

எட்டாம் வயதில் (1869), தாகூரை ஓரியண்டல் ஸெமினரியில் படிக்கவைத்தனர். அங்கே இரவீந்திரர் சிலமாதங்கள் பயின்றுர்; பிறகு கல்கத்தா நார்மல் ஸ்கூலில் படித்தார். பிள்ளைக்குப் பள்ளிப்படிப்பு ஏற வில்லை. தந்தை வீட்டு உபாத்தியாயர்களை நியமித்தார். அவருள் விருஜபாபு ஆங்கில உபாத்தியாயர். ஆரியம், ஆங்கிலம், வங்கம், கணிதம், சரித்திரம், பூகோளம், பௌதிகம், இரசாயனம், உடல்நூல் முதலியவற்றை யும் தாகூர் கற்றுர். இவற்றுடன் இரவீந்திரர் சித்திரமும், சங்கீதமும் பயின்றுர்; கசரத், குஸ்தி போன்ற தேகப் பயிற்சியும் செய்தார். கதை,நாடகம்,

ஆடல் பாடல் என்றால் தாகூருக்குப் பிரியம்; புத்தகப் படிப் பென்றால் அப்படி யிப்படித்தான்! ஒன்பது வயதில் தாகூர் வங்கக் கலாசாலையில் சேர்ந்தார். படிப்பேறவில்லை; ஏனோதானோ வென்று ஓராண்டு கடனைக் கழித்துப் பள்ளிக்கூடத்தை விட்டுவிட்டார்.

---

## 7. கட்டுப்பாடு பிடிக்கவில்லை

"என்மேல் பாடங்களைச் சுமத்தினர்; என் சகோதரன் கண்டிப்பாகப் பாடம் கறந்துவிடுவான். உபாத்தியாயர் விட்டாலும் அவன் சும்மா விடமாட் டான். காலை முதல் இரவு வரையில் செக்கரைப்பது போல் புத்தகப் படிப்புத்தான். காலை பத்து மணிக்குக் குதிரை சாரட்டு வரும்; என் அந்தமானுக்கு (பள் ளிக்கூடத்திற்கு)ச் சென்று தொலைப்பேன். பத்து முதல் நான்கு வரையில், எமகண்டந்தான்! நாலரை மணிக்கு வீடு திரும்புவேன்; அங்கே கரடி வாத்தி யார் வந்திருப்பார். ஒரு மணி நேரம் பார் (Bar) விளை யாடுவேன், உடற்பயிற்சி செய்வேன். பிறகு சித்திர வாத்தியார் வருவார். இப்படியே நாட்கள் சுவை யற்றுச் சப்பென்றிருந்தன" என்று தாகூர் தமது வரலாற்றிற் குறிக்கிறார். இத்துடன் அவர் சவகர்கள் காவலில் இருந்தார்; அவர்கள் இட்ட கோட்டைத் தாண்டிச் செல்லமுடியாது.

வீட்டில் பல்லக்குண்டு: அதில் புகுந்தமர்ந்து பையன் சிந்தனையில் ஆழ்ந்திருப்பான். வீட்டுத் தோட்டமே அவன் எல்லை. பரந்த வுலகைப் பார்க்க அவன் உள்ளம் துடிக்கும். இந்த ஆர்வம் டாக்கர்

(Post Office) என்ற நாடகத்தில் நன்ருகக் காண்கிறது. அதன் சுருக்கம் வருமாறு :—

மாதவ் செல்வன்; அவன் ஒரு பையனைத் தத்தெடுத்துக் கொள்ளுகிருன். பையன் பெயர் அமலன். அமலனுக்கு ஏதோ நோய் வருகிறது; டாக்டர் வெளியே தலைநீட்டக் கூடாதென்று ஓர் அறையில் அவனை அடைத்துப் போடுகிருர். அமல் உள்ளம் பரந்த வுலகைப் பார்க்க விரும்புகிறது.

"அதோ கடலை கொறிக்கும் அணிலாயிருந்தால் சுதந்தரமாக உலாவுவேன். அதோ அந்தக் குன்றைத் தாண்டிச்செல்ல என் மனம் துடிக்கிறதே! அந்தக் குன்று கையை உயர்த்தி வானை அழைப்பது போலிருக்கிறதே! அந்த ஆற்றைத் தாண்டி நடக்க மாட்டேனு? மேன்மேலும் சென்று, இயற்கை யுலகைக் காணமாட்டேனு?" என்று அமல் முறையிடுகிருன்.

மாதவ்: சை, வெளியே தலைநீட்டக் கூடாது!

அமல்: ஏனும்?

மாதவ்: உன் உடம்புக்கு ஆகாதென்று டாக்டர் சொல்லுகிருர்.

அமல்: டாக்டருக்கு எப்படித் தெரியும்?

மாதவ்: அடா, அவ்வளவு புத்தகம் படித்தவருக்குத் தெரியாதா?

அமல்: புத்தகம் படித்தால் எல்லாம் தெரிந்து போகுமோ?

மாதவ்: இதுகூடத் தெரியாதா?

அமல்: நான் முட்டாள். புத்தகம் படிப்பதில்லை.

மாதவ்: கவனி! நிரம்பப் படித்தவர்கள் வீட்டை விட்டு வெளியே போகமாட்டார்கள்.

அமல் : மெய்தானா?

மாதவ் : இரவும் பகலும் அவர் கண் புத்தகத்தி லேயே இருக்கும். வெளியே போக நேர மேது? நீயும் பெரியவனானால் படிக்கப்போகிறாய். அப்போது தெரியும்; நீ பெரிய பெரிய புத்தகங்களைப் படித்துக்கொண்டு வீட்டுடன் இருப்பாய். எல்லாரும் உன்னைக்கண்டு ஆச்சரியப் படுவார்கள்.

அமல் : ஐயோ மாமா, அப்படியானால் எனக்குப் படிப்பு வேண்டா! உங்கள் காலில் விழுந்து கெஞ்சுகிறேன். நான் புத்தகத்திலேயே நாட்டங்கொள்ள மாட்டேன்; வெளியே சென்று உலகைச் சுற்றிப் பார்ப்பேன்.

மாதவ் : வெளியே காலெடுத்து வைக்கக் கூடாது; உன்னை யாராவது பிடித்துக்கொண்டு போய்விட்டால் என்ன செய்வாய்?

அமல் : நன்றாயிருக்குமே! அப்படி ஒருவரும் என்னைக் கொண்டுபோகவில்லையே; எல்லாரும் என்னை வீட்டிலடைபட்டுக் கிடக்கச் சொல்லுகிறார்களே!

* * *

அறையிலேயே பையனை அடைத்து மாதவ் செல்லுகிறான்; பையன் ஜன்னல் வழியாகத் தெருவைப் பார்க்கிறான். தெருவில் தயிர்க்காரன் வருகிறான். அமலன் "தயிரோ தயிர்!" என்று கூவித் தயிர்க்காரனை அழைத்து வம்பளக்கிறான். அவனுடைய கிராமம், மாடுமேயும் புலன்கள், ஆற்றிலிருந்து பெண்கள் தண்ணீர் சுமந்துவரும் காட்சி, எல்லாவற்றையும் ஊகிக்கிறான். "தயிர்க்காரா, டாக்டர் என்னை இங்கே அடைத்துப்போட்டிருக்கிறார். அவர் விடுதலை செய்ததும் என்னை உன் கிராமத்திற்கு

அழைத்துச் செல்லுகிருயா ?" என்று ஆவலாகக் கேட்கிருன்.

தயிர்க்காரன்: தங்கமே, சந்தோஷமாக அழைத் துச் செல்லுகிறேன்.

அமல்: எனக்கும் தயிர் கூவக் கற்றுக்கொடுக் கிருயா ? நானும் தெருத் தெருவாக நடந்து தயிர் விற்கிறேன்.

தயிர்க்காரன்: தங்க ராசா, உனக்கேன் அந்தத் தலைவிதி ? நீ பெரிய பெரிய புத்தகங்கள் படித்துப் படிப்பாளியாவாய்.

அமல்: ஐயோ வேண்டா ! நான் புத்தகப் பூச்சியாக மாட்டேன். வானக் கருடன் போலே "தயிரோ தயிர்" என்று கூவித் தெருச் சுற்றுவது எவ்வளவு இன்பம் !......"

குழந்தை யுள்ளம் இருந்தால் தனது தொழிலை யும் மகிழ்வுடன் செய்யலாம் என்றுணர்ந்து தயிர்க் காரன் செல்லுகிருன்.

பிறகு காவற்காரன் வருகிருன். அவன் "டிங் டாங்" என்று யணியடிப்பதை அமல் மெச்சுகிருன். எதிரே ஒரு கொடி வீடு தெரிகிறது; "அஃது என்ன ?" என்று கேட்கிருன் அமல்.

காவற்காரன்: அதுவே அரசன் தபாலாபீஸ்.

அமல்: அரசன் இங்கே கடிதம் அனுப்புகிருனு என்ன ?

காவற்: ஆம். உனக்குக்கூட ஒரு கடிதம் வரும்.

அமல்: எனக்கா, கடிதமா? நான் சின்னப் பயலாயிற்றே......

காவற்: அரசன் சிறுவருக்குச் சின்னக் கடிதம் அனுப்புவான்.

அமல் : அப்படியா? உனக்கெப்படித் தெரியும்?

காவற் : அதற்காகத் தானே உன் ஜன்னலுக்கு நேரே தபாலாபீஸ் இருக்கிறது.

அமல் : எனக்கு எப்போது கடிதம் வரும்? யார் கொண்டு வருவார் ?

காவற் : அரசருக்குத் தபாற் சேவகர்கள் பலர் உண்டு; அவர்கள் வில்லே மாட்டிக்கொண்டு ஊரைச் சுற்றுவது தெரியாதா ?

அமல் : அவர்கள் எங்கே செல்கிருர்கள் ?

காவற் : நாடெங்கும், வீட்டுக்கு வீடு செல்வர்.

அமல் : ஆ, நானும் பெரியவனுனதும் அரசனது தபாற் சேவகனுயிருப்பேன்.

காவற் : சை சை, உனக்கேன் அந்த விதி? மழை வெய்யில் பாராமல் வீட்டுக்கு வீடு அலேந்து கடிதம் தர வேண்டும் — சிரமம் !

அமல் : ஆ, அதுதான் வேண்டும்......நான் அரசனுக்குத் தபாற்காரனுயிருப்பேன்; அவன் செய்தியை வீடுதோறும் கொண்டு கொடுப்பேன்......

என்று அமல் துள்ளிக் குதிக்கிருன்.

குழந்தைகளே அடைத்துப் போடாமல், உற்சாகமாக ஓடியாட விட்டாலே கட்டில்லாமல் உடலும் மனமும் செழித்து வளரும் என்று தாகூர் தமது சரித்திரத்தில் சொல்லுகிருர்.

---

## 8. தந்தையுடன்

'தபாலாபீஸ்' நாடகத்தில் வரும் அமலனைப் போன்றே இளந்தாகூரும் பங்களாத் திண்ணையில் அமர்ந்து முன்னே செல்லும் மனிதரியல்பைக் கவனிப்பான். எதிரே ஏழைக் குடில்கள் இருந்தன; அங்கு ஏழைகள் படும்பாட்டை அவன் கண்டுருகுவான். அருகே ஒரு குளம் உண்டு; அதில் நீராடிச் செல்வோரை அவன் கவனிப்பான்; அவர்கள் பேசும் வார்த்தைகளைக் கேட்பான்; சிந்திப்பான் ; பங்களாத் தோட்டத்தில் சுற்றித் திரிவான். வீட்டில் பாட்டு, கதை, கூத்து நடக்கும். எல்லாவற்றையும் அவன் பேசாமல் பார்த்துக் கொண்டிருப்பான். இரபீன் கூச்சமுள்ள பையன்; தமையனார் ஜோதீந்திரர் மனைவியிடந்தான் நெருங்கிப் பழகுவான். அவளே அவனை அன்புடன் பேணினாள். ஜோதீந்திரர் தாகூரிடம் மிகவும் அபிமானம் வைத்திருந்தார் ; அவன் படிப்பு, நடையுடை, பேச்சு வார்த்தை யெல்லாவற்றையும் கருத்துடன் கவனித்தார். வீட்டில் கிளி, மைனா, புல்புல், உள்ளான் முதலிய பறவைகள் கூண்டில் இருக்கும். அவற்றிடம் இரபீனுக்கு வெகு பிரியம் ; பறவைப் பாட்டில் அவன் சொக்குவான்.

தேவேந்திரர் தம் அருமை மகனை அடிக்கடி போல்பூர் சாந்திநிகேதனுக்கு அழைத்துச் சென்றார்; ஆரியம், ஆங்கிலம், சோதிடம் — மூன்றும் பயிற்றினார். ஆதிப் பிரம்மசமாஜி ஹேமேந்திரநாத் வித்யாரத்தினரும் தாகூருக்கு ஆரியம் கற்பித்தார். தந்தையின் உபநிஷத் ஞானத்திலும், தியான சாதனத்திலும் தாகூரின் உள்ளம் ஊறிப் போனது. குமார சம்பவம்,

சாகுந்தலம், மேகதூதம் ஆகிய காளிதாஸ வாக்குகள் தாகூர் வாணியை வளர்த்தன. 1873-ஆம் ஆண்டு தாகூருக்குப் பதினேராம் வயது நிரம்பிப் பத்துமாதம் இருக்கும்போது, உபநயனம் நடந்தது. தாகூர் காயத்திரியைக் கருத்துடன் உபாசித்தான். இதன் பிறகு தாகூர் தந்தையுடன் வட இந்தியாவில் யாத்திரை செய்தான். அமிர்தசரசில் ஒரு மாதம் இருந்து, இருவரும் இமாலயத்தில் தல்ஹௌஸியில் நான்கு மாதம் தங்கினர். அங்கே தந்தையின் அமைதியான தியான வாழ்க்கை மைந்தனுக்கும் பிடிபட்டது. அத்துடன் அவன் சமஸ்கிருத இலக்கணமும், ஆங்கிலமுங் கற்ருன்.

அதுகாறும் கங்கைச் சமவெளியின் காட்சியில் களித்த தாகூருக்கு, மலைக்காட்சி புதிய இன்பமளித்தது: கம்பீரமான பனிமலைத் தொடர்; வானேங்கிய மரங்கள் அடர்ந்த காடுகள், நிஷ்டையிலிருக்கும் ரிஷியின் திருவடியில் விளையாடும் குழந்தைபோலப் பனிமலையில் மழலை பேசித் தவழும் அருவிகள், மலைக்காட்சியில் நிறைந்த சாந்த வனப்பு — இவையெல்லாம் இளந்தாகூரைக் கவர்ந்தன. வீட்டுக் கட்டுப்பாட்டை வெறுத்த தாகூர், மலைக்காட்சியில் சுதந்தரமாக உலாவித் திரிந்தான். தேவேந்திரர் மகனுக்கு எல்லாச் சுதந்தரமும் அளித்தார். இதற்குள்ளாகவே தாகூர் பல பிஞ்சுக் கவிகள் புனைந்தான்; அவற்றையெல்லாம் அவன் தன் ரிஷித் தந்தையிடம் பாடிக் காட்டினன்.

இமாலயத்திலிருந்து திரும்பியதும், 1874-ல் தாகூர் கல்கத்தா ஃஜேவியர் கலாசாலைக்குச் சென்று வந்தான்.

2

தாகூருக்குப் பதின்மூன்று வயது நிறைந்து பத்து மாதம் (8-3-1875). அன்னை சாரதா தேவி உலக வாழ்வினின்றும் விடைபெற்றுக் கொண்டாள். வீட்டில் சில கடுஞ்சாவுகள் நேர்ந்தன; வாழ்வின் இயல்பு தாகூருக்குத் தெரிந்தது.

---

## 9. இயற்கை யின்பம்

இயற்கை யழகில் தாகூர் கவலை, துயர், கட்டுப்பாடுகளை மறந்தார்.

"காலையின் திருமுகத்தைக் காணும் போதெல்லாம், ஒரு புதிய பொற்கடிதத்தைக் கொண்டு நாள் என் முன் நிற்கும். அதைத் திறந்து பார்க்கையில் இதுகாறும் கேட்டிராததோர் அதிசயச் செய்தி கிடைக்கும். காலையின் அழகைக் காண, உடனே உடை மாட்டிக்கொண்டு புறப்படுவேன்" என்கிருர் கவிஞர் தம் குறிப்புக்களில். வீட்டிற்கு அருகே ஒரு தோட்டமும், அதற்கப்பால் கங்கையும் உண்டு. காளிதாஸனை ஆவேசப்படுத்தியது கம்பீர மலைக் காட்சி. கம்பனை ஆவேசப்படுத்தியது காவிரியின் காட்சி. தாகூரை ஆவேசப்படுத்தியது கதிர்களை அணைந்து தங்கமயமாக விளங்கும் கங்கையின் காட்சி. "எங்கேயாவது ஓடிப்போனால், எவ்வளவு ஏகாந்தமாய் இருப்பேன். கட்டுப்பட்ட வாழ்வில் அமைதி காணவில்லையே!" என்று துடிப்பார் நம் கவிஞர்; வெளியே சென்று, மாந்தர் மனப்பான்மையை அறியப் பதறுவார்.

"ஷ்ருதே ஹமாரா க்ரந்தன் கரே
மானவ ஷ்ருதயே மிளிதே,
நிகிலேர் ஸாதே மஹா ராஜபதே
கேலிதே திவாஸ நிசிதே!"

"மானிட இதயங்களுடன் கலந்து உறவாட என்மனம் அவாவிக் கூவுகிறது; இரவும் பகலும் பெரிய ரஸ்தாக்களில் உலகுடன் விளையாட அவாவுகிறது" என்கிறார் தாகூர். ஆம், உண்மை; இயற்கையின் அழகில் இன்பம் புன்னகைக்கிறது. கவியுள்ளம் அந்தப் புன்னகையை அள்ளிப் பருகும். படைப்பின் உண்மை, வாழ்வின் உண்மை — எல்லாம் இன்பமே; நாம் காணும் ஒவ்வொன்றின் உள்ளும் இன்பமே; அந்த இன்பமே இயற்கையின் முகத்தில் வனப்புற விளங்குகிறது; நாம் கண்ணால் காணும் இன்பங்கள் எத்தனை, பாருங்கள்!

"நீல வான்; அதற்கு எல்லையில்லை; நீலக் கல்லால் நகாசு செய்த வட்டக் கோபுரம்போல் விளங்குகிறது; நாம் காணும் பொருள்களில் மிகப் பெரிது, இரவும் பகலும் இருந்தபடி இருப்பது, மாறாமல் மறையாமல் காட்சியளிப்பது அந்த அகண்ட வானம். அந்த வானத்தை நாளெல்லாம் பார்த்துக்கொண்டேயிருந்தாலும் சலியாது; குழந்தைப் பருவமுதல் அதைப் பார்க்கிறேன்; அதுவே எனது விரிவான அறிவு நூல்; இன்னும் அதன் காட்சி சலிக்கவில்லை; அதில் தோன்றும் அற்புதங்கள் பல!"

"அருணோதயத்தைப் பாருங்கள்: இன்பம் பவள வாய் திறக்கிறது, பசும்பொன் முகம் காட்டுகிறது. பொன்னொளி வர வர அதிகமாகிறது; திடீரென்று ஓர் இந்திரஜால நகை குலுங்குகிறது! அருணசுந்தரி

யின் பவளவாய் மூரலைப்போலச் செங்கதிர் உதிர்கிறது. அதைவிட அழகு உலகில் உண்டா? அதைவிட இன்பக் காட்சியுண்டா? அதைக் காணாத கண்ணும் கண்ணோ! சூரியன் வானத் திருமகன்! அவன் நம்மை ஆளுகிறான். வேதம், ஆகாசத்தையே பிரமமாகவும், சூரியனையே ஞானவொளியாகவும் போற்றுவது தகும். சூரியன் உலகச் சிற்பி; அலைகளை ஆவியாக்கி அவனே மேகங்களைக் கூட்டுகிறான்; காட்டானைக் கூட்டங்கள்போலக் கார்மேகங்கள் நெருங்கிப் பரவும் காட்சியில் எவ்வளவு இன்பம் இருக்கிறது! அக் காட்சியைக் கண்டதும் 'எனக்குத் தோகையில்லையே!' என்று வருந்துவேன்; தோகையிருந்தால் நானும் மயிலுடன் ஆடுவேன்! கார்மேகத்தில் மின்னல்கள் விளையாடுகின்றமை ஆகா, எவ்வளவு இன்பம்......! அஃதன்றோ இயற்கையான பரதநாட்டியம்! அதைப் பார்த்துக்கொண்டேயிருந்தால் போதும்! ஆயிரம் நாட்டியக் கச்சேரிகளைவிட இன்பமளிக்கும்! அந்த மின்னல் நடனத்திற்குத் தடதடவென்று முழவுகொட்டும் இடி உலகிற்கு ஒரு செய்தி கொண்டுவருகிறது: "உலகே வருந்தாதே; உனது மனங்குளிர அருள்மழை பொழியும்" என்கிறது. 'ஹரி ஹர' என்று இடிமின்னல் அதிர்கிறது! 'ஜோ' வென்று மழை பொழிகிறது. அஃது எனக்கு "ஓம், ஸோஹம்" என்னும் வேதாந்த மந்திரத்தை உபதேசிக்கிறது. மழை பொழியும் காட்சியே காட்சி! நல்ல மழையில் கவலையெல்லாம் கரைந்தோட நின்று, "ஸோஹம்" (நானவன்) என்று பாடிக் கூத்தாடும் ஆனந்தம் வேறெதிலுமில்லை. (ஜலதோஷம் பிடித்தவருக்கு இதைச் சொல்லவில்லை.)"

"வான்மழையிற் குளித்தால் உடல், உளம், உயிர் சிலிர்க்கும்! அந்த இன்பச் சிலிர்ப்பைத் தாங்கமாட்டாத மனிதன் மழைக்குப் பயந்து வீட்டில் பதுங்கும் போது எனக்குச் சிரிப்பு வருகிறது! மழையின் இன்பத்தை அனுபவிக்கும் பயிர்களைப் பாருங்கள்! பயிர்களின் பசுமுகத்தில் அழகின்பம் குலுங்கும். திருமகளே பசுமேனி பூண்டு மலர்நகை பூத்து விளங்குகிருள். அதிலும், மழைக்குப் பின் எழும் காலைத் தங்கவெயிலில் பசும் பயிர்களைப் பார்க்கவேண்டும்! ஆ! அந்த மாதிரி அருள் மழையால் நமது உயிர் மகிழாதா! அந்த இன்பத்தை அனுபவிக்கத் தெரியாமல் மனிதன் தயங்குகிருன்! உடல் உடலை அணைவதில் அவன் மோகங்கொண்டு, ஆசை நிறைவேருமல் மனப் பிணியும் உடற்பிணியும் சுமக்கிருன்!"

"காலைப் பசும் பயிர்களைக் கொஞ்சிவரும் அழகையும், அதைப் பாடும் தென்றலையும் அள்ளி அணைய மனிதனுக்குத் தெரியவில்லையே! கவிகள் வாழ்க! அவர்கள் தமது சூட்சும தேகத்தால் அந்த இயலின்பத்தை அணைகின்றனர்."

"வான்மழை மலைமேல் பொழிகிறது. வானம் கோவில் விதானம். மலை சிவலிங்கம். மலைமேல் மழை பொழியும்போது தேவர்கள் சிவலிங்கத்திற்கு மண்டலாபிஷேகம் செய்வதுபோலக் காண்கிறது; கோயில் குருக்கள் பாலும் தேனும் இளநீரும் கலந்து செய்யும் அபிஷேகத்தை எல்லாரும் கிட்டநின்று பார்க்க முடியாது! சிலர் வெளியேதான் நிற்கவேண்டும்; சிலர் கோவிலுக்குள்ளே வரமுடியாது. (இனி முடியும்.) வான்மழை மலைகளுக்குச் செய்யும் அமுதாபிஷேகத்தைக் கண்ணுள்ளவர்களெல்லாம் கால்பைசாச் செல

வில்லாமல் காணலாம்! அவர்கள் தலையை நீட்டி ஞலும் அபிஷேகம் நடக்கும். அந்த அபிஷேக நீர் ஊற்ருகப் பொங்குகிறது; அருவியாக ஓடுகிறது. அஃது ஓம் இசைக்கிறது. வீரக் குதிரைகள் தடதட வென்று போர்க்களத்திற்குப் பாய்ந்து செல்வது போல, அருவி தட தடவென்று பொழிந்து உலகப் போர்க்களத்திற்கு வருகிறது; அது கருணையாழ் மீட்டி வருகிறது. நம் போராட்டங்களை ஒழிக்க வருகிறது. அந்த அருவி வராவிட்டால் நாம் உண வின்றித் தவிப்போம். கருணையருவி பயிர்களை ஊட்டி வளர்க்கிறது; பயிர்கள் உயிர்களை ஊட்டி வளர்க் கின்றன; பயிரின்பத்தால் உயிரின்பம் செழிக்கிறது; உயிரின்பத்தால் உலகின்பம் செழிக்கிறது; உயிருல கில் எத்தனை இன்பக்காட்சிகள் காண்கின்றன!"

"மலர் வளத்தைக் கண்டாலே போதும். இன்பம் தளிர்க்கும்; நமது மனவண்டு அந்த மலரழகில் தேனுண்ணும். சிறகுள்ள இசைக் கலைகள்போற் புட்கள் இங்கும் அங்கும் தாவிப் பறக்கும் இன்பத் தைப் பாருங்கள், பாருங்கள்! நம்மைவிட அவை கவலையற்றுப் பாடுகின்றன! இரவில் நம்மைவிட அவை கவலையற்று மரக்கிளைகளில் உறங்குகின்றன; கிழக்கு வெளுத்ததும் புட்களுக்கு எப்படித்தான் தெரியுமோ; சோம்பல் நெளிக்காமல் அவை எழுந்து, 'ஜிவ்' என்று பறக்கின்றன; 'சிவ சிவ' என்று பாடு கின்றன. அப்போது அவை காட்டும் இன்பத்தில் பத்தி லொருபங்காவது மானிடனுக் குண்டா, உண்டா! உண்டு; ஆனால்.........இல்லை! இது காறும் சொன்ன இன்பத்தைவிட மனிதன் பெரிய இன்பம் அடையமுடியுமா? முடியும். அவனது

உண்மை வடிவம் இன்பமே! அந்த இன்பத்தை மன மேகம் மூடியிருக்கிறது; மேகத்தை ஞானமின்னலால் பிளந்தெறிந்து உள்ளே தேடினால் இன்பம் — பேரின்பம் — காட்சியாகும். இயற்கையின் உள்ளத்தில் ஒளிரும் இந்த இன்பத்தை அனுபவிப்பவர் கவிகள்."

---

## 10. கவி மலர்ச்சி

தாகூருக்குக் கவிதை தந்தது இயற்கையே. சூரியோதயத்தைக் கண்டு அவர் பரவசப்படுவார். தாகூர் சுயேச்சையாகக் கவிகள் பாடிவந்தார்.

பதினொரு வயதாகிப் பத்துமாதம்; தாகூர் பிருதிவிராஜ் பராஜயம் (பிருதிவிராஜன் தோல்வி) என்னும் நாடகம் எழுதினார். "தத்வபோதினி" என்ற பத்திரிகையில் "அபிலாஷை" என்ற சிறுகவி வெளிவந்தது; "12 வயதுப் பையன் எழுதியது" என்று மட்டும் பத்திராதிபர் கவிதையின் அடியில் குறித்தார். அக்காலம் ஸ்ரீ அரவிந்தர் பாட்டனரான ராஜநாராயண வஸு, நவகோபால் மித்திரர், தாகூர் மைத்துனரான கனேந்திர நாதர் முதலியோர் பாரத தர்மத்தைப் பரப்பினர்; சுதேசியுணர்வை ஊக்கினர்; ஆண்டுதோறும் கல்கத்தாவில் அவர்கள் ஹிந்து மேளம் ஒன்று விமரிசையாக நடத்தினர். 11-2-1875-ல் நடந்த ஹிந்துமேளத்தில் தாகூர் உணர்ச்சி ததும்பும் ஒரு கவி புனைந்து பாடினர். "ஹிந்துமேளம் மாலை 4-மணிக்குத் தொடங்கியது. தேவேந்திரநாதரின் இளமகன் பாபு இரவீந்திரநாத தாகூர் பாரத பூமியைப் பற்றி ஒரு வங்கக் கவி பாடினன்; அவனது வசிகரமான தோற்றமும், குரலினி

மையும், பாவனையும் சபையோரை மகிழ்வித்தன்" என்று கல்கத்தா Indian Daily News (இந்திய தினசரி) செய்தி வெளியிட்டது. 25-2-1875-ல் அமிர்தபஜார் வாரப் பதிப்பில் அதே கவி, தாகூர் பெயர் போட்டு வெளிவந்தது. அப்போது தாகூருக்குப் பதின் மூன்று வயது நிரம்பி ஒன்பது மாதம். அன்றுமுதல் இந்த இளங்கவியின் பெயர் பிரசித்தமானது. ஜோதீந் திரநாதர், தம்பியின் கவித்திறமையை வியந்துபோற்றி, "இன்னும் பாடு, பாடு!" என்று ஊக்கினர்; தாகூர் பாடிய இளங்கவிகளை அவர் தாம் நடத்திய 'பாரதீ' என்னும் சஞ்சிகையில் வெளியிட்டுவந்தார்.

இச்சமயம் வீட்டு உபாத்தியாயர் பிரஜ பாபு ஷேக்ஸ்பியர், ஷெல்லி, ப்ரௌனிங் முதலிய பெரும் புலவர் கவிகளைக் கற்பித்தார். தாகூர் மாக்பெத்தை மொழி பெயர்த்தார். ஒரு பகுதி பாரதியில் வந்தது. தாகூர் உள்ளத்தில் இசைப்பாட்டுகள் பூத்துச் சொரிந்தன; கதைகளும் நாவல்களும் எழுந்தன.

இக்காலம் எழுந்த கவிகளில் சிறந்தது வனமலர் (பன்பூல்) என்ற நீண்ட கதைக் காவியம்; அது முழு தும் "பானுசிம்ஹ தாகூர்" என்ற புனைபெயரால் "ஞானங் குரம்" என்ற மாசிகையில் வெளிவந்தது. இக்காவியம் ரஸிகர் கவனத்தை இழுத்தது. சண்டிதாஸ், இராம ப்ரஸாத் போன்ற அருட்கவிகளை ஒட்டி, தாகூர் ராக ராகிணிகளில் இனிய கீர்த்தனங்களும் பாடினர்.

தாகூர் இரண்டாவது தடவை தந்தையுடன் இமாலயம் சென்று வந்தார். இஃது அவருக்கு அள வற்ற நிம்மதியையும் புதிய எழுச்சியையும் அளித்தது. திரும்பிவந்ததும் தாகூர் நாடகங்களில் உற்சாகங் கொண்டார்; தமையன் ஜோதிந்திரநாதர் எழுதிய

"மனமாயி" என்ற நாடகத்தில் நடித்தார்; நாடகங்களுக்குப் பாட்டுகள் எழுதினர்; மூத்த தமையன் துவிஜேந்திரநாதர் நடத்திய பாரதி பத்திரிகையில் கதைகளும், கட்டுரைகளும், கவிதைகளும் ஏராளமாக வெளியிட்டார்; மைகேல் மதுசூதனர் எழுதிய மேகநாத காவியத்திற்கு ஒரு விமர்சனம் எழுதினர்; பிச்சைக்காரி, கருணு முதலிய கதைகள் எழுதினர்; 'கவிகுஹினி' என்ற தலைப்பில் அழகான கதைக் கவிகள் எழுதினர். தாகூரின் சிறு வயதில் பம்கிம்சந்திரர் அடிக்கடி தேவேந்திர நாதரைப் பார்க்க வந்தார். அப்போது தாகூர் அந்நாவலரைப் பார்த்ததுண்டு. அவர் நூல்களைத் தாகூர் கருத்துடன் படித்தார். பம்கிம் கவிதைகளைப் பற்றித் தாகூர் பாரதியில் ஒரு விமர்சனம் எழுதினர்.

கவிதைபோலவே தேசாபிமானமும் தாகூருடன் பிறந்தது: 1877-ஆம் ஆண்டு, நாடெங்கும் கொடிய பஞ்சம்; பட்டினியால் பலர் இறந்தனர். அச்சமயம் தில்லியில் லிட்டன் பிரபு தர்பார் நடத்தினர். அதே சமயம் கல்கத்தாவில் ஹிந்துமேளம் நடந்தது; அதில் தாகூர் மிகவும் உருக்கமான தேசிய கீதம் பாடினர். அப்பாட்டில் ஜனங்கள் பஞ்சத்தில் அடிபட்டு மடிவதையும், அடிமைச் சங்கிலியில் நாடு கட்டுண்டு வருந்துவதையும், அரசரின் இடம்ப நாடகத்தையும் உணர்ச்சி ததும்ப வர்ணித்தார். இந்தப் பாட்டு ஜோதீந்திர நாதர் எழுதிய "ஸ்வப்னமயி" என்னும் நாடகத்தில் சேர்க்கப் பெற்றுள்ளது.

தாகூர் வங்கம், ஆங்கிலம் ஆகிய இரண்டிலும் சிறந்து விளங்கினர். தாகூரின் சகோதரர் சத்யேந்திர நாதர், ஐ. ஸி. எஸ். தேறி, ஆமதாபாத்தில் ஜில்லா ஜட்ஜா

யிருந்தார். தாகூர் அவரிடம் இருந்து ஆறுமாதம் ஆங்கில இலக்கியம் பயின்றார்.

---

## 11. இங்கிலாந்தில்

சத்யேந்திரர் தம் தம்பியையும், மக்களையும் சீமையில் படிப்பிக்க விரும்பிக் கப்பலேறினார். அவர் மக்கள் சுரேந்திரநாதரும், இந்திராவும் ஆவர். சத்யேந்திரர் மனைவி தாகூரிடம் மிகவும் பிரியமுள்ளவள். தாகூர் இவர்களுடன் வசித்து பிரைட்டன் பள்ளிக்கூடத்தில் படித்தார். பிறகு தாரக்நாத் பலித் என்பவர் தாகூரை இலண்டன் யூனிவர்ஸிடி காலேஜில் சேர்த்தார். லோகன் பலித் என்பவர் தாகூரின் உயிர் நண்பரானார். தாகூர் ஆங்கிலம், இலத்தீன், ஐரோப்பிய சங்கீதம் — இம்மூன்றும் கற்றார். அவருக்கு ஆங்கிலம் கற்பித்தவர் புகழ்பெற்ற லார்ட் மார்லியின் சகோதரரான ஜான் மார்லி ஆவார். அவரிடம் ஷேக்ஸ்பியர், ப்ரௌனிங் ஆகிய இரண்டு வரகவிகளின் நூல்களைத் தாகூர் கற்றார்; ஷேக்ஸ்பியரின் கோரியோலானஸ் (Coriolanus) பிரௌனிங்கின் (Urn Burial) ஆகிய இரண்டையும் கருத்துடன் படித்தார். ஷேக்ஸ்பியர், மில்தன், பைரன் கவிகளில் தாகூர் ஆவேசங்கொண்டார்; கிளாரண்டன் அச்சுக்கூடத்தார் வெளியிட்ட அரிய இலக்கியங்களை வாங்கிப் படித்தார். ஒருதரம் "இந்தியாவில் ஆங்கில ஆட்சி" என்னும் பொருள் பற்றி மார்லி தம் மாணவரைக் கட்டுரை யெழுதச் சொன்னார். அன்னியர் ஆட்சியில் இந்தியா படும் துயரைப் பற்றித் தாகூர் உருக்கமாகவும், காரமாகவும் தீட்டினார்.

மார்லி அந்தக் கட்டுரையை மிகவும் மெச்சி, மாண வருக்குப் படித்துக் காட்டினர். தாகூர் அடிக்கடி பிரிட்டிஷ் மியூஸியத்திற்கு (காட்சிச்சாலை)ச் சென்று பல விஷயங்களை அறிவார். ஒரு தரம் பார்லிமெண்டு சபைக்குச் சென்று கிளாட்ஸ்டனும், பிரைட்டும் பேசுவதைக் கேட்டார்.

ஆங்கிலக் கலையின்பத்தில் திளைத்தும், தாகூர் தாய்மொழியை மறக்கவில்லை; தாய்மொழியிலே தான் அவர் கதை, கவிதை எல்லாம் எழுதினர். அவர் பாரதிக்குப் பல அரிய கட்டுரைகள் அனுப்பினர்; இங்கிலாந்தையும், ஆங்கில நாகரிகத்தையும் பற்றிச் சில விமர்சனக் கடிதங்கள் பாரதிக்கு எழுதினர்; பைரன், ஷெல்லி, ப்ரௌனிங், கெத்தே, தாந்தே, முதலிய புலவரைப் பற்றி எழுதினர்; உடைந்த கப்பல் (பக்னதாரி) என்ற காவியக் கதை எழுதினர்; உடைந்த மனம் (பக்னஹ்ருதயம்) என்ற நாடகக் காவியம் எழுதத் தொடங்கினர். இலண்டனில் புலவர் பார்கர், டாக்டர் ஸ்காட் ஆகிய இரு வருடனும் தாகூர் வசித்தார். தம் கடிதங்களில் ஸ்ரீமதி ஸ்காட்டின் பதிபக்தியைப் பற்றித் தாகூர் இவ்வாறு எழுதினர்:—

"ஒவ்வொரு சொல்லிலும் அவள் பதிபக்தியை விளக்கினள். பெண் அன்புமயம்; அந்த அன்பு மாசற்ற பதிபக்தியில் நிறைவாகிறது."

தாகூர் இரண்டரை ஆண்டுகள் சீமையில் வசித்து, ஐரோப்பியக் கலையின்பத்தில் திளைத்தார். எனினும், அவர் தாய்மொழியிலேயே நினைத்தார், எழுதினர், பாடினர்; தம் வங்கத் தோழருடன் வங் கமே பேசினர். ஐரோப்பிய நாகரிகத்தையும் பாரத

நாகரிகத்தையும் அவர் நன்ருக ஆராய்ந்தார். ஆங்கில இலக்கியங்கள் மனித வுணர்ச்சிகளை நன்ருகச் சித்திரிக்கின்றன. ஹோமர், தாந்தே, கெத்தே முதலிய மஹா கவிகளையும் ஆங்கில இலக்கியங்களுடன் கற்ருல், ஐரோப்பிய இலக்கியங்களில் உள்ள உயர்ந்த கலைச்சுவை விளங்கும். அக்கால ஆங்கில வசனத்தில் நாத்திக வுணர்ச்சியே அதிகம். மில், கோமத், பெந்தாம் முதலியோர் நூல்கள் அக்காலம் புகழ் பெற்றிருந்தன. அவற்றையும் தாகூர் படித்தார். ஐரோப்பியச் சங்கீதம் அவரை வசீகரித்தது: "இந்தியச் சங்கீத வித்துவான்கள் குரலை நன்ருகப் பழக்கவில்லை; பாடும் போது அங்க சேஷ்டைகள் பலமா யிருக்கின்றன. ஐரோப்பிய வித்துவான்கள் குரலை நன்ருகப் பழக்குகிருர்கள்; அது கிணீரென, இனிமையாகப் பேசுகிறது. இந்திய வித்துவான்கள் சபைக்கு வந்து சுருதி சேர்ப்பதிலும், லொட்டு லொட்டென்று மிருதங்கத்தைத் தட்டிப் பண்படுத்துவதிலும் காலம் போக்குகிருர்கள். ஐரோப்பியப் பாடகர் குறித்த நேரத்தில் தயாராகப் பாட்டைத் தொடங்கி விடுகிருர்கள். இங்கே பாட்டைக் கேட்கிருேம்; அங்கே பாடகரைக் கேட்கிருர்கள். நம் பாடல்கள் உயர்ந்த தெய்விக விஷயங்களைப் பற்றி யிருக்கின்றன; தெய்வச் சுவை யில்லாத பாடல்களை நாம் விரும்புவதில்லை. ஐரோப்பியப் பாடல்கள் வாழ்வின் எல்லாத் துறைகளையும் அளவளாவி, மானிட வுணர்ச்சிகளை வெளியிட்டு, விதவிதமான ரசபாவனைகளுடன் விளங்குகின்றன." இதுவே தாகூரின் கருத்து.

---

## 12. ஊற்று விழித்தது

1880-ஆம் ஆண்டு தாகூர் இங்கிலாந்தை விட்டுக் கல்கத்தா வந்து சேர்ந்தார். கலைவாணியும் அவருடன் வந்தாள். அதுமுதல் வசந்த வனம்போல் கவிகளும், கதைகளும், நாடகங்களும், அவர் வாக்கில் பூத்துக் கொட்டின. சீமையிலிருந்து வந்ததும் தாகூர் வால்மீகிப் பிரதிமா (வால்மீகியின் மேதை), காலம்ருகய (விதிவேட்டை), மாயையின் ஆடல் என்னும் நாடகங்கள் எழுதி ஜோரசங்க மாளிகையில் நடித்தார். அவரே வால்மீகியாக நடித்தார். அந்த நாடகங்களுக்கு பம்கிம் சந்திர சட்டர்ஜி, குருதாஸ் பானர்ஜி முதலிய புலவர் மணிகள் வந்திருந்தனர். பம்கிம் சந்திரர் இளந் தாகூரின் வாக்கை மிகவும் போற்றித் தமது பத்திரிகையில் எழுதினர். பாரதி பத்திரிகை தாகூர் வாணியைப் பிரகாசப் படுத்தியது. அதில் அவர் தம் எண்ணங்களைச் சுயேச்சையாக எழுதினர்; சீனத்தில் ஆங்கிலேயர் நடத்தும் அபினி வியாபாரத்தைப் பலமாகக் கண்டித்தார்.

1881-ல் தாகூர் முதன்முதல் கல்கத்தா வைத்தியக் கல்லூரியில் "இசையும் உணர்ச்சியும்" என்பது பற்றிப் பேசினர். இசைப் பாடலில் அவருக்கிருந்த ஆர்வம் அளவற்றது. ஆனல், ஆடல் பாடல்களால் உறவினர் திருப்தி யடையவில்லை; வாழ்விற்குப் பயனுள்ள பட்டம் பதவி பெறவேண்டும்; அவையே அவர்களை மகிழ்விக்கும்! 1881-ம் ஆண்டு, "மகனே செல் இங்கிலாந்திற்கு; பார்-அட்-லா படித்துப் பட்டம் பெற்று வா!" என்று தந்தை அனுப்பினர். நண்பரிருவருடன் தாகூர் புறப்பட்டார்; சென்

னுக்கு வந்தார்; நண்பரைக் கப்பலில் அனுப்பினர்; தாம் கல்கத்தாவுக்கே திரும்பி வந்தார். படிப்பு அவருக்குப் பிடிக்கவில்லை; சீமை வாழ்வும் பிடிக்க வில்லை. அவர் உள்ளத்தில் பொங்கும் கவியூற்றை உலகெல்லாம் பருகப்போகிறது; புத்தகப் படிப் பெல்லாம் அதன் சிறு குமிழிகள் போலாகும். வீட் டில் பாட்டும் கலையும் பொங்கிப் பரவின. புதுப் புதுத் துறையில் கவி புனைந்து பாட இரவீந்திரர் உள்ளம் துடித்தது. இரவீந்திரரின் இசை வெள்ளம் இலக்கணக் கட்டுப்பாடுகளைத் தகர்த்துச் சுதந்தர மாகப் பொங்கித் ததும்பியது. கங்கை வெள்ளமும், பசும்பயிர்த் தென்றலும் அவருக்குக் கவிதை யளித் தன. "வங்க ஆகாயம் நிர்மலமாக ஒளிர்கிறது; தென்றல் வந்து கொஞ்சுகிறது; கங்கை சலசலத் தோடுகிறது; பசுந் தரையிலிருந்து நீலவான் வரையில் உள்ள இயற்கைக் காட்சிகளெல்லாம் எனது இதயப் பசிக்குச் சோறும் நீரும்போ லுதவின. என் நதிக்கரை நாட்கள் புண்ணிய வெள்ளத்தில் மிதந்து பூஜைக்குதவும் தாமரை மலர்கள் போலப் பூத்துப் பொலிந்தன" என்கிறார் தாகூர். 1882-ல் தாகூர் சந்த்யா சங்கீதம் எழுதினர். அதைப் படித்து பங்கிம் சந்திரர் பெருமகிழ் வெய்தினர். புகழ்பெற்ற சரித் திராசிரியரான இராமேச சந்திர தத்தர் வீட்டில் ஒரு விருந்து நடந்தது. பங்கிம் சந்திரருக்கு இராமேசர் மாலை சூட்டி மரியாதை செய்தார்; பங்கிம் தம் மாலையை அருகே அமர்ந்த இரவீந்திரர் கழுத்தில் போட்டு, அவர் கவிதையைப் புகழ்ந்து போற்றினர். தாகூர் சில மாதங்கள் ஜோதீந்திர நாதருடன் சந்திர நாகூரில் இருந்து பல கவிதைகள் எழுதினர்.

பிறகு தாகூர் கல்கத்தா சுத்தர் தெருவில், எண் 10-ல் வசித்தார்; ஒரு காலை வீட்டுத் திண்ணையிலிருந்து சூரியோதயத்தைப் பார்த்தார். சூரியன் பசுமரங்களுக்கு மேல் எழுந்தது. அதைப் பார்க்கப் பார்க்கக் கவியுள்ளம் பரவசங் கொண்டது. "என் கண்ணை மறைத்த திரை விலகியது; உலகம் அற்புத ஜோதியில் ஆடியது; அழகின்ப அலைகள் எங்கும் பொங்கி யெழுந்தன. என் இதயத்தில் படர்ந்த துன்பச் சுருளையும், சோர்வையும் இந்த ஜோதி பிளந்தெறிந்தது. என் இதயம் விசுவமங்கள ஜோதியால் நிரம்பியது. அப்போதே விழித்த நீர்வீழ்ச்சி (நிர்ஜரேர் ஸ்வப்ன பங்கம்) என்னும் கவிதை என்னுள் அருவிபோலப் பொங்கி யெழுந்தது. உலகை முன்னே நான் கண்ணால் பார்த்தேன்; இப்போது பூரண சேதனத்தால் உலகைக் கண்டேன்; ஆழமறியாத நித்தியானந்த ஊற்றை நான் கண்டேன். அதனின்று உலகெல்லாம் சிரிப்புத் துமி தெறித்தது!" என்று தாகூர் அந்த அனுபவத்தை வர்ணிக்கிறார். இந்தப் பேரானந்தக் காட்சியில் பொங்கி யெழுந்ததே தாகூரின் காலைப் பாட்டு—அந்தக் காலைப் பாட்டில் ஒன்றே 'ஜனகணமன அதிநாயக ஜயஹே" என்னும் புகழ்பெற்ற தேசிய கீதம்.

இப்போது தாகூர் இருபத்திரண்டு வயதுக்காளை. அவர் கார்வார் ஜட்ஜா யிருந்த சகோதரர் சத்யேந்திர நாதரிடம் சில நாட்களிருந்து, கல்கத்தா வந்தார்; கார்வாரின் இயற்கை வனப்பு அவருக்குப் புதிய ஆவேச மளித்தது. ப்ரகிருதிர் ப்ரதிசோத் என்ற ஒரு நாடகம் எழுதினார். அது "ஸந்யாசி" என்ற தலைப்புடன் ஆங்கிலத்தில் வந்துள்ளது. தாகூரின் நூல் வகையும், முதன்மையான நூல்களின் கருத்தும்

பிறகு குறிப்போம். இப்போது அவரது வாழ் வாற்றைப் பின்பற்றுவோம்.

---

## 13. இல்லற வாழ்க்கை

**தா**கூரின் கலைவாழ்க்கை உலகெல்லாம் போற் றிப் புகழும் இன்பக் கோபுரம்போல் நின்றுநிலவி யது. ஆனல், அவரது இல்லற வாழ்க்கை முற்றிலும் சோக நாடகமானது.

9-12-1883-ல் தாகூருக்கு விவாகம் நடந்தது; அவர் மனைவி ஜெஸ்ஸோர் செல்வர் வேணிராய் சௌத்ரி மகள் ஸ்ரீமதி மிருணளினி தேவி. சுமார் இருப தாண்டுகள் தாகூர் மனைவியுடன் இல்லறம் நடத் தினர். மனைவி நற்குணச் செல்வி; மாசற்ற கற்பரசி. தாகூர் தமது கவிக்கனவிலேயே ஆழ்ந்திருப்பார்; உணவைக்கூட மறந்து போவார்; மனைவி சாப்பிட அழைத்தாற்கூட எழுந்திருக்க மனம் வராது; அவரது உடல்நலத்தை மனைவி கருத்துடன் பேணி னுள்; அவர் சுவைக்கேற்ற உணவுகளை அளித்தாள். தாய் குழந்தையைப் பாதுகாப்பதுபோல் மனைவி கணவர் உடலைப் பாதுகாத்தாள்; அவர் உள்ளத் திற்கு விதவித மகிழ்வளித்தாள். தாகூர் ஆர்வமுள்ள காதலர்; பெண்ணில் கலையழகைக் காண்பவர்; இல் லற வாழ்வில் பிடித்த முள்ளவர்; காட்டுத் துறவை வெறுப்பவர். அவருடைய காதற் கவிகளில் இவ் வுணர்ச்சி ததும்புகிறது:—

"காதலி, உன்னைக் காதலிக்கிறேன்; வழி தப்பிய பறவைபோல் உன்னிடம் பிடிபட்டேன்; நீ



தாகூர் மனைவி
ஸ்ரீமதி மிருணாளினி தேவி

என் உள்ளத்தைக் குலுக்கினய்; அதன் மூடி திறந்தது; காதலீ, காதலீ, நீ என்னைக் காதலிக்கா விட்டால், எனது துன்பத்தை மன்னி! பராமுகம் வேண்டா! நீ என்னைக் காதலித்தால், என் இன்பத்தை ஏற்றுக்கொள்!" கடுந்தவமும், காயக்கிலேசமும் தாகூருக்குப் பிடிக்கா. அவர் வாழ்வின்பத்தையும், அழகையும் நிறைவாக நுகரவிரும்பினர்.

தாகூர் தம்முடைய மனைவிமக்களுடன் ஷேலிதா என்னும் தமது கிராமத்தில் அமைதியாக வசித்தார்; குடும்ப நிலங்களை நிர்வகித்தார். ஷேலிதாவில் இருந்துகொண்டு, அவர் தோணியில் குடும்பக் கிராமங்களைச் சுற்றி மேற்பார்த்துவந்தார். (ஷேலிதா, பதிஸார், குஸ்தியா, பப்னு, குமார்காலி, கட்டாக் முதலியன தாகூர் குடும்பத்தைச் சேர்ந்த அழகிய கிராமங்கள்.) வஞ்சமற்ற கிராமவாசிகளிடம் அவர் பேரன்பு பூண்டார்; அவர்களுடைய நடையுடை பாவனைகளையெல்லாம் கதைகளாக எழுதினர்; கிராமியப் பாட்டுகளையெல்லாம் சேகரித்துப் பாடி மகிழ்ந்தார். இச்சமயம் அவர் தம் நண்பருக்குத் தமது வாழ்வைப்பற்றி ஏராளமான கடிதங்கள் எழுதினர். அவற்றினின்று "வங்காள வாழ்க்கை" என்னும் நூல் வெளிவந்தது. அதில் அவருடைய கவிக் கனவுகளும், இயற்கையின்பமும், பாமர ஜனங்களிடம் அவருக்கிருந்த அன்பும், கிராம சேவையில் அவரது பற்றுதலும் நன்குகத் தெரிகின்றன. காலையில் அமைதியான நதியின் மார்பில் சூரியன் கதிர்களைப் பொழிகிருன். அந்த ஜோதி யழகை நதி யாழ்மீட்டிச் செல்கிறது. சூரியனைக்கண்டு தாமரை மலர்ந்து அழகையும் மணத்தையும் அந்த ஒளிக் கடவுளுக்கு அர்ப்பணிக்கிறது. அந்தி

மலர்கள் நாணமுறுவல் காட்டுகின்றன. மலர்ந்த மலருக்குத் தேனீக்கள் வருகின்றன; அதைச் சுற்றிச் சுற்றிப் பாடுகின்றன. இளந்தென்றலும் காற்றும், சூறுவளியும், புயலும் பல ஸ்வரங்களுடன் பாடுகின்றன. பருவ காலங்கள் பலநிறப் பொலிவுடன் எழுந்து விளங்குகின்றன. இயற்கையழகு ஆயிரம் வகையாக எதிரே நின்று புன்னகை புரிகிறது. அந்தப் புன்னகை கவியுள்ளத்தில் இசைமலர்களாகப் பூத்துச் சொரிகிறது. தாகூர் உள்ளம் குழந்தையைப் போன்றது. அவர் அணில், பறவை, சிறு குழந்தை— இவற்றுடனும் கலந்து உறவாடி மகிழ்வார். கிராமங்களில் எளியவர்கள் படும் பாடு அவர் மனத்தை உருக்கியது; அவர்களுக்குப் போதிய உழைப்பும் பிழைப்பும் ஊட்டமும் அளிக்க அவர் ஒரு வழியைச் சிந்தித்துக்கொண்டே யிருந்தார்; அச்சிந்தனையே பிற்காலம் ஸ்ரீநிகேதனமாக மலர்ந்தது. தாகூர் காஜிபூரிலும் வசித்துவந்தார்; குடும்ப வியாச்சியங்களையும் மேற்பார்த்தார்; ஒருமுறை டார்ஜிலிங் சென்று இமாலயக் காட்சியை அனுபவித்து வந்தார்.

விவாகமான இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு 1886-ல், தாகூருக்கு ஒரு பெண்குழந்தை பிறந்தது; அதற்கு மாதுரி லதா என்று பெயர். இரண்டாண்டுகளுக்குப் பிறகு 1888-ல் மூத்தபிள்ளை இரதீந்திரநாதன் பிறந்தான்; 1890-ல் இரேணுகா பிறந்தாள்; 1892-ல் மீரா பிறந்தாள்; 1894-ல் சமீந்திரநாதன் பிறந்தான். இரதீந்திரநாதரே இப்போது பெயருக்குப் பிள்ளையாயிருக்கிறார்; அவருக்கும் சந்ததியில்லை; மீராவுக்கு நிதீந்திரநாதன் என்ற மகனும், நந்திதை என்ற மகளும் பிறந்தனர்; மகன் ஜெர்மனியில் படிக்கும்

போது இறந்தான்; மகள் நந்திதைதான் தாகூருக்கு இருக்கும் ஒரே சந்ததி.

---

## 14. பேறு ஆடிக்கொண்டே யிருந்தது

குடும்பச் சுமையும், ஜமீன் நிர்வாகமும் அவரது இலக்கிய வெள்ளத்தைத் தடுக்கவில்லை. பேறு ஆடிக் கொண்டே யிருந்தது. இச்சமயம் பாரதீ பத்திரிகையில் பாதி தாகூர் எழுத்தே; அவரே ஆசிரியராயிருந்து ஸாதனு என்ற பத்திரிகையை நடத்தினர். பம்கிம் சந்திரர் நாவல்களைத் தாகூர் போற்றிப் புகழ்ந்தார். இராஜசிம்ஹன் என்ற நாவலுக்கு மதிப்புரை எழுதும் போது பம்கிம் காலமான செய்தி வந்தது (8-4-1894). கல்கத்தாவில் நடந்த அனுதாபக் கூட்டத்தில் தாகூர் பம்கிமைப்பற்றி உருக்கமாகப் பேசினர்; அவரது வங்க தர்சனத்தை ஐந்தாண்டுகள் தொடர்ந்து நடத் தினர்.

அவர் பாரதியில் எழுதிய பஞ்சபூத தீனசரி, மனித வாழ்வின் நுட்பங்களை விளக்குகிறது. இச்சமயமே அவர் தேசத்தொண்டும் புரிந்தார்; காங்கிரஸில் கீதங் கள் பாடினர்; பம்கிம் சந்திரர் தலைமையில் "ஆங் கிலேயரும், இந்தியரும்" என்ற பிரசங்கம் செய்தார்; சாதனுவில் "ஆங்கிலேயன் ஆதங்கம்" என்ற ஒரு கட்டுரையால் இந்து - முஸ்லிம் ஒற்றுமையை உபதே சித்தார்; தங்கப்படகு (ஸோனர்தாரி), சித்திரக் கவிகள், ஜீவன தேவதை, அறுவடை முதலிய கவிக் கதைகளும், கவிதைகளும் "மாலினி" என்ற இசை நாடகமும் எழுதினர்; தேச பாஷைக்காக அவர்

அரியதொண்டு செய்தார்; 'தாய்மொழியிலேயே கல்வி பயிற்றவேண்டும், விவகாரங்கள் நடக்கவேண்டும்' என்று கிளர்ச்சி செய்தார். அக்காலம் தேசிய மகாநாடுகள்கூட ஆங்கிலத்திலேயே நடந்தன. நாதூரில் 1897-ஆம் ஆண்டு நடந்த வங்க மாகாண மகாநாட்டிற்குச் சகோதரர் சத்யேந்திர நாதர் தலைமை வகித்தார். நடவடிக்கை ஆங்கிலத்தில் நடந்தது. தாகூர் எல்லாம் வங்க பாஷையிலேயே நடக்க வேண்டுமென்று வீராவேசமாக வற்புறுத்தினர். அவர் வற்புறுத்தலும் நடக்கவில்லை; மகாநாடும் நடக்கவில்லை; ஒரு பூகம்பம் இடையே புகுந்து கூட்டத்தில் கரடி ஓட்டியது! இச்சமயமே ஜகதீச சந்திர வசு செடியாராய்ச்சியில் உலகப் புகழ் பெற்று இலண்டனில் தம் ஆராய்ச்சிகளை விளக்கினர். தாகூர் அவருக்கு ஒரு பாமாலை அனுப்பினர். இருவரும் உயிர்நண்பரானர்கள்.

---

## 15. தேசாபிமானம்

இக்காலம் தாகூரின் தேசாபிமானம் கொழுந்துவிட்டெரிந்தது. விபின சந்திர பாலர், பால கங்காதர திலகர் ஆகியோரிருவரும் நடத்திய சுதேசி இயக்கத்தில் அவர் பங்கு கொண்டார்; தாம் நடத்திய பாரதியில் தேசாபிமானத்தைத் தூண்டும் கட்டுரைகளும் கால விமர்சனங்களும் ஏராளமாக எழுதினர்.

இச்சமயமே பால கங்காதர திலகர் சிவாஜி உற்சவமும், கணேசர் திருநாளும் ஏற்படுத்தி மஹாராஷ்டிரத்தில் தீவிரமான தேசாபிமானத்தை

எழுப்பினர். தாகூரும் கல்கத்தாவில் சிவாஜித் திரு நாள் நடத்தினர்; அப்போது, கல்கத்தா நகர மாளிகைக் கூட்டத்தில், சிவாஜி உற்சவம் என்னும் உருக்கமான கவியைப் படித்தார். பம்பாயில் கொள்ளை நோய் வந்தது. திலகர் தம் தொண்டருடன் ஜனங்களுக்குப் பல உதவி செய்தார். பிளேக் ஆபீசர் ராண்டுதுரை, ஜனங்களை அலைத்து ஒதுக்கிவைத்துப் பாடுபடுத்தி விட்டார். 1898-ல் யாரோ ஒருவன் ராண்டு துரையையும் அவர் நண்பன் ஐர்ஸ்டையும் சுட்டு வீழ்த்திவிட்டான். பண்ட மொரு பக்கம், பழி யொரு பக்கமாக, அது திலகர் தலையில் விடிந்தது. திலகர்மேல் சதிக் குற்றம் சாட்டி அரசாங்கம் கைது செய்தது. தாகூர் இதைப் பலமாகக் கண்டித்தார்; திலகர் நிதி ஒன்று திரட்டி யனுப்பினர்; "செடிஷன் பில்"லை இந்தியரின் கழுத்தைப் பிடிக்கும் சட்டம் என்று கண்டித்துப் பேசினர். அதே சமயம் கல்கத்தாவிலும் பிளேக் பரவியது. "உஷார்! பம்பாயில் செய்ததுபோல இங்கே ஜனங்களை முரட்டுத் தனமாக நடத்தக் கூடாது!" என்று தாகூர் சர்க்காரை எச்சரித்தார். சகோதரி நிவேதிதையுடன் சேர்ந்து பிளேக் நோயாளருக்கு வேண்டிய உதவி செய்தார். அப்போதே, கர்ஃஜான் பிரபு வங்காளத்தைத் துண்டு செய்யக் கிளம்பினர்; தாகூர் இதைப் பலமாக எதிர்த்துக் கிளர்ச்சி செய்தார். சர்வ கலாசாலைப் பட்டமளிப்பு விழாவில், கர்ஃஜான் இந்தியரைக் குறைவாகப் பேசினர்: 'பொய்யர்' என்ருர். நாடெல்லாம் கிளர்ச்சி! தாகூர் கர்ஃஜானைப் பலமாகத் தாக்கிப் பேசினர். மராத்திய, இராஜபுத்ர, சீக்கிய வீரருடைய வீரத்தை வீரக்கவிதைகளாகப் பாடி

ஞர்; பம்கிம் சந்திரரின் வங்கதர்சனத்தைப் புதுக்கி, அக்ஷயகுமார் மித்திரர், விபின சந்திரபாலர், பிரம பாந்தவ உபாத்தியாயர்போன்ற தேசாபிமானிகளின் கூட்டுறவுகொண்டு உணர்ச்சி ததும்ப நடத்தினர்; ஹிந்துதர்மத்தையும், ஆதர்சத்தையும் பற்றி இனிய கவிகள் பாடினர். அவற்றைக் கேட்டுத் தந்தை தேவேந்திரர் மகனை ஆசீர்வதித்துக் கவிதைகளை வெளியிட ஒரு பணமுடிப்பும் அளித்தார்.

---

## 16. பிரமசரியக் கல்வி

அக்கால வாலிபர் ஆங்கிலத்திற்கும், மேனாட்டுப் பழக்க வழக்கங்களுக்கும் குருட்டுத் தனமாக ஆட்பட்டுத் தாய்மொழியை, தாய்நாட்டை, பாரத தருமத்தை உதாசினம் செய்து திரிந்தமையைத் தாகூர் பலமாகக் கண்டித்தார். இஃது அவர் கண்ணை உறுத்தியது; வங்க தர்சனத்தில் "கண்ணைப் புண்ணாக்கும் காட்சி" என்ற ஓர் அரிய நாவல் எழுதி, இளைஞருக்குப் பாரத தர்மாவேசம் உண்டாக்கினர். இராமேச சந்திர தத்தர் தலைமையில் தாகூர் செய்த "சுதேசி சமாஜ்" என்ற பிரசங்கம் புகழ்பெற்றது. அதில் 'இந்தியன் இந்தியனாயிருக்க வேண்டும்' என்கிறார். நமது நாடு மறுபடியும் தலைதூக்க வேண்டுமானால், பழைய பிரமசரியக் கல்வியைப் புதுமுறையில் அளிக்க வேண்டும் என்று கவியரசருக்குத் தோன்றியது. அந்தப் பணிக்கே அவர் தம்மை அர்ப்பணித்தார்; தந்தையின் ஆசியும் கிடைத்தது: ஜமீன் நிர்வாகத்தை விடுத்தார். 22-12-1901-ல் போல்பூர் சாந்திநிகேதனில், தாகூர் பிரமசரிய ஆசிரமம்

தொடங்கினர். சுமார் பத்து மாணவர் சேர்ந்தனர். ஜகதானந்த ராய், லாரென்ஸ், சதீஷ் சந்திரராய்(கவி), பிரமபாந்தவர் முதலிய அன்பர் தாகூருக்கு உதவி செய்தனர்; தாகூர் மாணவருடன் மாணவர் போல வசித்தார்; விளையாடினர்; தாமே பிள்ளைகளுக்குப் போதித்தார்; வகுப்புகளுக்குப் பாட புத்தகங்களும் எழுதினர். பூரியிலிருந்த தம் பங்களா, புத்தக சாலை, தமது பங்கு நிலம், மனைவியின் நகைநட்டுகள்— எல்லாவற்றையும் விற்று, தாகூர் சாந்திநிகேதனத்தை நடத்தினர். அதன் நடைமுறை தனியே வரும்.

---

## 17. துயரம்

தாகூருக்கு இச்சமயம் அடுக்கடுக்காகத் துயர்கள் வந்தன. சாந்திநிகேதனுக்கு அன்னைபோல விளங்கிய அருமை மனைவி மிருணாளினிதேவி நோயுற்றுக் கல்கத்தாவில் இறந்தாள் (23-11-1902). மனைவியின் நினைப்பிற்காகத் தாகூர் "ஸ்மரன்" என்னும் உருக்கமான கவிமாலை தொடுத்தார்: "பெண்ணே நீ இருந்தபோது என் வீட்டில் அழகும் அணியும் விளங்கச் செய்தாய்; என் தனி வாழ்விலும் அழகணி விளங்கச்செய்; என் நேரங்களின் குப்பைகளைப் பெருக்கித் தள்ளு; வெறுங்குடங்களை நிரப்பு; தாறுமாறாகக் கிடக்கும் என் சாமான்களை அடுக்கு; பிறகு எனது இதயாலயக் கதவைத் திற; விளக்கேற்று! அங்கே அந்தர்யாமியின் முன் நாம் மௌனமாகக் கூடுவோம்," என்று தாகூர் ஸ்மரன் கவிகளில் எழுதுகிறார்.

கடைக்குட்டி சமீந்திரனுக்காக "சிசு" என்ற பிள்ளைக் கவிதைகள் தொடுத்தார். அவை கிரெஸெண்ட் மூனில் (Crescent Moon) வந்துள்ளன. பட்ட காலி லேயே பட்டது. மனைவி இறந்த ஆறுமாதத்திற் கெல்லாம் தாகூரின் இரண்டாம் மகள் இரேணுகா—கலியாணமான பெண்—சீமையில் படித்த சத்யேந்த்ர நாத் பட்டாசாரியர் மனைவி—இறந்தாள். சில மாதங் களுக்கெல்லாம், சாந்திநிகேதனில் அரிய தொண்டு செய்த இளங் கவி சதீஷ் சந்திர ராய் காலஞ் சென் ருர். மற்ருெரு பெரிய சாவு! 19-1-1905-ல் ஜோர சங்க மாளிகையில் மஹர்ஷி தேவேந்திரநாத தாகூர் இறந்தார். தகப்பனுருக்கு இரவீந்திரர் சாந்திநிகேத னில் சமாதி கட்டினர். 1907-ல் மற்ருெரு கடுஞ்சாவு; கடைசி மகன் சமீந்திரன் வாந்திபேதி கண்டு இறந்தான்.

இந்தச் சாவுகள் தாகூரின் வாழ்விலேயே மாறு தல் உண்டாக்கின. அன்றுமுதல் அவர் வேதாந்தக் கவியானர். இருப்பினும், அவருடைய தேசாபிமான மும், பொதுநல வூக்கமும், கலைத் திறமையும் வளர்ந் தோங்கின.

---

## 18. வந்தே மாதரம்

**1905**-1907 நமது நாட்டுச் சரிதையின் முக்கிய மான பாகம்; அப்போதுதான் சுதேச வேள்விக் கனல் ஜ்வாலையாக எழுந்து நாடெங்கும் பரவியது. அக்கனலை முதலில் வங்காளத்தில் தூண்டியவர் விபின சந்திரபாலரும், தாகூரும் ஆவார். ஸ்ரீ அரவிந்தர் பிறகு வந்து சேர்ந்தார்.

தாகூரின் நாட்டன்பு எல்லையற்றது; பாரத நாட்டிற்குச் சிறுமை செய்யும் எத்தீமையும் அவர் தைரியமாக எதிர்த்துச் சொல்லம்பு தொடுப்பார். அவர் இறுதிமட்டும் நம் சுதந்தரக் காவலாளியா யிருந்தார். அவர் மனம் விசாலமானது ; உலகளாவி யது ; அதில் குறுகிய நினைப்புகள் சுயநலப் பேராசை கள் இல்லை ; தாகூரின் தேசாபிமானம் மனித சமு தாயத்தைத் தேசிய அகம்பாவத்தாலும், வியாபாரப் பொருமையாலும் பிரிப்பதன்று ; அஃது உள்ளங்களை ஒன்று சேர்ப்பது ; கலையிணைப்பால் உலக வாழ்வை ஒருகுல மாக்குவது.

" Our mission is to show that we have a place in the heart of the great world." ("பேருலகின் உள்ளத்தில் நமக்கு ஓர் இடம் உண்டு என்று விளக்குவதே நமது அரும்பணி.")

" So I stood by my country one morn
And prayed with folded hands ;
Accept, Mother, all my love
This I consecrate to Thee. "

" ஆதலின், ஒரு நாட்காலை, எனது நாட்டின் துணை யாக நின்று, கைகட்டி வணங்கினேன் : 'தாயே, எனது அன்பு முழுதும் ஏற்றுக்கொள்! இதை உனக்கே நிவேதிக்கிறேன்," என்று தமது தேசபக் தியை வெளியிடுகிறார் தாகூர். 1901-முதல் பாரத நாட்டிற்குப் புது விழிப்பும், புத்துணர்வும் அளித்த இயக்கங்களிலெல்லாம் அவரது கலப்பு இல்லாமல் இராது. அதிலும், புதிய வங்காளத்தின் நபிநாயகம் தாகூர் வாணியே என்று துணிந்து கூறலாம். தாகூர் என்றால் வங்காளி "குருதேவ்" என்று கும்பிடுவான்.

அவர் சேவை வங்காளிகளின் உள்ளத்தை அப்படிக் கவர்ந்தது! கர்ஃஜானின் இரும்பாட்சி பாரத நாட்டின் சுதந்தர வுணர்வைக் கட்டவிழ்த்து விட்டது; அவர் வங்காளத்தைப் பிரிக்கச் சட்டம் செய்தார்; இந்துக்களையும் இஸ்லாமியரையும் பிரித்துவைக்க முயன்றார். எழுந்தது சுதேசி இயக்கம்! பிரிவினையை எதிர்த்துக் கிளர்ச்சி நடந்தது. கல்கத்தா நகர மாளிகையில் பெரிய கூட்டம் நடந்தது (25-8-1905): அதில் தாகூர் "அவஸ்தையும், விவஸ்தையும்" என்னும் தலைப்பில் ஒரு கட்டுரை படித்தார். அதில் தேச நிலைமை, நாட்டில் நடக்கும் பகற் கொள்ளை, சுதேச இயக்கம், கிராம நிர்மாணம், கல்வி பரப்புதல், கைத்தொழில் வளர்த்தல், தொண்டர்படை சேர்த்தல் முதலிய பல விஷயங்கள் அடங்கியிருந்தன.

16-10-1905—நவ பாரத சரித்திரத்திலேயே முதன்மையான நாள்—வங்கப் பிரிவினை நாள்! அந்தப் பிரிவினை வங்காளத்தை ஒன்றுசேர்த்துவிட்டது. அன்றுதான் புகழ்பெற்ற இரக்ஷா பந்தனத் திருவிழா நடந்தது. தாகூர் அச்சமயம் பாடிய தேசிய கீதங்களைக் கேட்டால் உள்ளம் வீரக்கனல் பெறும். அன்று, தாகூர் தலைமையில், ஒரு மாபெருங்கூட்டம் கங்கைக்குச் சென்றது. பிரசன்ன குமார் தாகூர் கட்டத்தில் எல்லோரும் திருமுழுக்காடினர்; 'வந்தே மாதரம்' என்று ஆர்கலித்து, வங்காளிகள் இரக்ஷா பந்தனம் கட்டிக்கொண்டு, நாட்டிற்கே உயிரைப் பலி தானமாக்கச் சபதம் பூண்டனர். அன்று எந்த வங்காளி வீட்டிலும் அடுப்பெரிய வில்லை; எல்லாரும் உபவாசமிருந்து தேசவிடுதலைக்காகப் பராசக்தியை வணங்கினர். கடைகளெல்லாம் அன்று மூடியிருந்

தன. அன்று மாலை கல்கத்தா அப்பர் ஸர்குலர் ரஸ்தாவில் பெரிய கூட்டம் நடந்தது. ஆனந்தமோகன் போஸ் தலைமை வகித்து, அக்கால வழக்கப்படி ஆங்கிலத்தில் உருக்கமாகப் பேசினர். அப்பேச்சைத் தாகூரே வங்காளத்தில் மொழிபெயர்த்தார். அச்சமயம் கல்கத்தா ஃபெடரேஷன் ஹாலுக்கு (ஐக்கிய மாளிகை) அஸ்திவாரம் போடப்பெற்றது. அஃதானதும், எல்லாரும் கூட்டமாகப் பவனி சென்றனர். அப்போது தாகூர் "இறைவன் எங்களை ஐக்கியப் படுத்தினன்; அந்த ஐக்கியக்கட்டை நீயோ வெட்ட முடியும்!" என்ற உருக்கமான பாட்டைப் பாடினர். பவனி பாக்பஜார் பசுபதிபோஸ் வீட்டு வளைவில் கூடியது. அங்கே தாகூர் உருக்கமான பிரசங்கம் செய்து, சுதேசி இயக்கத்திற்கு நிதி திரட்டினர்; அந்த இடத்திலேயே ரூ. 50,000 வசூலானது! அன்றிருந்து தாகூர் அடிக்கடி சுதேசி இயக்கத்தைப் பற்றிப் பிரசங்கம் செய்தார். விபின சந்திரபாலரும் சேர்ந்தார்! எங்கும் உணர்ச்சி; எங்கும் வந்தே மாதரம்! இச்சமயம் ஜார்ஜ் இளவரசர் இந்தியாவுக்கு வந்தார். கோகலே கூட்டம் அவரை வரவேற்றது. தாகூர் ஆங்கில ஆட்சியின் அலங்கோலத்தை வெட்ட வெளிச்சமாக்கினர்; கோகலேக் கூட்டத்தைக் கண்டித்தார். சர்க்கார் அடக்குமுறை அம்பைப் பாய்ச்சியது. 'மாணவர் அரசியல் கூட்டங்களுக்குப் போகலாகாது; வந்தேமாதரம் எனலாகாது' என்று சுற்றறிக்கை வந்தது. தாகூர் மாணவருக்குத் தேசவுணர்ச்சி பெருகப் பேசினர். மாணவர் சர்க்கார் அறிக்கையை மதிக்கவேயில்லை; குரல் எட்டியமட்டும் வந்தேமாதரம் பாடினர்; சுதேச

இயக்கத்திற் பங்குகொண் டுழைத்தனர். சர்க்கார் அத்தகைய மாணவரை விலக்கினர்; அவர்கள் கல்விக்கு வழி வேண்டுமே! சுதேசக் கல்விச் சங்கம் (National Council of Education) ஏற்பட்டது; தாகூர் அதில் முதன்மை வகித்து "சிக்ஷா ஸமஸ்ய" என்ற தலைப்பில் தேசியக் கல்விமுறை வகுத்தார். தாகூரும், ஜகதீச சந்திர வசுவும் தேசியக் கல்விக்காக அரிய தொண்டு செய்தனர்; இருவரும் உயிர்த் தோழர். "கேயா" என்ற கவிகளைத் தாகூர் வசுவுக்கு அர்ப்பணித்தார். வங்க ஸாஹித்ய பரிஷத் ஸம்மேளனத்திற்குத் தலைமை வகித்துத் தாகூர் தாய்மொழிக்காக அரிய தொண்டு செய்தார்; ஆங்கிலமோகம் பிடித்தவர்களுக்குத் தாய்மொழியன்பு ஊட்டினர்; தம் மகன் இரதிந்திரனை விவசாயக் கல்வி கற்க அமெரிக்காவுக்கு அனுப்பினர். இச்சமயமே, ஸ்ரீ அரவிந்தர் பரோடா வேலையை விட்டு வங்கமாதா சேவைக்காக வந்தார். அவர் தேசியக் கல்லூரிக்குத் தலைமை வகித்து நடத்தினர்.

இதற்குள் விபின சந்திர பாலர் வந்தே மாதரம் பத்திரிகை தொடங்கித் தீவிரமான நாட்டுணர்ச்சியைக் கிளப்பினர்; அப்பத்திரிகை ஸ்ரீ அரவிந்தர் எழுத்துத் திறமையால் அகில இந்திய சுதேசிப் பத்திரிகையாக விளங்கியது. [இந்த விவரங்களை எமது "அரவிந்தப் பிரகாச"த்திற் காண்க].

---

## 19. குண்டு வெடித்தது

ஆனால், இச்சமயம் பரீந்திரர் தலைமையில் புரட்சி தலைகாட்டியது; காங்கிரஸ் பிளவுபட்டது; வங்காளத்தில் கட்சிப் பிரிவினைகளும் உட்கலகங்களும் எழுந்தன; மிதவாதியான சுரேந்திரநாதரை வந்தே மாதரச் சுதேசிகள் கேலி செய்தனர். தாகூர் சுரேந்திரரையே சரியான தலைவரெனப் போற்றினர். வாலிபர் சிலரின் புரட்சி இயக்கம் அவருக்குப் பிடிக்கவில்லை. மித—அமிதவாதப் பிரிவினைகளைத் தாகூர் கண்டித்தார்; இந்து முஸ்லிம் ஒற்றுமையை வற்புறுத்தினர். இச்சமயம் அரவிந்தரைக் கைதுசெய்தனர்; அப்போது தாகூர் தமது புகழ்பெற்ற அரவிந்த நமஸ்காரத்தைப் பாடினர். அக்கவியின் மொழிபெயர்ப்பு "அரவிந்தப் பிரகாசத்தில்" உள்ளது. 1907-ல் சூரத் காங்கிரஸ் அலங்கோலமாக முடிந்தது; அன்று முதல், மித—அமிதவாதக் கட்சிகள் சண்டைபோட்டுக் கொண்டன; தாகூர் இப்பிரிவினையைக் கண்டித்துப் பேசினர்; "காலத்தைக் கட்சிச் சண்டையில் கொலை செய்யாதீர்கள்; கிராம சேவை செய்யுங்கள்; கல்வியும் கைத்தொழிலும் ஒற்றுமையுணர்வும் பரப்புங்கள்!" என்று அவர் ஓயாமல் உபதேசித்தார். இந்த உபதேசத்திற் கிடையே ஒரு குண்டு விழுந்தது— 31-3-1908-ல் முஜஃபர்பூரில் புரட்சிக் குண்டு வெடித்தது. அஃது இரண்டு வெள்ளைத் திருமேனிகளைப் பிணமாக்கி விட்டது! ஏக ரகளை! மாணிக்தோலாத் தோட்டத்தில் குண்டுச் சாலை கண்டுபிடிக்கப்பெற்றது; பரீந்திரர் முதல் அரவிந்தர் வரையில் உள்ள பலர் புரட்சிச் சட்டத்திற்கு இலக்காகி அலி

பூர் சிறையில் வாடினர். அந்த விபரம் "அரவிந்தப் பிரகாச"த்திற் காண்க. தாகூர் பலாத்காரப் புரட்சியைக் கண்டித்தார்; ஆனல் இதுகாறும் சொத்தையென்று பிறர் எண்ணிய வங்காளிக்கு இவ்வளவு தைரியம் வந்ததை மெச்சினர்.

---

## 20. சாந்திநிகேதனிலேயே....

**தா**கூருக்கு அரசியல் கூச்சல் புளித்தது; அக்கால அரசியல் அவரது கலையுணர்ச்சிக்கு ஏற்றதாயில்லை. குடும்பத்தில் அடுக்கடுக்காக வந்த சாவுகளாலும் அவர் மனம் உடைந்து போனது. ஆதலால், தாகூர் அரசியல் கூச்சலுக் கப்பால் விலகிச் சாந்திநிகேதனத்திலேயே ஊன்றிக் கொண்டார். அச்சமயம் அரசியல்வாதிகள் அவரைக் கிண்டல் செய்தனர். தாகூர் இந்து முஸ்லிம் ஐக்கியம், கிழக்கு மேற்கு ஐக்கியம்—இவற்றைக் குறித்து "பிரபாசி"யில் அரிய கட்டுரைகள் எழுதியதுடன் தமது கலை வாழ்வில் ஆழ்ந்தார்; தந்தைக்குப் பிறகு பிரம சமாஜத்தை முன்னின்று வெற்றி பெற நடத்தினர்.

இச்சமயம் அவர் எழுதி நடத்திய "பிராயச் சித்தம்" என்னும் நாடகம் சத்தியாக்கிரக தத்துவத்தை நன்ருக விளக்கியது. 1909 நவம்பரில், இரதீந்திர நாதர் அமெரிக்காப் படிப்பு முடிந்து வந்தார்; பிரதிமா தேவி யென்னும் இளம் விதவையை மறுமணம் புரிந்தார். தாகூர் 'கோரா' என்னும் நாவலை மகனுக் களித்தார்; மகன் தந்தையுடன் சாந்திநிகேதனத் தொண்டிலேயே ஈடுபட்டார். அந்த அமைதி

யில் இலக்கிய மலர்கள் பூத்துக் கொட்டின. அவற்றுள் முதன்மையானவற்றைக் குறிப்பாம்:

1881-முதல் 1913-வரை, தாகூர் கணக்கற்ற செய்யுட்களும், உரை நடை நூல்களும் இயற்றிக் குவித்தார். அவற்றில் புகழ்பெற்றவை:—1. ஸந்த்யா கீத் (மாலைப் பாட்டு). 2. ப்ரபாத் கீத் (காலைப் பாட்டு). இதில்தான் "ஜனகணமன அதிநாயக ஜயஹே! பாரத பாக்யவிதாத" என்னும் இனிய நாட்டுப் பாட்டு அடங்கியுள்ளது.) 3. விவிதப்ரஸங்க (கட்டுரைகள்). 4. இராஜரிஷி: இஃது ஒரு நாவலும்-நாடகமும் ஆம். 5. விஸர்ஜன் (Sacrifice). 6. மானஸி (Heart's Desire). 7. மாயார் கேலா (மாயையின் விளையாட்டு); ஓர் இன்னிசை நாடகம். 8. நைவேத்ய (Offering). 9. நௌகா டூபி (படகு கவிழ்தல், Wreck). 10. சிசு (பாப்பாப் பாட்டுகள், Crescent Moon). 11. தேசிய கீதங்கள். 12. ஆத்ம சக்தி (அரசியல் கட்டுரைகள்). 13. காதற் பாட்டுகள். 14. கோரா (Gora). 15. கீதாஞ்சலிப் பாட்டுகள். 16. இராஜா (King of the Dark Chamber) 17. அசலாயதன். 18. சித்ரா (நாடகம்). 19. ஸாதனு. 20. மாலினி, (நாடகம்.) 21. ஜீவன தேவதை. 22. ஊர்வசி. 23. கதா ஓ கஹினி—தம் குழந்தைகளுக்குச் சொன்ன இணையற்ற சரித்திரக் கதைகளும், சிறு கதைப் பாட்டுக்களும். 24. "கேயா" வண்ணங்கள். 25. 'ஸ்மரன்', மனைவி நினைவுப் பாக்கள் (In Memoriam). நவரஸப் பாட்டுகள், கதைகள், நாவல்கள், கற்பனைகள், கட்டுரைக் கொத்துக்கள், நாடகங்கள், கடிதங்கள் கணக்கற்றன! தொட்டவெல்லாம் அழகு, அமுதம், மதுரம், இன்பம்! இந்த இலக்கிய வெள்ளத்தின் விரிவு இச் சிறிய கட்டுரையில் அடங்காது. ஆங்கிலத்

தில் மொழிபெயர்க்கப்பட்டுள்ள நூல்களில் முதன்மையானவை :—1. **My Reminiscences**: இளமைக் குறிப்புக்கள். 2. **The Gitanjali**: பக்திப் பரவசப் பாடல்கள் (நோபேல் வெகுமதி பெற்றவை); கடவுளைச் சரணடைந்து, அவனின்பத்தில் சுதந்தரமாக வாழ அருள் வேண்டுதல். 3. **The Gardener**: கடவுட் காதல், இயற்கை யின்பம், ஆருயிர்ப்பணி முதலிய அரிய பொருளடங்கியது. 4. **The Crescent Moon**: குழந்தை மொழியிலும், விளையாட்டிலும் குலுங்கும் அழகும் சுவையும் அரிய உண்மைகளும் இதில் இனிது விளங்கும். 5. **Chitra**: உண்மைக் காதல்: மணவாழ்வின் இன்பம், சித்திரை அர்ஜுனனைக் காதலித்த கதை, அரிய நாடகம். 6. **The Post Office**: இந் நாடகத்தில், அமல் என்னும் மாசற்ற சிறுவன், தன் முன் நடக்கும் மனித வாழ்வைக் கவனித்து, உலகுடன் பழகத் துடிக்கிறான்; ஆண்டவன் செய்தியைப் பரப்பும் தபால்காரனா யிருக்க அவாவுகிறான். 7. **Phalguni**: இந்த வேதாந்த நாடகம், ஆத்மாவின் அமரத்தன்மை, சாகா வாழ்வு முதலிய தத்துவங்களை விளக்கும். 8. **Tagore's Stories**: வங்கநாட்டின், நடையுடை பாவனைகளைக் கொண்ட கற்பனைக் கதைகள். 9. **Sadhana**: பாரதிக்குப் பின், இப்பெயர் கொண்ட பத்திரிகை ஒன்று நடத்தினார். நமக்கு ஆங்கிலத்தில் கிடைத்துள்ள நூல், அமெரிக்காவிலும், இங்கிலாந்திலும் செய்யப்பட்ட சொற்பொழிவுகள். 10. **Personality**: கலை வளர்ச்சி, காதற் பெருமை; உண்மையின் உரிமை பெருமைகளை இந்நூல் தெளிவுறுத்தும். 11. **Nationalism**: பொருளாதாரக் கொள்ளை யின்றி, உள்ளொற்றுமை, கலைப்பெருக்கம்,

விரிந்த அன்பு, பரந்த மனத்தால் நாட்டுப்பணி புரிய இந்நூல் வற்புறுத்தும். 12. **Fruit-Gathering:** வாழ்வுக் கனியை இறைவனுக்கு அர்ப்பணித்து, அவன் கலப்பில் வாழ அடங்காக் காதலை விளக்கும் உள்ளன்பு மாலைகள்; கீதாஞ்சலி போன்றன. 13. **Stray Birds:** வாழ்வையும் கலையழகையும் பற்றிய துக்கடாக்கள். 14. **Lover's Gift and Crossing:** வாழ்வு, காதல், சாவு—இவற்றைப் பற்றிய தத்துவங்கள். 15. **Hungry Stones and other Stories:** மனித வியல்பையும் சமுதாயத்தையும் பற்றிய அரிய சிறுகதைகள். 16. **Nishi and other Stories:** பெண்களுக்குக் காதலால் எய்தும் நலமும், ஆண்களுக்கு நல்விருப்பங்களால் வரும் பெருமையும் விளக்கும் சிறுகதைகள். 17. **Sacrifice and other Plays:** பொதுநலம், சமூகசுதந்தரம், அருட்பணி முதலியவற்றின் அவசியத்தை விளக்குவன. 18. **Cycle of Spring:** வாழ்வின்பத்தை விளக்குவது. 19. **Gora:** வங்க மொழியில் மிகச் சிறந்த நாவல்; இந்திய விடுதலைப் போரில் அநாதையாக விடுக்கப்பட்ட ஆங்கிலச் சிறுவனொருவன் வங்காளியால் வளர்க்கப்படுகிறான்; வயது வந்ததும் ஆங்கிலேயரை வெறுக்கிறான்; முடிவில் தானே ஆங்கிலேயன் என்று அறிகிறான். இந்நூல் ஓர் அரிய கற்பனை. 20. **Wreck:** இதுவும் ஓர் அரிய நவீனம்; சீர்திருத்தக் கதை; இந்துக் குடும்பங்களுக்கு உலகளாவிய பரந்த நோக்கம் வேண்டும் என்று வற்புறுத்துவது.

---

## 21. ஐம்பதாம் ஆண்டு விழா

**தா**கூருக்கு ஐம்பது வயது; அவர் தம் இலக்கியப் பணிகள் வங்காளிகள் உள்ளத்தைக் கவர்ந்தன. முதன்முதலாக அவர் சிறுகதை மொழிபெயர்ப்பு மாடேண் ரிவ்யூவில் (Modern Review) வந்தது; அதன் ஆசிரியர் இராமானந்த சட்டர்ஜி தாகூரின் உயிர் நண்பர். கவிகளை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்க அவர் தாகூரைத் தூண்டினர். நண்பர் லோகன் பலித் இரண்டு கவிதைகளை மொழிபெயர்த்து 1911-ஆம் ஆண்டு மே—செப்டம்பர் மாடேண் ரிவ்யூவில் வெளியிட்டார். இம் மொழிபெயர்ப்புகளால் தாகூர் பெயர் சிறிது உலகிற்குத் தெரிந்தது. 7-5-1911; அன்பர் சாந்திநிகேதனில் தாகூரின் ஐம்பதாண்டு விழாவை விமரிசையாகக் கொண்டாடினர்கள். இராஜா என்ற நாடகம் நடந்தது; அதில் தாகூர் நடித்தார்; தமது இளம்பருவ நினைப்புகளைப் பற்றிப் பிரசங்கம் செய்தார். இச் சமயமே அசலாயதன் என்ற சீர்திருத்த நாடகத்தைக் கவி எழுதினர். அதற்கு ஏராளமான எதிர்ப்புகள் முளைத்தன. தாகூர் கவிகளைப் பண்டிதர்கள் தாக்கு தாக்கென்று தாக்கி விட்டனர். ஒரு புகழ்பெற்ற வங்கநாடகாசிரியர் தாகூர் கவிகள் சர்வ ஆபாசம் பிடித்தவை என்று திட்டிவிட்டார்.

ஆனல், இந்த இகழ்ச்சிப் புயல்களால், தாகூரின் புகழ்விளக்கு அணையவில்லை; அது மேன்மேலும் சுடரோங்கி உலக ஜோதியானது. 1911 டிசம்பரில், கல்கத்தாவில் நடந்த காங்கிரஸில் தாகூர் "ஜனகணமன அதி நாயக ஜயஹே" என்ற புகழ் பெற்ற கீதத்தைப் பாடினர். அது சபையோர் உள்ளத்தைக் கொள்ளை

கொண்டது. தாகூர் கவிப் புகழ் நாடெங்கும் பரவியது.

*28-1-1912:* கல்கத்தா நகர மாளிகையில் வங்க சாஹித்ய பரிஷத் பெருங்கூட்டம் கூட்டித் தாகூரைப் புகழ்ந்து மெச்சிச் சன்மானம் செய்தது. ஜகதீச சந்திர வசு, பிரஃபுல்ல சந்திர ரே, சித்தரஞ்சன தாஸர், இராமானந்த சட்டர்ஜி முதலிய பிரமுகர்கள் அத்திரு விழாவை முன்னின்று நடத்தினர். வங்காளிகள் அதை ஒரு மஹோத்ஸவமாகக் கொண்டாடினர்; வங்க சாகித்ய பரிஷத் தலைவரான சாரதா சரண மித்திரர் தலைமை வகித்து, இரவீந்திரநாதரைச் சன்மானிப்பது வங்க மாதாவை, வங்க சமுதாயத்தையே நன்குமதிப்பதாகும் என்றார். கவிக்குக் கவிகள் புகழ்மாலை சூட்டினர்; தந்த ஏடுகளில் அச்சிட்டு உபசார பத்திரம் அளித்தனர்: "மஹா ஸரஸ்வதியின் வரம் பெற்றுத் தாங்கள் ஐம்பதாண்டுகள் தங்கள் திவ்விய வாணியால் வங்க மாதாவின் சேவை செய்தீர்கள்; தங்கள் வாக்கினின்று பூத்த மலர்கள் புது மணம் பரப்பி வங்க சமுதாயத்திற்குப் புது வாழ்வளித்தன. வங்க சாஹித்ய பரிஷத்து, தங்களுக்கு நீண்ட ஆயுள் அளிக்க உலகபிதாவை வணங்குகிறது. சங்கரர் தங்களுக்கு வெற்றி தருக!" என்பது அதன் கருத்து. தாகூர் ஜனசன்மானத்தை வணக்கமுடன் ஏற்று, "இவ்வளவு சன்மானத்திற்கு எளியேன் தகுதியல்லேன்; நீங்கள் செய்த மரியாதையெல்லாம் கலைவாணிக்குச் செய்த பூஜை, வங்கமாதாவுக்குச் செய்த வழிபாடு; நான் மாலைகளைச் சுமக்கிறேன்; பெருமை வாணிக்கே" என்று சுருக்கமாக நன்றியுரைத்தார். சுரேந்திரநாத் பானர்ஜி தமது 'பெங்காலி' யில்

தாகூரைப்பற்றி நீண்ட கட்டுரை எழுதினர். இதன் பிறகு தாகூர் பாரத தேசம் உலகிற்குத் தந்த ஞான வொளியைப் பற்றி அரிய சொற்பொழி வாற்றினர்.

இச்சமயம் சாந்திநிகேதனத்திற்குக் கண்காணிப்பு பலமாயிருந்தது. சர்க்கார் ஊழியர் பிள்ளைகள் அதில் படிக்கக் கூடாதென்ற சுற்றறிக்கை பரவியது. மாணவர் சிலர் விட்டுச் சென்றனர். மைரன் ஃபெல்ப்ஸ் (Myron H. Phelps) என்னும் அமெரிக்கவாயர் வந்துபார்த்துச் சாந்திநிகேதனைப் புகழ்ந்தெழுதினர். தாகூர் கதைகளை மாடேண் ரிவ்யூவில் படித்த ரோதென்ஸ்டெய்ன் (Rothenstein), இன்னும் கதைகள் வேண்டும் என்று ஜோரசங்கத்திற்கு எழுதினர். அதற்குப் பதில் தாகூர் கவி மொழி பெயர்ப்பு வந்தது. படித்து வியந்த ரோதென்ஸ்டெய்ன் தாகூரை இங்கிலாந்திற்கு அழைத்தார்.

ஐரோப்பாச் சென்று தமது சாந்திநிகேதனக் கொள்கைகளைப் பரப்பத் தாகூர் விரும்பினர்; 1912-மார்ச்சில் புறப்பட்டார். மூட்டை முடிச்சுகள் சென்னை சென்றன; ஆனல் உடம்பு படுத்துவிட்டது. சிலாதா கிராமத்தில் இருந்து உடம்பைத் தேற்றிக்கொண்டு தாகூர், 27-5-1912-ல் மூன்றாந் தடவையாகச் சீமைக்குப் பயணமானர். மூத்த மகனும் தன் மனைவியுடன் வந்தான். இஃது அதிட்டப் பிரயாணம்; இதனல் அவர் உலக கவியானர். தாகூர் சிலாதா கிராமத்திலேயே, நோய்ப் படுக்கையில் கீதாஞ்சலி மொழிபெயர்ப்பைத் தொடங்கினர்; கப்பலில் செல்லும்போதே அதைப் பூர்த்தியாக்கினர்; ஒரு நோட்டில் மூலம் இடப்புறமும், மொழி பெயர்ப்பு வலப்புறமுமாக எழுதிவைத்தார்.

## 22. சுக்கிர தசை

**16-6-1912-ல்** தாகூர் இலண்டன் சேர்ந்து, ஓர் ஓட்டலில் தங்கினர்; அங்கே ரோதென்ஸ் டெய்ன் (புகழ்பெற்ற ஆங்கிலச் சைத்திரிகர்) தாகூருக்கு நல்ல நண்பரானர். அவர் முன்பே இந்தியா வந்து அபனீந்திர நாதருடன் தங்கி, தாகூர் புலமையை அறிந்தவர். தாகூர் தமது கீதாஞ்சலி மொழி பெயர்ப்பைப் படித்துக் காட்டினர். ரோதென் ஸ்டெய்ன் பரவசமடைந்து, அதைக் கையச்சடித்து ஏட்ஸ், ஸ்டாஃபோர்டு ப்ரூக், ப்ராட்லி முதலிய புலவருக்கு அனுப்பினர். புலவர் கவியை மனமாரப் போற்றினர். மறுநாள் ரோதென்ஸ்டெய்ன் வீட்டில் அறிஞர் கூடினர்—(Evelyn Underhill, Ernest Rhoys, Alice Meynell, Henry Nevinson, W. B. Yeats முதலியோர்.) William Butler Yeats கீதாஞ்சலி மொழி பெயர்ப்பைப் படித்தார். கேட்டவர் பரவசமாயினர். அங்கேதான் தாகூர் C. F. ஆந்துருவையும் சந்தித்தார். ஆந்துரு அப்போது தில்லி ஸ்டீஃபன்ஸ் காலேஜில் புலவராயிருந்தார். இருவரும் அன்று முதலே ஆருயிர் நண்பராயினர். *19-7-1912*-ல் East and West Union Club தாகூருக்கு விருந்தளித்தது; "The Nation" என்ற புகழ்பெற்ற வாரப்பத்திரிகை ஆங்கிலப் புலவரை அழைத்துத் தாகூரைப் பிரபலப்படுத்தி ஆதரித்தது. தாகூர் சுற்றுப் பிரயாணம் செய்து நல்ல புலவர்களைப் பார்த்தார்—அவர்களுள் பெர்னார்டு ஷா, H. G. வெல்ஸ், ஸ்டாஃபோர்டு ப்ரூக், கவி ஜான் மாஸ்ஃபீல்ட், லோஸ் டிகின்ஸன், பெட்ராண்டு ரஸ்ஸல், ஜான் கிளாஸ்வொர்தி, ராபர்டு ப்ரிட்ஜஸ்,

ஸ்டார்ஜ் மூர் முதலியோர் முதன்மையானவர். தாகூரை இவர்கள் மெச்சினர்கள். ஈட்ஸ் கீதாஞ்சலிக்கு விரிவான முன்னுரை எழுதினர்.

தாகூர் 27-10-1912-ல் அமெரிக்காச் சென்ருர்; இந்திய நாகரிகத்தைப் பற்றிப் பல பிரசங்கங்கள் செய்தார். அவற்றுள் அவர் ஜாதிமாநாட்டில் (Congress of Races) செய்த Race conflict என்ற பிரசங்கமும், ஹாவார்டு சர்வகலாசாலையில் செய்த ஸாதன பிரசங்கங்களும் முதன்மையானவை. இதற்குள் கீதாஞ்சலி 750 பிரதிகள் வெளியாகிப் பரவியது. அதைப் பார்த்த அமெரிக்கப் புலவர் தாகூரை வரவேற்றுப் புகழ்ந்தனர். அதே சமயம் இந்தியாவில் சிம்லா வைசிராய் மாளிகையில், ஆந்துரு தாகூர் கவிதையைப் பற்றி உருக்கமாகப் பேசினர். வைஸ்ராய் ஹார்டிஞ்ஜ் பிரபு தாகூரை "The Poet Laureate of Asia" (ஆசியக்கவியரசு) என்று புகழ்ந்தார். தாகூர் மறுபடியும் இலண்டன் வந்து காக்ஸ்டன் ஹாலில் இந்து தருமத்தைப்பற்றிப் பேசிப் புகழ்மாலையுடன் இந்தியாவுக்குத் திரும்பினர்—13-13-1913.

---

## 23. நோபெல் வெகுமதி

இதற்குள் கீதாஞ்சலியை ஒப்புயர்வற்ற புதுமைக் கவிதை என்று உலகம் போற்றத் தொடங்கியது. தாகூரின் கதைகளும் நாடகங்களும் மொழிபெயர்க்கப்பட்டுப் பரவின. டப்ளினில் Post Office அரங்கேறியது. ஸ்விடன் அறிஞர் ஒருவர் கீதாஞ்சலியை

மூலத்திலும் மொழிபெயர்ப்பிலும் படித்து வியந் தார். ஸ்வீடிஷ் அகடமி (ஸ்வீடன் புலவர் குழு) கீதாஞ்சலியைக் கொண்டாடி அதற்கே அந்த ஆண் டின் நோபெல் வெகுமதியை அளித்தது. நோபெல் வெகுமதி எண்ணுயிரம் பவுன்: இலட்சத்து இருபதினு யிரம் ரூபா. அத்துடன் நோபெல் பத்திரம், மெடல் சேர்ந்தன. இந்த வெகுமதியைக் கேட்டுத் தேச மெல்லாம் உள்ளம் பூரித்தது. எங்கள் வீட்டில் அன்று இரவீந்திரர் படத்திற்கு ஆராதனை செய்து திருவிழாக் கொண்டாடினேம். வங்காளிகளின் உற்சாகத்திற்கு அளவில்லை; கல்கத்தாவிலிருந்து கூட் டம் கூட்டமாக வங்க அறிஞர் சாந்திநிகேதனுக்கு யாத்திரை செய்தனர். அங்கே வெற்றித் திருநாள் நடந்தது. ஜகதிச சந்திர வசு கவிக்குப் புகழ்மாலை சூட்டினர். தாகூருக்கு நோபெல் வெகுமதியின் பெருமைகூடத் தோன்றவில்லை; நம் கவிகளை நாமே மதிக்காது, வெள்ளைக்காரர் போற்றிய பிறகே போற்றும் சிறுமையை நினைந்தார்; தமது நாட்ட வரின் மந்தத்தைக் கடிந்தார்; அவர் அப்படிக் கடு மையாகப் பேசியதும் நியாயந்தான் என்று விபின சந்திர பாலர் எழுதினர். அப்போது இந்தியாவில் பப்ளிக் ஸர்விஸ் கமிஷன் அங்கத்தினராயிருந்த ராம்ஸே மக்தொனல்து, தாகூரைக் கண்டு மகிழ்ந்து, சாந்திநிகேதனைப் பற்றி Daily Chronicle-க்கு ஒரு கட்டுரை எழுதினர். கல்கத்தாச் சர்வகலாசாலை தாகூருக்கு டாக்டர் பட்டம் அளித்தது (26-12-1913). அதற்காகச் சர்க்கார் மாளிகையில் புலவர் கூட்டம் நடந்தது; ஹார்டிஞ் பிரபு தலைமை வகித்துப் பட்ட மளிக்கையில் "இரவீந்திர் இசைக்கவிதை (Lyric),

நாடகம், உரைநடை மூன்றிலும் சிறந்தவர் ; அவர் வங்கமொழிக்குச் செய்த சேவை அளப்பரிது. அதனால் அவர் இன்று இந்தியக் கவியாக, ஆசியக்கவியாக மட்டுமல்ல, உலகக்கவியாக விளங்குகிறார். அவர் கவிகள் மிக வுயர்ந்த ஆத்மிக அழகு நிறைந்தவை" என்றார். கார்மிகேல் பிரபுவே ஒரு சிறப்பான கூட்டம் கூட்டித் தாகூருக்கு நோபெல் பதக்கமும் பத்திரமும் அளித்தார். இந்த வெகுமதியைக் கொணர்ந்த கீதாஞ்சலியை ஆராய்வோம்.

---

## 24. கீதாஞ்சலி

கீதாஞ்சலி, நெய்வேத்யம் கேயா கீதாஞ்சலி பத்திரிகையில் வந்த சில கவிதைகள்—இவற்றினின்றும் தொகுக்கப்பெற்றது. அது 103 மலர்களைக் கொண்ட அன்புமாலை. அதைத் தாகூர் வசனத்திலே தான் மொழிபெயர்த்தார். மொழிபெயர்ப்பு மூலத்தின் உணர்ச்சியை நன்றாகக் காட்டுகிறது. இதுவே தாகூர் நூல்களின் சிறந்த மொழிபெயர்ப்பு. இந்த மொழிபெயர்ப்பைப் படித்ததுமே W. B. ஈட்ஸ் என்னும் கவியரசர் உள்ளக்கிளர்ச்சி கொண்டார் ; அதைத் திருப்பித் திருப்பிப் படித்தார் ; சுவைத்தார். வரிக்கு வரி இனித்தது ; ஒவ்வொரு வரியும் அவர் கருத்தை அள்ளியது ; உலகத்துயரை மாற்றியது ; மனத்தை உயர்த்தியது இரவீந்திரரைப்பற்றி ஈட்ஸ் விசாரித்தார் : வங்கநண்பர் சொன்னதைக் கேட்கக் கேட்க அவர் வியப்பு அதிகரித்தது. "இந்தியக் கவிகளில் சிறந்தவர் தாகூர் ; இது தாகூர் சகாப்தம் ;

அவர் கவி வங்க வுலகெங்கும் வழங்குகிறது; பத்தொன்பது வயதில் அவர் எழுதிய நாவல் புகழ் பெற்று விளங்குகிறது, அவர் நாடகத்தைக் கல்கத்தாவில் நடிக்கிருர்கள்; அவர் காதற்கவிகள் வங்க இலக்கியத்திலேயே மிகச் சிறந்தவை. 55-வயதிற்குப் பிறகு குடும்பத்தில் நடந்த துக்கசம்பவங்களால் அவர் மனம் வேதாந்த மயமானது. அவர் கவிதை ஞானத்தில் தோய்ந்து மலர்ந்தது; ஆனல், அவர் வாழ்வை வெறுப்பவரல்லர்; வறட்டுத் துறவு அவருக்குப் பிடிக்காது; வாழ்வுக்கலையை அவர் போற்றுகிருர்." என்று வங்காளிகள் சொல்ல ஈட்ஸ் கேட்டார். கவியையும் கவிதையையும் கண்டு அவர் வியந்துபோனர்; கீதாஞ்சலியில் தம் வாழ்வின் கனவுகளெல்லாம் கண்டார்; அதை மீண்டும் மீண்டும், தினமும் படித்தார்; இரயிலில், மோட்டாரில் போகும்போதும், ஓட்டல்களில் உண்ணும் போதுங்கூட அதைப் படித்துருகினர்; "இந்தக் கவிதையைப் பண்டிதரும் பாமரரும் படிப்பார்கள்" என்ருர்; தாகூரின் ஆன்ம மலர்ச்சியும் இயற்கைச் சொக்கும் ஒவ்வொரு மலரிலும் விளங்கியதைக் கண்டு வியந்தார். கீதாஞ்சலியிலும், தாகூரின் மற்ற நூல்களிலும் புதிய பல கருத்துக்கள் உள்ளன; அவற்றிற் சிலவற்றை இங்கே தேர்ந்து தருவாம்.

---

## 25. தாகூர் வாணி

*1.* இறைவ, என்னை இறுதியற்றவனுக்கினை; உன் இச்சை அப்படி; இந்த மெல்லிய பாண்டத்தைக் கொட்டிக் கொட்டி என்றும் புத்துயிர் நிரப்பு

கிறாய். இந்த நாணற்குழலை நீ மலைக்கும் கணவாய்க்கும் கொண்டு சென்று, அதில் என்றும் புதிய பண்களை உயிர்க்கிறாய்.

2. இசையின்ப வெறியால் இறைவனான உன்னை 'நண்பா' என்றழைக்கிறேன்.

3. உன் இசையொளி உலகை ஒளி செய்கிறது; உன் பாட்டுயிர்ப்பு விண்ணிற்கு விண் தாவுகிறது; உன் பாட்டு தடைக்கற்களை உடைத்தோடுகிறது.*

ஆ! உனது எல்லையற்ற கீதவலையில் என் உள்ளத்தைப் பிடித்தாய்—இறைவா!

4. என்னுயிர்க்குயிரே, என் அங்கங்களிலெல்லாம் உன் ஜீவஸ்பரிசம் இருப்பதை யறிவேன்; என் உடலை எப்போதும் சுத்தமாக வைத்துக்கொள்ள முயல்வேன். என் மனத்தில் அறிவொளி தூண்டும் உண்மை நீயென் றறிவேன்; என் நினைப்புகளினின்றும் பொய்களை விலக்க எப்போதும் முயல்வேன். என் உள்ளச் சந்நிதியில் நீ இருப்பதை அறிவேன்; என் உள்ளத்தில் தீமைகள் புகாது விரட்டி, என் அன்பை மலர்த்திவைக்க எப்போதும் முயல்வேன். உனது சக்தியே எனது கர்மத்தின் பலம் என்றறிவேன்; என் செயல்களில் உன்னை விளக்கவே முயல்வேன்.

---

*இத்தகைய கீதாஞ்சலியைத்தான் பழம் பண்டிதர்கள் "பாலோ நாய்"—நன்றாயில்லை என்று மறுத்தனர்; "தாகூர் வங்க பாஷையையே கெடுத்து விட்டார், பாமரக்கவி!" என்றனர். அவர் வாக்கியங்களைப் பரீட்சைப் பத்திரங்களில் மாணவரைத் திருத்தச் சொல்லிக் குறித்தனர். கவிக்கும் பண்டிதருக்கும் நெடுநாள் கசப்பிருந்தது.

5. இச்சிறு மலரைப் பறித்தெடுத்துக்கொள்; தாமதியாதே! அஃது உதிர்ந்து மண்ணில் விழுந்துவிடு மென்று அஞ்சுகிறேன். அஃது உனது மாலையில் இடம் பெருதிருக்கலாம்; நீ அதை உன் திருக்கையால் கிள்ளி யெடுக்கும் பெருமையையாவது தா! என்னை யறியாது நாள் போய்விடும்; பூஜை வேளை தப்பிப் போகும் என்று அஞ்சுகிறேன். அதன் நிறம் பளிச் சென்றில்லை; மணமும் மந்தம்; இருந்தாலும் நேர மிருக்கும்போதே இந்த மலரை உன் பூஜைக்காகப் பறித்துக் கொள்!

6. என் பாட்டு அலங்காரங்களைக் கட்டி வைத்து விட்டது; அணிமணிகளால் அது பெருமை கொள்வ தில்லை. அணிகள் நமது சேர்க்கையைக் கெடுக்கும். அவை எனக்கும் உனக்கும் இடையே தடையாகும்; அவற்றின் சலசலப்பு உனது இரகசியப் பேச்சை அமுக்கிவிடும்.

என் கவிச் செருக்கு உன்னைப் பார்த்ததும் வெட்கி மறைகிறது. கவியரசே, உனது காலடியில் அமர்ந்தேன்; நீ இசை நிரப்ப, என் வாழ்வைப் புல்லாங்குழல் போல எளிமையாக, நேர்மையாக ஆக்கவருள்! அதுபோதும்.

7. இளவரசுபோலே அலங்கரித்துக் கழுத்தில் தங்கச் சங்கிலி குலுங்கும் குழந்தை, விளையாட்டி லுள்ள இன்பமெல்லாம் இழக்கிறது; அடிக்கடி அணியே அதற்குத் தடையாகிறது. அது கசங்கும், அழுக்கேறும் என்றஞ்சி அஃது உலகினின்றே ஒதுங்கி, நடமாடக்கூடப் பயந்து நிற்கிறது. தாயே! நலமான தரைமண்ணை மறுத்தால், பொதுஜனச் சந்தையிற்புகும் உரிமையைப் பறித்

தால், அந்த அலங்காரப் பந்தத்தினல் ஒரு பயனு மில்லை.

8. முட்டாள், உன்னையே உன் தோளில் சுமப் பாயா! அட தரித்திரமே, உன் வீட்டு வாசலிலேயே பிச்சை கேட்பாயா! எல்லாம் வகிக்க வல்ல அவன் மேல் பாரத்தைப் போட்டுக் கவலையில்லாதிரு; திரும் பிப் பாராதே! ஆசையின் மூச்சுப் பட்டாலும் அது ஜீவ தீபத்தின் சுடரை அவித்து விடும்; அஃது அசுத்தமானது; அதன் ஆபாசக் கையால் நிவேதனத் தைத் தொடாதே! இறைவனே, புனிதமான அன் பின் நிவேதனத்தையே ஏற்றுக்கொள்!

9. நான் உன்னை வணங்க முயலும்போது, தீனர்களிடை, தாழ்ந்தவர்களுடன் நிற்கும் உனது திருவடியை எனது வணக்கம் தொட முடியவில் லையே! எளியர், ஈனர், பதிதர்களிடையே எளிா ஆடை யணிந்து நீ உலாவுகின்ருய்; அங்கே அகம் பாவம் செல்லாது.

10. இந்த மந்திரம், தோத்திரம், ஜபமாலையுருட் டல்—எல்லாம் விடு! இத் தனி யிருட்கோயில் மூலையில் கதவுகளை யடைத்துக்கொண்டு, நீ யாரைத் தொழு கிருய்? கண்ணைத் திறந்து பார்; கடவுள் உன் முன் இல்லை! விவசாயி கடினமான தரையை உழுகிருன்; ரஸ்தாக் கூலி கல்லுடைக்கிருன்; அங்கே அவன் இருக்கிருன். அவன் வெயிலிலும், மழையிலும் அவர்களுடன் இருக்கிருன்; அவன் ஆடை புழுதி யேறி யிருக்கிறது. உனது காஷாயத்தைக் கழற்றி வை; அவனைப்போல நீயும் மண்ணில் உழை!

11. முக்தி? எங்கே முக்தி! நம் இறைவனே சிருஷ்டிபந்தங்களை மகிழ்வுடன் ஏற்றுக்கொண்டுள்

ளான்; அவன் நம்முடனெல்லாம் என்றும் இணைந் திருக்கிறான். நிஷ்டைகளி லிருந்து வா; உன் பூவை யும் புகையையும் அப்படி வை! உன் ஆடைகள் கிழிந்து அழுக்கானா லென்ன? அவனைச் சந்தித்து அவனுடன் நெற்றி வேர்வை சொட்ட உழை!

12. பிரயாணி அயலா ரொவ்வொருவர் வீட்டுக் கதவுகளையும் இடித்துத் தன் வீட்டைச் சேர்கிறான்; புறவுலகில் சுற்றித் திரிந்தே மனிதன் உள்ளக் கோயி லைச் சேர்கிறான். கண்குவித்து "இதோ நீ!" என்னு முன்பு என் விழிகள் எங்கெங்கோ சுற்றித் திரிந்தன.

13. ஒளி! ஆ, ஒளி எங்கே? ஆர்வக் கனலால் அதைத் தூண்டு! விளக்கிருக்கிறது; சுடரே யில்லை— உன் விதி அப்படி, நெஞ்சே! இதைவிடச் சாகலாம்! 'துக்கம் உன் கதவை இடிக்கிறது; உன் நாதன் விழித்திருக்கிறான், இரவின் இருளில் உன்னைக் கல விக்கு அழைக்கிறான்' என்பதே அதன் செய்தி. இடி யிடிக்கிறது; காற்று வீறிட்டடிக்கிறது. இரவு கருங் கல்போல் இருண்டது; உனது காலம் இருளில் கழிய வேண்டா; உனது உயிரால் அன்பு விளக்கைத் தூண்டு!

14. உன்னிடம் விலைகாணா நிதியுள்ளது; நீ என் சிறந்த நண்பன் என்பது உண்மை. ஆனால் என் அறை யில் குவிந்த அற்பப் பொருள்களை ஒழிக்க மன மில்லையே!

15. என் பெயருடையவன் இந்த இருட் சிறை யில் அழுகிறான். நான் ஓயாமல் இந்தச் சுவரை வளைக்கிறேன்; நாளடைவில் இச் சுவர் வானளாவ உயர்ந்து, அதன் இருளான நிழலில் எனது சொரூ பத்தையே காணமுடியாமல் இருக்கிறேன்.

16. "கைதியே, உனக்கு விலங்கு மாட்டியது யார்?"

கைதி சொன்னான்: "என் இறைவன்; உலகில் எல்லாரையும்விடச் செல்வமும் செல்வாக்கும் பெற நினைத்தேன்; அரசனுக்குச் சேரவேண்டிய பணத்தை எனது பொக்கிஷத்தில் குவித்தேன். உறக்கம் வந்ததும் என் இறைவன் படுக்கையில் நான் படுத்தேன்; எழுந்தேன்; நானே எனது நிதிச்சாலையில் கைதியா யிருந்தேன்".

"கைதியே சொல்! இந்தக் கெட்டியான விலங்கைச் செய்ததார்?

கைதி சொன்னான்: "நானே மிகவும் கவனமாக இந்தச் சங்கிலியைச் செய்தேன். எனது வெல்லொணாத் திறமையால் உலகை அடிமையாக்கிச் சுயேச்சையாக ஆள நினைத்தேன்; அதற்காகப் பெரிய உலைமூட்டி இரவும்பகலும் கடுமையாகச் சம்மட்டியடித்து உலகைக் கட்டச் சங்கிலி தயாரித்தேன். வேலை முடிந்து, கொலுசுகள் கெட்டியாக இணைந்ததும், அந்தச் சங்கிலியே விலங்காகி என்னை இறுகத் தளைத்தது."

17. இறைவனே, 'என் எல்லாம் நீயே' என்று சொல்லுமளவு வாக்கு எனக்கிருக்கட்டும். யாங்கும் உன்னை உணர்ந்து, எதிலும் உன்னைக் கண்டு, ஒவ்வொரு நொடியும் என் அன்பை உனக்கு நிவேதிக்கும் அளவே என்னிடம் இச்சை யிருக்கட்டும்.

உன்னை ஒருபோதும் மறைக்காத காட்சியே எனக்கு மிஞ்சட்டும். உன் இச்சைக்குக் கட்டுப்பட்டு, உன் காரியம் என் வாழ்வில் நிறைவேற

எவ்வளவு போதுமோ, அவ்வளவு பந்தமே எனக்கிருக்கட்டும்—அதுவே உன் அன்புத் தளே.

18. எங்கு நெஞ்சம் அஞ்சாதிருக்குமோ, எங்கு தலை உயர்ந்து நிமிருமோ, எங்கு அறிவு சுயேச்சையாகுமோ, எங்கு குறுகிய வீட்டுச் சுவர்களால் உலகம் சின்னுபின்னமாகப் பிரிந்திராதோ, எங்கு உண்மையின் ஆழத்திலிருந்து மொழிகள் வருமோ, எங்குச் சலியா முயற்சி பரிபூரணத்தை நோக்கிக் கைகளைப் பரப்புமோ, எங்குப் புத்தியாகிய தெள்ளாறு செத்த பழக்கமாகிய வறட்டு வனுந்தர மண்ணில் வழிகெட்டலையாதோ, எங்கு மனம் உன்னுல் மேன்மேலும் விரிவான சிந்தனைக்கும் செயலுக்கும் முன்னேற்றப்படுமோ — அங்கு, அந்தச் சுதந்தர விண்ணில் எந்தையே, எனது நாடு விழிப்புறுக !

19. இறைவா, உனக்கு என் பிரார்த்தனை இதுவே : "என் நெஞ்சத்திலிருந்து வறுமையை வேரறுத்துவிடு ; இன்பதுன்பங்களை எளிதாகத் தாங்கும் உறுதியருள்; எனது அன்பு ஜனசேவையில் பயனுகும் பலத்தைத் தந்தருள் ; ஒருகாலும் ஏழைகளை மறுக்காமலும், அகம்பாவம் பிடித்த வலியரைப் பணியாமலும் இருக்கும் திண்மையை எனக்கருள்; அற்பமான தினசரி விவகாரங்களிலிருந்து என் மனத்தை உயர்த்தும் வைராக்கியத்தை எனக்கருள் ; உன் அன்பிற்கும் இச்சைக்குமே எனது திறமையை அர்ப்பணிக்கும் உறுதியை எனக்கருள் !

20. நீயே எனக்கு வேண்டும், நீயே!—இப்படி என் உள்ளம் ஓயாமல் ஜபம் செய்யட்டும். இரவும் பகலும் என்னைக் கலைத்திழுக்கும் ஆசைகளெல்லாம் பொய் ; அடிமட்டும் வெறுமை.

21. என் உள்ளம் கடினமாகி வறண்டுபோகும் போது, கருணைமழையை என்னுள் பொழிவாய்! ஜீவன் அருளை இழந்தபோது ஒரு பாட்டதிர வா! வேலைப்புயல் என்னைச் சூழ்ந்து மோதிப் பரமார்த் தத்தை மறைக்கும்போது, இறைவனே உனது சாந் தத்தையும் அமைதியையும் எனக்குக் கொண்டு வா! அரசே, என் பிச்சைக்கார மனம் ஒரு மூலையில் முடங் கும்போது, கதவைப் பளிச்செனத் திறந்துகொண்டு இராஜாங்கமாக வா!

22. துறவறத்தில் என் முக்தி யில்லை. ஆயிரம் இன்பத் தளைகளால் என்னை விடுதலை அணைகிறது. ஆம், என் மயக்கங்களெல்லாம் இன்ப ஒளியில் எரிந்துபோகும்; என் ஆசைகளெல்லாம் அன்புக் கனிகளாகப் பழுக்கும்.

23. கவிஞரின் மொழிகளுக்கு, மாந்தர், விருப் பப்படி பொருள் கொள்ளுகின்றனர். எனினும், அவற்றின் இறுதிப் பொருள், இறைவ, நின்னையே குறிக்கிறது.

24. இறைவனே, பொருள்களின் உள்ளத்தில் மறைந்திருந்து, விதைகள் முளை கிளம்ப ஊட்டுகிருய், மொட்டுகளை மலர்ப்பிக்கிருய், மலர்களைக் கனியாக்கு கிருய்.

25. சாவே, வாழ்வின் இறுதி நிறைவே, வா; என் காதில் ஓது! ஒவ்வொரு நாளும் உன்னை எதிர் பார்த்திருந்தேன். உனக்காகத்தான் வாழ்வின் இன்ப துன்பங்களைப் பொறுத்திருந்தேன்; என் பெருமை, என் உரிமை, என் ஆசை, என் அன் பெல்லாம் ஆழ்ந்த அந்தரங்கத்தில் உன்னையே நோக் கின. முடிவாக ஒரு கண் பாராய்! என் உயிர்

என்றும் உனக்கே யாகும். பூத் தொடுத்தாயிற்று; மணாளனுக்கு மாலை தயாராயுள்ளது. மணவினை யானபின், காதலி மனையை விடுத்துத் தனியே இரவின் ஏகாந்தத்தில் தன் நாதனைக் கூடுவாள்.

26. இங்கிருந்து செல்லும்போது, இதுவே என் இறுதி மொழியாகுக: "நான் கண்டது இணையற்ற பொருள். ஒளிக் கடலில் விரிந்த இந்தத் தாமரையில் மறைந்த தேனைப் பருகினேன்; தன்யனானேன். எண்ணிறந்த உருவங்கள் ஆடும் இந்த அரங்கத்தில், நானும் விளையாடினேன். இங்கு அருவான இறைவனை நான் கண்டுகொண்டேன்."

27. இறைவனே, நின்னுரை எளிது; நின்னையுரைப்போர் பேச்சு அவ்வாறில்லை. நின் விண்மீன்களின் குரலும், நின் மரங்களின் மௌனமும் எனக்கு விளங்குகின்றன.

28. மனிதனே, நீ மொட்டை மலர்த்த முடியாது; நீ தொட்டால் அது மாசுறும்; மொட்டை மலர்த்த வல்லான் எளிதில் அவ்வாறு செய்கிறான்; ஒரு பார்வை பார்க்கிறான்; அதன் நரம்புகளில் உயிர்த்தேன் ஊறித் ததும்புகிறது.

29. இவ்வுலகை என் கண்களால், உறுப்புக்களால் கொஞ்சினேன்; அதை என்னுள்ளத்தில் எண்ணில்லாது கட்டி யணைந்தேன். உலகும் என்னுயிரும் ஒன்றாகும்படி, இரவும் பகலும் என் எண்ணங்களால் வெள்ளமாக நிரப்பினேன். என் உயிரை நேசிக்கிறேன்; ஏனெனில், என்னுடன் வானின் ஒளி நெய்யப்பட்டுள்ளது (woven).

30. இறைவனே, அபாயங்களினின்று காப்

பாற்ற முறையிடாது, அவற்றை அஞ்சாது எதிர்க்கவே வேண்டுகிறேன்.

என் துன்பத்தைத் தணிக்க வேண்டேன்; அதை வெல்ல மனவுறுதி வேண்டுகிறேன்.

மனம் பதறி இரட்சிப்பை வேண்டேன்; என் சுதந்தரத்தைப் பெறும் பொறுமையையே வேண்டுகிறேன்.

எனக்கு வெற்றி கிடைத்தால்தான் உனக்கு இரக்கமுள்ளது என்றுணரும் கோழையாகாது, தோல்வியிலும் என்னை நீ கைவிடவில்லை என்று காண அருள்!

31. பல வழிகளில் சென்று பல பொருள்களைக் குவிக்க வேண்டா; என் மனத்தைப் பலர் நுகத்தடிக்குக் குனியும்படி செய்ய வேண்டா! இறைவனே, உன் அடியான் என்னும் பெருமையும், துணிபும் கொண்டு நான் தலைதூக்கவருள்!

32. ஜன சமுதாயத்தின் மனத்தை நடத்தும் முதல்வனே, தலைவனே, பாரதச் செல்வத்தின் கடவுளே! உனது சுப நாமம் நாடெங்கும் விழித்தெழட்டும்; எங்கும் உனது வெற்றி எதிரொலிக்கட்டும்; உனது உதார வாணியைக் கேட்டு, ஹிந்து, புத்தர், சிக்கியர், ஜைனர், பாரசிகர், இஸ்லாமியர், கிறிஸ்தவர், மேனாட்டார், கிழக்கு நாட்டாரெல்லாரும் உன் அரியணைமுன் கூடி அன்பிசைக்கட்டும்! ஜன சமூகத்தை ஒற்றுமைப்படுத்தும் கடவுளே, வெற்றி! வெற்றி! துயர்களை ஒழிப்பவனே, எம்மை இடர்களினின்று காப்பாற்று; இருளை விலக்கு; அச்சத்தை ஒழி; நவஜீவன ரசத்தைப் பொழி! இராஜேஸ்வரா, வெற்றி!

புண்ணியனே, ஜாக்ரத பகவானே, ஆசை என் மனத்தை மோகத்தாலும் புழுதியாலும் குருடாக்கும் போது, உன் ஒளியுடனும் இடியுடனும் வா!

33. இலக்கணத்தைப் பற்றி வசந்தவட்டம் என்னும் நாடகத்தில் தாகூர் சொல்லுகிறார்: "ஐயா, கவியின் வீட்டை யிடிக்க ஒருவரும் சம்மதிக்கவில்லை; முடிவில் தர்க்க வியாகரணக் கலாசாலைப் பண்டிதர்கள் தங்கள் ஆயுதங்களுடன் கவிமனையை இடிக்கப் புகுந்தனர்."

"பைத்தியமே, கவிமனையை இடிக்கவா! அதற்குப் பதிலாகச் சோலைப் பறவைகளையெல்லாம் கொன்று கறியாக்கலாமே! இதைக் கேட்டால் கவிதாதேவி தன் வீணையை என் மண்டையில் போட்டு உடைப்பாள்."

34. நட்சத்திரங்களெல்லாம் என்னுள் மின்னுவதாக உணர்கிறேன்; உலகம் எனது ஜீவனில் வெள்ளம்போல் பாய்கிறது. மலர்கள் என் உடலிற் பூக்கின்றன; தரையிலும் நீரிலும் உள்ள இளம் பொலிவெல்லாம் என் இதயத்தில் தூபம்போல எறுகின்றன. எல்லார் உயிர்ப்பும் என் சிந்தனைக் குழலில் விளையாடுகிறது.

35. கலையரசிமுன் கவித்தொண்டன் வருகிறான்:

அரசி: காலங் கடந்து வந்தாயே, உன் விருப்பமென்ன?

தொண்டன்: அரசி, நான் உனது பூந்தோட்டக்காரனாயிருக்கிறேன்; என் வாளையும் ஈட்டியையும் மண்ணில் எறிகிறேன். என்னை மன்னரிடம் தூதனுப்பாதே; புதிய போர்வெற்றிக்கு ஏவாதே; உன் பூந்தோட்டக்காரனா யிருக்கச் செய்!

அரசி: நீ என்ன வேலை செய்வாய்?

தோண்டன்: நீ காலையில் உலாவும் பாதையில் பசும்புல் தழைக்கச் செய்வேன். மலர்கள் உன் தளிரடிபட்டு நலியக் காத்திருக்கும்; சப்தாபரண மாத்தில் ஊஞ்சல்போட்டு உன்னை ஆட்டுவேன்; மாலை மதி இலைகள்வழியே நிலா வீசி, உன் இரவிக்கையைக் கொஞ்சும். உன் பள்ளியறை விளக்கில் வாசனைத் தைலம் விடுவேன்.

தாகூர் நூல்களில், கீதாஞ்சலிக் கடுத்தபடி, **Post offiice, King of the Dark Chamber** ஆகிய இரண்டு நாடகங்களும் உலகப் புகழ்பெற்றவை. **Post office**-ஐப் பற்றி முன்பே சொன்னோம். **King of the Dark Chamber**-ஐ அவர் ஆர்வமுடன் படித்தார், நடித்தார். அதன் சுருக்கத்தை இங்கே சொல்வோம்; தாகூர் கதைத் திறமையும் அதில் விளங்கும்.

---

## 26. இராஜா - ராணி நாடகச் சுருக்கம்
### (The King of the Dark Chamber)

குறுகிய தெருக்களுள்ள ஒரு நகரம்; அதன் அரசன் வெளியே வருவதில்லை; எப்போதும் இருட்டறையிலேயே இருப்பான். இது ஜனங்களுக்கு வியப்பாயிருந்தது. விருபாக்ஷன் என்பவன் "இராஜா அவலட்சணம்; வெளியேவர வெட்கப்பட்டு உள்ளே அடைந்து கிடக்கிறார்" என்று எங்கும் பேசுகிறான். இராஜபக்தர் அவனை வெறுக்கின்றனர். நகரில் திருவிழா நடக்கிறது. அதற்கு பாவதத்தன், கௌண்டில்யன் என்னும் இருவர் புதிதாக வருகின்றனர்; அவர்

கள் "இந்த ஊருக்கு அரசனே இல்லை" என்கிறார்கள். அவர்களை வரவேற்ற ஜனார்த்தனன், "இங்கே திரு விழா அமோகமாக நடக்கிறது; அரசனில்லாத ஊரில் இவ்வளவு ஒழுங்காக எல்லாம் நடக்குமா? அரசன் இருக்கிறான், நம்புங்கள்!" என்கிறான். ஆனால் அவ னும் அரசனைப் பார்த்ததில்லை. அச்சமயம் "காதலன் என் உள்ளத்தில் இருக்கிறான்; அதனாலேதான் அவனை எங்கும் காண்கிறேன். அவன் என் கண் ணின் மணி; அதனாலேதான் அவனை எங்கும் காண் கிறேன். அவன் வார்த்தையைக்கேட்கப்போனேன்; முடியவில்லை; திரும்பினேன்; என் பாட்டிலேயே அதைக் கேட்டேன்; பிச்சைக்காரன் போல வீடு வீடாக அவனைத்தேடும் நீங்கள் யார்? என் இதயத் திற் புகுந்து பாருங்கள்; என் கண்ணீரில் அவன் முகத்தைக் காணுங்கள்!" என்று சிலர் பாடி வரு கின்றனர். அச்சமயம் "இராஜா வருகிறார், வழிவிடு!" என்று சேவகர் கூறுகின்றனர். சிலர் நம்பவில்லை. "அரசர் திருவிழாவைத் தாமே நடத்த வருகிறார்; பார் அவர் கொடியை! அதில் கிஞ்சுகப்பூ காண்கி றது" என்கின்றனர் மாதவன் முதலிய இராஜபக்தர். "அதெல்லாம் சுத்தப் பொய்; அரசன் வரிமட்டும் வாங்கிக்கொள்ளுகிறான்! அவனுக்கு எவ்வளவோ தொலைத்தேன்; பிச்சைக்காரன்போல் அவன் வாச லில் நின்றேன்; எல்லாம் இடம்பம், வெளிச்சம்! ஜனங்களுக்கு ஒரு நல்ல வார்த்தை சொல்லி அன் பைக்காட்ட ஏதாவது தருவானென்று பார்த்தால் நல்ல நாள் அகப்படவில்லையாம்......போலிச்சாக்கு! வரிவாங்க மட்டும் எல்லாநாளும் நல்ல நாளாய் விடு கிறது! அரசன் இருப்பதே பொய் என்கிறார்கள்!"

என்று வம்பளக்கிறன் ஒருவன். மாதவன் "அரசன் இருக்கிறன்; அவன் ஆணையைப் பணிவதே என் கொள்கை; மெய்யோ பொய்யோ நமக்கென்ன? அரசனை நிதானிக்க நாம் யார்? போலியரசனயிருந் தாலும் என்ன முழுகிப்போயிற்று?..." என்கிறன். இதற்குள் அரசன் வருகிறன். (சுவர்ணன் என்பவன் அரச வேடம்போட்டு வருகிறன்.) "ஆ, ஆம், அர சன்! சிலை வடித்ததுபோல் அழகன்! அரசர் வாழ்க! அரச, தரிசனத்திற்கே காத்திருந்தோம்; எங்களை நினைப்பில் வைக்கவேண்டும்!". "அரசே, நான் இவனுக்குமுன் வந்து தங்கள் சமூகத்திற் காகக் காத்திருக்கிறேன்; கிருபை செய்யவேண் டும்": "அரசே, நான் விவிஜ தத்தன், நான் பத்ர சேனன்; இவர்களுக்கு முன்னே காத்திருக்கிறேன்; நினைப்பிருக்க வேண்டும்" என்று சிலர் போட்டி போட்டுக்கொண்டு அரசன் சலுகையை வேண்டு கின்றனர்.

அரசன்: உங்கள் பணிவைக்கண்டு மகிழ்ந்தேன்.

விவிஜ நந்தன்: அரசே, எங்கள் முறையிடுகளைக் கேட்கவேண்டும். எங்கள் குறைகள் பல; அவற் றைத் தீர்க்கத் தாங்களே கதி.

அரசன்: உங்கள் குறைகள் தீரும்.

அரசன் செல்கிறன். கூட்டத்தில் இடித்துப் புகுந்து சிலர் அரசனைக் குலாம் போடுகின்றனர். ஒருவருக்கொருவர் போட்டி, பொருமை, சண்டை! "அவன் மகா இராஜவிசுவாசிபோல் வேஷம் போடு கிறன்; இவன் பாசாங்கு செய்கிறன்; நானே உண்மை யன்பன்" என்று சிலர் தம்மைப் போற்றிப் பிறரைத் தூற்றுகின்றனர்.

வந்தவன் இராஜாதாஞ என்ருெரு சந்தேகம் கிளம்புகிறது. அனுபவம் நிறைந்த தாத்தா வொருவரைக் கும்பன் அழைத்து வருகிருன். "அரசர் இப்போதுதான் இந்த வழியே வந்தார்; ஆயிரக்கணக்கான ஜனங்கள் அவரைச் சூழ்ந்திருந்தனர். அரசர் மெழுகால் வடித்த சிலைபோல் அவ்வளவு அழகாயிருந்தார்! 'ஐயோ, வெய்யில் பட்டால் உருகிப் போவாரே!' என்று அவரைக் காக்கக்கூட விரும்பினேன்; அவர் கொடியில் கிஞ்சுகம் இருந்தது" என்கிருன் கும்பன்.

**தாத்தா:** "அட, சீ! இவர் அரசரில்லை; என் அரசர் இப்படி ஆடம்பரமாகத் தனிச்செருக்குடன் வரமாட்டார். அவர் பொதுஜனங்களுடன் கலந்திருப்பார். அவர் கொடியில் தாமரைக்குள் மின்னல் காணும். கட்டியக்காரன், சேனை, பரிவாரம், கொட்டு மேளம்—இவையெல்லாம் அவருக்கில்லை. இப்படி அவரைக் காண்பதரிது."

**கும்பன்:** "அப்படியாஞல் அவரைக் கண்டவரில்லையா?"

**தாத்தா:** "சிலர் உளர்."

**கும்பன்:** "அவர்கள் கேட்டதை அரசன் தருவாஞ?"

**தாத்தா:** "அரசனைக்கண்டவர் யாதும்கேளார்; பிச்சைக்காரர் அவனை அறிய முடியாது. நீங்கள் அரசன் என்பவன் பெரிய பிச்சைக்காரன். இன்று நீங்கள் அரசன் என்று ஏமாறிய ஆடம்பரப் பேர்வழி ஒரு பெரிய பிச்சைக்காரன்....." என்கிருர்.

## II

*அரண்மனை: மற்ற அறைகளில் ஒளி வீசுகிறது; ஓர் அறை இருட்டாயிருக்கிறது.*

**அரசி சுதர்சனா:** இந்த அறை ஏன் இருண்டிருக்கிறது? வாசல்கூடத் தெரியவில்லையே!

**சுரங்கமா:** அரசி, இருட்டுக்கும் ஒளிக்கும் வித்தியாசம் தெரியவே இந்த அறை இருக்கிறது; இஃது உலகின் உள்ளத்தில் உள்ளது. அரசன் இதை உனக்காகவே அமைத்தான்.

**அரசி:** எனக்காக இருட்டறை அமைப்பானேன்?

**சுரங்கமா:** மற்றவர்களை வெளிச்ச அறைகளில் பார்க்கலாம்; அரசனை இந்த இருட்டறையிலேதான் நீ சந்திக்கலாம்.

**அரசி:** ஐயோ, நான் இருட்டில் இருக்கமாட்டேன்; சுரங்கமா, கொண்டுவா விளக்கு! உனக்கொரு சரடு தருகிறேன்.

**சுரங்கமா:** ஐயோ முடியாது; இந்த அறையை இருட்டாகவே வைத்திருக்க அரசர் ஆணை.

**அரசி:** அடி, உன் அப்பனை அடித்து விரட்டிய அரசனிடம் உனக்கு இவ்வளவு பக்தி எப்படி வந்ததடி!

**சுரங்கமா:** என் அப்பன் சூதாடினான், குடித்தான். அதனால், அரசர் அவனைத் துரத்தினர். எனக்கு அப்போது கோபந்தான் வந்தது; கோபம் தணிந்த பிறகு அரசரிடம் அபாரமான அன்பு பிறந்துவிட்டது. அவரை நான் வணங்கினேன். அவர் பேரகாந்தி யுடையவர்.

அரசி: சுரங்கமா, நான் இன்னும் அரசனைப் பார்க்கவில்லை; அவர் எப்படி யிருப்பார், சொல்லடீ! அவர் இருட்டில் என்னைச் சந்தித்து, இருட்டறைக்குள் சென்றுவிடுகிறார். ஜனங்கள் பலவகையாகப் பேசுகிறார்கள். என் தாயார்கூட மாப்பிள்ளையைத் திரைமறைவாகவே பார்த்தாள்; 'அவருக்கு இணையில்லை' என்றாள். அவரை ஒரு தரமாவது காண்பேனோ? அவர் அழகாயிருக்கிறாரா?

சுரங்கமா: அரசி, அவர் உருவை "அழகு" என்னமாட்டேன்; "அழகன்" என்பது போதாது; அவன் அற்புதன், அதிசயன், ஆச்சரிய புருஷன்! ஆ அதோ—அரசன்—உலாவுகிறான்?

அரசி: எதோ? எப்படி அறிந்தாய்?

சுரங்கமா: அந்தக்காற்று, வாசனை, ஒரு காலடிச் சத்தம்......உணர்......! என் இதயத்தில் அவர் நடமாடுகிறார்; நான் இந்த இருட்டறைச் சேவகி. ஆதலால்; கண் காணாமல் அவரை உணர்வேன்.

அரசி: சுரங்கமா, எனக்கும் அவ்வுணர்ச்சி வராதா!

சுரங்கமா: வரும்; உன்னுளும் ஒரு நாள் இந்த உணர்ச்சி எழும். உன் சோக மோக தாபங்கள் அடங்கிய அமைதியில் அந்த உணர்ச்சி வரும்.

அரசி: நீ சேவகி; உனக்கு அந்த உணர்ச்சி வந்ததேன்? நான் அரசி; எனக்கு வாராததேன்?

சுரங்கமா: இந்த இருட்டறையை அவர் காக்கச் சொன்னார்; 'வெளிச்சமான அறை தா' என்றுகூடக் கேட்காமல் அவர் ஆணையைக் கருத்துடன் காத்தேன். அதனால் என்னை வென்றேன்; அவர் சக்தி என்னுள் எழுந்தது. ஆ, அதோ அரசர்—இறைவா!

சுரங்கமா கதவைத் திறந்துவிட்டு வெளியே செல்கிறுள். அரசன் உள்ளே வருகிறுன். அவன் உருவம் மட்டும் புலனுகவில்லே. அரசனும் அரசியும் பேசுகிருர்கள் :

அரசி : தங்களை வெளிச்சத்தில் காணவேண்டும்.

அரசன் : என் காட்சியைச் சகிக்கமாட்டாய்.

அரசி : சகிப்பேன் ; இந்த இருட்டிலும் தங்கள் அற்புதத்தைக் காண்கிறேனே ! இருட்டில் என்னைக் காணமுடிகிறதா ?

அரசன் : ஆஹா.

அரசி : நான் எப்படி யிருக்கிறேன் ?

அரசன் : என் காதலால் விரிந்த ஆகாசத்தின் இருள் உயிர்பெற்று, எண்ணரிய நட்சத்திர ஒளியைத் தன்னுட்கொண்டு உன்னுருப் பெற்றது ; அந்த வடிவில் கற்பகாலச் சிந்தனை முயற்சி, எத்தனையோ அபிலாஷைகள், பருவ காலங்களின் எண்ணில்லா வரங்களெல்லாம் நிறைந்திருக்கின்றன.

அரசி : நான் அவ்வளவு அழகாக, அதிசயமாக இருக்கிறேனு ? எனக்கு அப்படித்தோன்றவில்லையே!

அரசன் : உன் மனக்கண்ணுடி உன்னைக் குறுக்கிக் காட்டுகிறது ; என் மனக் கண்ணுடியால் கண்டால் உன் பெருமை தெரியும். என் இதயத்தில் நீ சாதாரண வடிவன்று ; நீ நானே.

அரசி : தங்கள் கண்ணுல் காணும் வழிகாட்டுங்களேன் ! தங்களுக்கு இருட்டென்பதே பொருட்டில்லை. எனக்கு இருளில்பார்க்கமுடியவில்லையே. கல், மரம், பசு பட்சிகளைப்போல நான் வெளிச்சத்தில் தங்களைப் பார்க்க வேண்டும்.

அரசன்: சரி பார்! ஆனல் யாரும் என்னைச் சுட்டிக் காட்டார். நீயே என்னை அறியவேண்டும்.

அரசி: சம்மதம்; கோடி பேருக்கிடையே நின் ருலும் தங்களைக் கண்டறிவேன்.

அரசன்: மெத்தச் சரி; இன்று வசந்த பௌர்ணமித் திருநாள். கும்பலில் நான் இருப்பேன்; நாலா பக்கமும் சுற்றுவேன்; உப்பரிகையிலிருந்து என்னைப் பார்!

அரசி அவ்வாறே பார்க்கிருள். அதற்குள் முன் சொன்ன போலி அரசன் ஆடம்பரமாகப் பவனி வருகிருன்; அவனுடன் ஏராளமான கும்பல் செல்லுகிறது. திருநாளுக்கு வந்த அவந்தி, காஞ்சி மன்னருக்கு இந்தப் போலி இராஜாவின் வேஷம் தெரிந்துபோகிறது. ஊரில் அரசன் இருப்பதையே அவர்கள் நம்பவில்லை. அரசன் இருந்தால் இப்படிப் பஞ்சம், பட்டினி, அகால மரணம் ஏற்படுமா என்று ஜனங்கள் சிலர் ஓலமிடுகிருர்கள். காஞ்சிபன் போலியரசனுடன் அமர்கிருன்.

அரசி மேற்சொன்ன போலி அரசனைத் தன் தோழி ரோஹிணிக்குச் சுட்டிக் காட்டுகிருள். சுரங்கமா வந்தால் அடையாளம் கண்டு பிடிப்பாள் என்கிருள். "சுரங்கமா சுத்தப் பாசாங்குக்காரி; அவள் அரசனைப் பார்ப்பதாகச் சொல்வது பொய்" என்கிருள் ரோஹிணி. அரசி ஒரு தாம்ரையிலையில் பூமாலை வைத்துத் தான் பார்க்கும் அரசனுக்குச் சூட்டிவர ரோஹிணியை அனுப்புகிருள். போலி அரசனுக்குஒன்றுமேவிளங்கவில்லை. அவனுடன்உட்கார்ந்திருந்த காஞ்சி அரசன், 'அரசே, இஃது இராணி சுதர்சன அனுப்பிய மாலை' என்று தருகிருன். போலி

யரசன் வியப்புடன் 'இதுவே இன்றிரவு என் இராஜ ப்ரபாவத்தின் சிகரம்' என்று சும்மா இருக்கிறான். அவன் கழுத்திலிருந்து ஒரு தங்கச் சங்கிலியைக் கழற் றிக் காஞ்சி மன்னன் ரோஹிணியிடம் தந்தனுப்பு கிறான். இதைக்கேட்ட இராணி கவலைப்படுகிறாள்; காஞ்சி தந்த சங்கிலியைத் தான் வாங்கிக் கொண்டு, ரோஹிணிக்குத் தன் சங்கிலியைத் தருகிறாள். அரசன் தன்பால் உதாசீனமா யிருந்தது அவளைப் புண்படுத்து கிறது. போலி யரசனான சுவர்ணனை அவள் காத லிக்கிறாள்.

காஞ்சி பலே பேர்வழி! "அரசனில்லாவிட்டால் ஜனங்களுக்குச் சரிவரவில்லை; ஊரில் புரட்சியை ஒழிக் கவே நான்வேஷம்போட்டேன்; இராணியை இன்று என் வசப்படுத்துவேன்" என்கிறான் போலியரசன். "சுதர்சன தோட்டத்திற்குத் தீ வை! குழப்பம் உண்டாகும்; அக்குழப்பத்தில் உன் காரியமும் பார்த் துக்கொள். என் காரியமும் பார்த்துக்கொள்கிறேன்" என்கிறான் காஞ்சி மன்னன். போலி மன்னனும், காஞ்சிமன்னனும் அரண்மனைத் தோட்டத்துள் புகு கின்றனர்; காஞ்சி எல்லாரையும் போகச் சொல்லி விட்டு, இரகசியமாகத் தீ வைக்கிறான். புட்களெல் லாம் வெறித்து ஓடுகின்றன; மான்கள் பயந்தோடு கின்றன. எங்கும் செந்தீப் பரவுகிறது; தோட்டத் தில் அகப்பட்ட மன்னர் தப்ப வழி தெரியாது அவதிப் படுகின்றனர். போலி யரசனும், காஞ்சியும் வெளி யேற முடியாது தவிக்கின்றனர். போலி "ஐயோ, நான் அரச னல்லேன்; நான் போலி, புரட்சிக் காரன்." என்றலறுகிறான்; குடிகளும் இராணியும் ,'அரசே; நீயினின்று ஊரைக்காப்பாற்றும்!" என்று

அலறி வருகின்றனர். "நான் அரச னல்லேன் ; நான் போலி, வஞ்சன்" என்று தன் மகுடத்தை எடுத்தெறிந்து போலி யரசன் காஞ்சிபனுடன் தப்பி ஓடுகிருன். அரசி சுதர்சனு திடுக்கிடுகிருள்; வாழ்வை வெறுக்கிருள் ; தீக்குளித்து இறக்கவே அரண்மனைக்குள் செல்லுகிருள். அரண்மனை யெங்கும் தீ உலாவியது.

அரசி இருட்டறைக்குள் ஓடுகிருள் ; அங்கே அரசன் அவளுடன் பேசுகிருன். தீச்சுடரில் அரசன் உருவம் தெரிகிறது—அட்டக்கரி; அமாவாசை தோற்றுப்போகும்! அந்தப் பயங்கர அவலட்சணத்தைக் கண்டு இராணி பயந்து முகஞ்சுளிக்கிருள்; அவனை வெறுக்கிருள் ; அவனருகே நிற்கக் கூடப் பிடிக்காமல் ஓடிப்போகிருள். அரசனும் "போ!" என்று விட்டு விடுகிருன். சபலம் இழுக்கிறது. மறுபடி வருகிருள் ; அரசனைக் காணோம்! அரசி சுரங்கமாவுடன் கன்னய குப்த மன்னனை தன் தந்தையிடம் செல்கிருள். கணவனைவிட்டு வந்ததற்காகத் தந்தை மகளைச் சினக்கிருன் ; அவளைத் தன் மகள் என்றே சொல்லாமல், அரண்மனையில் வேலைக்காரிபோல நடத்துகிருன். அரசி மனங் கசிந்து வருந்துகிருள். 'அரசன் வந்து தன்னை அழைத்துச் செல்ல மாட்டானு!' என்று ஏங்குகிருள். அவளைத் தூக்கிச் செல்லக் காஞ்சி யரசன் தேரில் வருகிருன் ; அதே சமயம் கோசலை, அவந்தி, கலிங்க, விராட, பாஞ்சால, விதர்ப மன்னரும் வருகின்றனர் ; போலி யரசனும் வருகிருன்.

எல்லாரும் சுதர்சனுவுக்காகப் போட்டி போட்டுப் போராடுகின்றனர். அரசியின் தந்தை கைதியாகிருன். காஞ்சி சுவர்ணனை அடிமையாக்குகிருன்.

அரசர்கள் ஓர் அறையில் இருந்துகொண்டு, சுதர்சனாவை வரச் சொல்லுகின்றனர். "அவள் மாலையைப் பெற்றவனே அவள் கணவனாவான்" என்று தீர்மானிக்கின்றனர். அரசியை அழைத்து வரச் சுவர்ணன் செல்லுகிறான். சுவர்ணன் அரசியிடம் தகவல் சொல்லி வருகிறான். அரசி தனக்கு வந்த ஏமாற்றத் துயரால் வருந்துகிறாள்; தன் அரசன் வரவை எதிர்பார்க்கிறாள்; அடிக்கடி அவன் யாழொலி கேட்கிறாள். அரசர் எழுவர் சுதர்சனாவுக்காகக் காத்திருக்கிறார்கள். சுவர்ணன் காஞ்சிக்குக் குடை பிடிக்கிறான். அச்சமயம் கிழவன் வீரவுடை தரித்து வந்து, "எம் அரசன் அழைக்கிறான், வாருங்கள்!" என்கிறான். அரசருள் மனவேற்றுமை ஏற்படுகிறது; சிலர் செல்லுகின்றனர். மீண்டும் போர்; காஞ்சி தவிர மற்றவர்கள் தோற்றோடுகிறார்கள். சுதர்சனா தப்பி, காலால் நடந்து, இருட்டறைக்கு வந்து மன்னனைப் பணிவுடன் வணங்குகிறாள்.

அரசன்: இப்போது என்னைப் பார்க்கப் பிடிக்கிறதா?

அரசி: ஆம்; தங்களுடன் எதையும் ஒப்பிட முடியாது?

அரசன்: என்னுடன் ஒத்தபொருள் உன்னுள் உள்ளது.

அரசன் இருட்டறைக் கதவுகளைத் திறக்கிறான்; அரசியுடன் வெளிச்சத்திற்குச் செல்லுகிறான். "என் ஒப்பற்ற, பயங்கர இருட்டு ராஜாவுக்கு வணக்கம்!" என்று சுதர்சனா நாதனைப் பணிகிறாள்.

இக்கதையில் மிகவும் ஆழ்ந்த அத்யாத்மப் பொருள் அடங்கியுள்ளது.

## 27. அமைதி கெட்டதே!

கீதாஞ்சலி முகப்பிலிருக்கும் தாகூர் படம் ரோதென்ஸ்டெய்ன் எழுதியது. அவருக்கே தாகூர் நூலை அர்ப்பணித்தார்; வெகுமதி வந்ததும் அவருக்கு பின்வருமாறு கடிதம் எழுதினர் :

"எனக்கு இப்பெரிய நோபெல் சன்மானச் செய்தி கிடைத்ததுமே, என் மனம் தங்கள்பால் அன்புடனும் நன்றியுடனும் சென்றது. நண்பரெல்லாரைக் காட்டிலும் தங்களுக்கே இச்செய்தி மிகவும் மகிழ்வளித்திருக்குமென்பதுறுதி. அருமையான நண்பர் மனம் குளிர்ந்தது. எனினும், எனக்கு இதுவும் ஒரு பெரிய சோதனை. இதனல் பொதுஜன உற்சாகம் சூருவளிபோல் கிளம்பி விட்டது. நாய்வாலில் தகரக்குவளை கட்டியதுபோலானது; அது நடக்கும்போதெல்லாம் சத்தம் பலமாயிருக்கும். கும்பல் நெருங்குகிறது; தந்திகளும் கடிதங்களும் வந்து குவிகின்றன. என்னிடம் சிறிதும் அன்பில்லாதவர்கள், என் கவிதையில் ஒரு வரிகூடப் படிக்காதவர்களெல்லாரும் இன்று களிக்கூத்தாடுகிருர்கள்; புகழ் மாரி பொழிகிருர்கள். இந்தக் கூச்சலால் நான் மிகவும் ஆயாசப்படுகிறேன். எல்லாம் போலிக்கூச்சல்! உண்மையாக அவர்கள் மதிப்பது என்னையன்று; அவர்கள் மதிப்பதெல்லாம் எனக்குக் கிடைத்த வெகுமதியைத்தான்......"

நோபெல் வெகுமதிகிடைத்தபிறகு, ஜனக் கும்பலாலும், புகழ் முரசாலும், அங்குமிங்கும் அழைப்புகள் வந்து அலைந்ததாலும் தமது சமாதானம் கெட்டதாகவே தாகூர் வருந்தினர்.

"இப் பொன்னணி என்னைப் பரிகசிக்கிறது. மென்னியை இறுக்கி என் பாட்டின் மூச்சைப் பிடிக்கிறது. இறைவனே, உனக்கு இதைக் கொடுத்து விட்டாலே பிழைத்தேன். இந்தா எடுத்துக்கொள்! இந்தப் பொன்னணியுடன் உன்முன் நிற்க நாணு கிறேன். அன்பு மாலையால் என்னை உன்னுடன் பிணைத்துவிடு!" என்று பாடுகிறார் தாகூர். அமைதிக் காக அவர் காஷ்மீர் சென்று, சிலமாத மிருந்தார். அவருக்குப் புகழ் அளித்த கவிதைகளை யெல்லாம் தாகூர் முன்பே எழுதி வைத்துவிட்டார். அவர் கவிதைகளைப் பத்துப்பெரிய நூல்களாகவங்காளத்தில் வெளியிட் டிருக்கிறார்கள். வெகுமதி வந்த பிறகு அவர் உலக சஞ்சாரியானார்; அவ்வப்போது தேச சம்பவங்களைப்பற்றி ஆணித்தரமான அபிப்பிராயங் களை வெளியிட்டார்; விசுவ பாரதியில் கருத்தூன்றி னார்; சுறுசுறுப்பான வாழ்வுக்கிடையே, பேனாவும் ஓயாமல் அசைந்துகொண்டே யிருந்தது.

---

## 28. மகாத்மா காந்தி நட்பு

சுதேசி இயக்கத்தின் பிறகு, தாகூரின் கருத் தைக் கவர்ந்தது, தென்னாப்பிரிக்காவில் மகாத்மா காந்தி நடத்திய சத்தியாக்கிரகமே. அவர் ஆந்த்ரூஸை யும், பியர்ஸனையும் தென்னாப்பிரிக்காவில் காந்தியடி களுக்கு உதவியாக அனுப்பினார். சத்தியாக்கிரகம் ஒருவாறு முடிந்தது; ஏதோ சிறிது அனுகூலம் ஏற் பட்டது. 1914 ஏப்ரலில் ஆந்த்ரூஸும், பியர்ஸனும் சாந்திநிகேதனுக்குத் திரும்பி வந்தனர். அவர்களிடம் தாகூர் காந்திஜீயின் மாண்பைக் கேட்டறிந்தார்.

அவரே காந்திக்கு 'மகாத்மா' என்ற பட்டமீந்தவர். காந்திஜீ டிரான்ஸ்வாலில் ஃபோனிக்ஸ் ஆசிரமம் நிலைநாட்டி, ஏழை யெளியவருக் கெல்லாம் சத்திய வாழ்வைப் பயிற்றிவந்தார். அவர் ஆஃப்ரிக்காவை விட்டு வரவேண்டி யிருந்தது; அப்போது தாகூரின் அழைப்பு வந்தது. ஃபோனிக்ஸ் ஆசிரம மாணவர் களையும் ஆசிரியர்களையும் சாந்திநிகேதனத்தில் வந் திருக்க அவர் அழைத்தார். ஃபோனிக்ஸ் பள்ளிக் கூடம் சாந்திநிகேதனுக்கு வந்தது. அதன் மாணவர் தம் காரியங்களைப் பிறர் உதவியின்றித் தாமே பார்த் துக் கொண்டனர்; மிகமிக எளியவாழ்வு வாழ்ந்தனர். அவர்களுடன் பழகியதால் சாந்திநிகேதன மாணவ ருக்குத் தொழிலாளரிடம் அனுதாபம் ஏற்பட்டது. வங்காளச் சணல்தொழிலாளர் மிகவும் வருந்தினர்; சாந்திநிகேதன மாணவர் சர்க்கரை, கோதுமை மா இரண்டையும் விலக்கி, அதற்குரிய பணத்தை மிச்சம் பிடித்துத் தொழிலாளருக்குத் தந்தார்கள். தாகூர் வயிற்றை யொடுக்குவதில் நம்பிக்கை யில்லாதவர். ஆதலால், "சாப்பாட்டைக் குறைக்கவேண்டா. பாடுபட்டு வேலை செய்யுங்கள்; அதில் வந்ததைத் தானம் செய்யுங்கள்! அதுவே தியாகத்திற்கு வழி" என்றார்.

அவருக்குக் காந்தியைப் பார்க்க ஆவல் அதிகம். காந்திஜீ இங்கிலாந்திலிருந்து பம்பாய் வந்ததுமே தம் மாணவரைக் காண மனைவியுடன் சாந்திநிகே தனம் வந்தார்; (22-2-1915). அன்று கல்கத்தாவில் தாகூர் பிரசங்கம். கோகலேயிடமிருந்து அவசர அழைப்புவந்து, காந்தியும் பூனா சென்றார். இருவரும் சந்திக்க முடியாமல் போனது. 6—3—1915-ல்

தாகூர் காந்திஜீயை சாந்திநிகேதனில் வரவேற்று உபசரித்தார். காந்திஜீ கவியையும், அவரது நிலயத்தையும் கண்டு மகிழ்ந்தார். மகாத்மாவின் வாடை பட்டதுமே, தன்னுதவி யுணர்ச்சி யெழுந்தது; சாந்திநிகேதன மாணவர், மகாத்மாவின் சொல்லையும் செயலையும் பின்பற்றி, 10-3-15 முதல் ஆசிரம காரியங்களைத் தாமே செய்யத் தொடங்கினர். வேலையாட்களுக்கு அவசியமே யில்லாமற் செய்தனர். சமையல் காரியங்களெல்லாம் மாணவரே செய்தனர். ஆனல், இந்த ஏற்பாடு நீடிக்கவில்லை. வருஷத்திற்கு ஒரு நாள், மார்ச்சு மீ மூன்றுந் தேதிமட்டும், வேலையாட்களுக் கெல்லாம் ஓய்வுகொடுத்து, மாணவரும் ஆசிரியரும் ஆசிரம காரியங்களைப் பார்க்கின்றனர். காந்தி யடிகள் நினைவிற்காக இன்றும் இந்த ஏற்பாடு நடக்கிறது. 31-3-1915-ல், ஃபோனிக்ஸ் மாணவர் காந்தி யடிகளுடன் ஹரித்வார குருகுலத்திற்குச் சென்றனர். தாகூர் தமக்குச் செய்த இந்த உதவியைக் காந்தி யடிகள் எப்போதும் நன்றியுடன் நினைத்திருந்தார்கள். இருவரும் சந்திக்கும்போதும், பேசும்போதும், வாதமிடும்போதுங்கூட ஒரு தனி யழகும் அன்பும் தோன்றும். மகாத்மாவின் கதரும், ஒத்துழையாமையும் தாகூருக்கு முற்றிலும் சம்மதமல்ல; என்றாலும், அவருடைய சத்தியாக்கிரகம், தேசசேவை, மாசற்ற சத்தியவாழ்வு—இவற்றில் தாகூருக்குப் பெருமதிப்புண்டு. வெளிப்படையாக அரசியல் மேடையில் தோன்றவிட்டாலும், மகாத்மாவின் இயக்கங்களி லெல்லாம் அவர் சம்பந்தம் நிரம்ப உண்டு; பின்னல் அறிவோம். அஹிம்ஸா தருமத்திலும் அவருக்கு உண்மையான

நம்பிக்கையுண்டு. 1914-ஆம் ஆண்டு ஜெர்மன்போர் தொடங்கியபோது, தாகூர் சாந்திநிகேதனில் ஒரு சிறப்பான பிரார்த்தனைநடத்தி, அஹிம்ஸா தருமத்தையும் அன்பு வழியையும் பற்றிப் பேசினர். ஒருதரம் தாகூர் தமது ஆசிரம நிதி வசூலுக்காக நாடகக் குழுவுடன் தில்லிக்கு வந்திருந்தார். காந்தியடிகள் ஒரே நாளில் ரூ. 65,000 வசூலித்துக் கொடுத்தார்கள்.

## 29. உலக யாத்திரை

பட்டம் பதவிகளும் புகழ்மாலைகளும் தாகூரைத் தேடிவந்தன. 3-6-1915-ல், அரசர் பிறந்த நாள். தாகூருக்கு 'நைட்' பட்டம் கிடைத்தது. பிறகு எத்தனையோ மரியாதைகள் வந்தன; உலகம் முழுதும் 'வருக வருக!' என்று அவரை அழைத்தது. கவியரசருக்குச் சென்ற விடமெல்லாம் சிறப்புத்தான். ஐரோப்பாவில் போர் வெறி தாண்டவமாடியதால், தாகூர் ஜப்பானின் அழைப்பிற்கிணங்கிச் சென்றார். இரங்கூன், சிங்கப்பூர், சைகோன், ஹாங்காங் முதலிய இடங்களில் பிரமாதமான வரவேற்புகள் நடந்தன. கவியரசர் ஜப்பானில் கோப் நகரில் தங்கினர். ஹர என்ற புகழ்பெற்ற ஓவியன் அவரை உபசரித்தான். கேப் சர்வ கலாசாலையில் தாகூர் ஜப்பானின் மண்வெறியைக் கண்டித்துப் பேசினர்; அது சைனவில் செய்யும் அட்டூழியங்களை அப்போதே தாக்கினர். அதனல் ஜப்பான் அரசாங்கத்திற்குத் தாகூர்மேல் மனஸ்தாபம் எழுந்தது. அதற்கெல்லாம் தாகூர் அஞ்சுவதில்லை; உள்ளொன்று

புறமொன்றில்லை; உள்ளத்தில் உன்னியபடி அவர் சொல்ல என்றும் தயங்கியதில்லை.

ஜப்பானிலிருந்து தாகூர் அமெரிக்காவுக்குப் புறப்பட்டார். வழியில் வான்குவார் துறைமுகத்தில், கானடாவின் அழைப்பு வந்தது; அழைப்பை இந்தக் கையால் வாங்கி அந்தக் கையால் மறுத்துவிட்டார்; என்? கானடாவில் இந்தியரைத் தாழ்மையாக நடத்துவதால். 18-9-1916-ல், தாகூர் வாஷிங்டன் சேர்ந்தார். ஜே. பி. பொன்ட் (J. B. Pond) என்னும் அறிஞர் தாகூரை வரவேற்று, ஐக்கிய நாடுகளிற் பல பிரசங்கங்களுக்கு ஏற்பாடு செய்தார். தாகூர் மேனடெல்லாம் இந்தியாவில் நடக்கும் அன்னியக் கொடுமைகளைப் பறை சாற்றிவிட்டார். ஸீட்டில் (Seattle) பெண் சங்கத்தில் "தேசியக் கலை" (Cult of Nationalism) என்னும் பொருள் பற்றிப் பேசினர். பேச்சோடுபேச்சாக, வெள்ளைக்காரரின் சுயேச்சாதிகார வெறி, சாதித் திமிர், இந்தியா பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்தார் கையிற் படும்பாடு எல்லாவற்றையும் பற்றித் திட்டித் தள்ளினர்:

"தேச வெறி பிடித்தவர்கள் மனித வுரிமையைக் கொலை செய்கிறார்கள். நான், என் சாதி, என் தேசம், எனது நலன், பிறர் எப்படி நாசமாய்ப் போனலென்ன என்று தேச வெறியர் பிதற்றுகிறார்கள். வெண்ணாட்டார் யந்திரங்களைச் செய்கிறார்கள்; சாமான்களை விரைவாகச் செய்து குவிக்கிறார்கள்; எளிய நாடுகளைச் சந்தையாக்குகிறார்கள்; பண வெறி, போர் வெறி பிடித்தலைகிறார்கள். மனித சமுதாயம் வர வர அரசியலார், போரியலார், யந்திரத் தொழிலாளர், அதிகார வர்க்கத்தார்—இவர்களின்

பொம்மலாட்டமா யிருக்கிறது. அந்தப் பொம்ம லாட்டத்தை அற்புதத் திறமையுள்ள மின்சாரத் தந்திகள் இயக்குகின்றன. எங்கும் சுயநலம், மோசடி, பகை, வெறுப்பு, பகற்கொள்ளை, பயம், பேராசை, கொடுங்கோல், அசுரத்தனம்—இவை தாண்டவமாடுகின்றன. இரும்பும், நிலக்கரியும், ஆவியும், மின்சாரமும் கொண்டு, இராட்சஸ யந்திரங்களைச்செய்து, மனித சமுதாயத்தைப் பீரங்கி வாயில் வைப்பதா நாகரிகம்! இந்தப் போரில் தேச வெறியின் யம தாண்டவத்தைப் பாருங்கள்! பெரிய பெரிய யந்திரங்கள்! எல்லாவற்றிற்கும் வெறி பிடித்து விட்டன. தம்மவர் உடலையே அவை தூள் தூளாக்கித் துருவி யெறிகின்றன! எல்லாம் பொய்யின் அழி நாடகம்! யந்திரங்களால் விடுதலையில்லை; இன்பமில்லை! இதை இந்தியா நன்கறிந்துள்ளது; எங்கள் நம்பிக்கையெல்லாம் இறைவனிடமும், சத்தியமான மனிதான்மாவிடமும் உள்ளது. மனித சமுதாயம் இப்போது படும் புண்களைப் போக்கும் இனிய மருந்து எங்களிடம் உள்ளது—ஆத்ம ஞானம்! அதை இந்தியா உலகிற்களிக்கும்." தாகூர் தம் பிரசங்கங்களை எழுதித்தான் படித்தார். அவர் அமெரிக்காவில் படித்ததே "Nationalism" என்ற நூல். ஸான்ஃப்ரான்ஸிஸ்கோ, நியூயார்க், லோஸ் எஞ்செல்ஸ், கொலம்பியா தியேடர், சிகாகோ, லோவா, லூயிவில், டெட்ராய்ட், பிலடல்ஃபியா, போஸ்டன் முதலிய இடங்களில்சிறப்பான வரவேற்புகளும் பிரசங்கங்களும் நடந்தன. Nationalism, Personality ஆகிய இரண்டு நூல்களில் உள்ளவைதான் அப்பிரசங்கங்கள். இந்தியாவில் வெள்ளைக்காரர்கள் அடிக்கும் கொள்ளை, அமெரிக்கர் ஆசியரைக் கேவல

மாக நடத்தும் சிறுமை, அமெரிக்காவின் பணவெறி, யந்திர நாகரிகத்தின் அபாயம் — இவற்றைத் தாகூர் பலமாகக் கண்டித்துப் பேசினர். அதனல் சில எதிர்ப்புகளும் கண்டனங்களும் கிளம்பின. "இந்த இந்தியக் கவிக்கு மதிப்பீந்தது ஐரோப்பிய நோபெல்; இவர் ஐரோப்பியரையும், அவர்தம் நாகரிகத்தையும் கேவலமாகப் பேசுவதா?" என்ற ஆத்திரம் சிலருக்குப் பொங்கியது. சில அமெரிக்கப் பத்திரிகைகள் தாகூர் பிரசங்கத்தைப் பலமாகக் கண்டித்தன. அது மட்டுமில்லே. நியூயார்க்கில் இராமச்சந்திரா என்ற சீக்கிய வீரரொருவர் இருந்தார்; அவர் பெரிய புரட்சிக்காரர். அவர் கையில் இந்தியப் புரட்சிக்காரர்கள் பலர் இருந்தனர். அங்கே ஆயுதப் பயிற்சிபெற்று, இந்தியாவில் புரட்சிசெய்ய அவர் முயன்றுகொண்டிருந்தார். வெள்ளேக்காரனிடம் 'நைட்' பட்டம்பெற்று, வெள்ளேக்கார நாடுகளில் வந்து நடிக்கும் போலிப்புலவர் என்று தாகூரை இராமச்சந்திரா பத்திரிகையில் தாக்கினர். புரட்சிக்காரர் தாகூர் உயிருக்கே உலே வைப்பதாகச் செய்தி எட்டியது. அமெரிக்க சர்க்கார் போலீஸ் பந்தோபஸ்து தருவதாகச் சொன்னதைத் தாகூர் மறுத்துத் தைரியமாகவே பிரயாணத்தைச் செய்து முடித்தார். ஸான்ஃப்ரான்ஸிஸ்கோவில் பிரெஞ்சு அறிஞர் பால் ரிஷார்டு தாகூரை வரவேற்ருர். அவர் எழுதிய "To the Nations" என்ற அரிய நூலுக்குத் தாகூர் முன்னுரை யளித்தார்.

அங்கிருந்து தாகூர் ஹோனலோலு தீவிற்குவந்து, ஒருநாள் தங்கி, மீண்டும் ஜப்பானுக்கு வந்தார்; பிறகு இந்தியாவுக்குக் கப்பலேறினர். சைகோனில் நம் தனவணிகர் அவரைச் சிறப்பாக வரவேற்று

உபசரித்துப் பணமுடிப்பு ஈந்தனர். தாகூர்மேல் சர்க்கார் சந்தேகங்கொண்டது; அவருடன் வந்த பியர்ஸனைக் கைது செய்து இங்கிலாந்திற்கு அனுப்பியது; தாகூர் ஸான்ஃப்ரான்ஸிஸ்கோவிலிருந்த புரட்சிக்காரருடன் சதி செய்ததாகவும், ஜெர்மன் பணம் பெற்றே பிரிட்டிஷ் ஆட்சியை அப்படி நிந்தித்ததாகவும் புகார் பிறந்தது. இதைப்பற்றி வங்க கவர்னரின் காரியதரிசியே ஆந்த்ரூஸிடம் சொன்னாராம்! தாகூர் இதைப் பலமாகக் கண்டித்தார்; அமெரிக்கக் குடியரசுத் தலைவர் வில்ஸனுக்கு நீண்ட கடிதம் எழுதினார்; அன்னிய நாடுகளுக்குச் செல்வதையே சிலகாலம் விட்டுவிட்டார். இச்சமயமே திலகர் ரூ. 50,000 தந்து, ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் இந்தியப் பிரசாரம் செய்யச் சொன்னார். தாகூர் வந்தனத்துடன் மறுத்துவிட்டார்.

---

## 30. கல்கத்தா காங்கிரஸ்

**17 3-1917-ல்,** தாகூர் கல்கத்தாவுக்குத்திரும்பினார். அங்கே ககனேந்திரர், அபனீந்திரர், இரதீந்திரர் முதலியோர் விசித்ரா கலாநிலயம் ஒன்று ஏற்படுத்தி, நுண்கலையை அமோகமாக வளர்த்துக் கொண்டிருந்தனர். தாகூர் கண்டு மகிழ்ந்தார். பிரமாத சௌத்ரி என்பவர், வங்க மொழியை எழுதுவது போலவே, பேசவேண்டும் என்றோர் இயக்கம் நடத்தினர்; தாகூர் அதை மிகவும் ஆதரித்தார். இச்சமயம் ஹோம்ரூல் கிளர்ச்சி பலமானது; பெசண்டம்மையைச் சர்க்கார் சிறையிட்டது; தாகூர் பலமாகக் கண்டித்தார்;

விசாரணை யில்லாமல் சர்க்கார் வங்க தேசாபிமானி கள் பலரைக் கடுஞ்சிறை யிட்டதையும் காரமாகக் கண்டித்தார். வந்தது கல்கத்தா காங்கிரஸ்; தலைமைக் குப் போட்டி பலமா யிருந்தது. பெசண்டே தலைமை வகிக்க வேண்டுமெனத் தாகூர் வற்புறுத்தினர். அவரையே வரவேற்புத் தலைவராக எல்லாரும் தேர்ந் தெடுத்தனர். அவர் முதலில் அங்கீகரித்துப் பிறகு ராய் வைகுண்டநாத ஸென்னுக்கு அப்பதவியைத் தந்தார். தாகூர் காங்கிரஸுக்கு வந்தார். பலத்த கர கோஷங்களிடையே "இந்தியாவின் பிரார்த்தனை" என்ற உருக்கமான பாட்டைப் படித்தார். அதன் சாரமாவது :—"இறைவனே, நீ எங்களுக்கு வாழும் உரிமை தந்தாய்; இந்த உரிமையை எங்கள் பலமும் உறுதியும் கொண்டு காப்போம். எங்கள் பெருமை யால் உன்னைப் பெருமைப் படுத்துவோம். ஆதலால், எங்கள் நாட்டில் கொடி நாட்டும் அன்னிய சக்தியை உன் பெயரால் எதிர்க்கிறோம். அடிமைத்தனமாகிய வசையைப் பொறுக்கும் உள்ளத்தில், உனது ஒளி மழுங்கிப் போகிறது. துர்ப்பலமே எங்கள் நாட்டைக் காட்டிக் கொடுக்கும் சத்துரு; அதுவே அஞ்சி நடுங்கி உனது அரியணையைப் பொய்யின் கையில் தருகிறது. இதுவே எங்கள் பிரார்த்தனை! எங்களை அடிமையாக் கும் போலிச் சுகங்களை எதிர்க்கும் சக்தி யருள்! கோடைகாலம் நண்பகற் சூரியனைத் தாங்கி நிற்பது போல், எங்கள் துக்கத்தை உன்பால் உயர்த்தித் தாங்கு கிறோம். எங்கள் பூஜை அன்பாக மலர்ந்து, செய லாகக் கனியும் திண்மையைத் தா! நாங்கள் தீனரை யும், தாழ்ந்தவரையும் புண்படுத்தாத சாந்த பலம் அருள்வாயாக! அங்கே சுயநல வெறிகொண்ட

மிருக பலர், சகோதரர் ஊனைப் பிளந்து, உனது சினத்தையும் எதிர்த்துப் போராடி மடிகின்றனர்.

நாங்கள் அன்பை உயர்த்தி உண்மைக்கும் நன்மைக்கும், மனிதனிடமுள்ள அமராத்மாவுக்கும் உறுதியாக நின்று, இடர்களைப் பொறுத்துத் தியாகம் செய்ய வருள்! உள்ளங்களின் இணைப்பே உன் அரசு; உனது அருளரசிற்கும், ஜீவனுன சுதந்தரத்திற்கும் நாங்கள் போராடத் தியாகபலம் அருளாய்!"

மறுநாள் விசித்திரா சங்கம், **Post Office** நாடகம் போட்டது; தாகூரே அதில் தாகூர்தாவாக நடித்தார். மகாத்மா காந்தி, திலக் மகராஜ், மாளவியாஜி, பெசண்டு முதலிய தலைவர்களெல்லாம் நாடகம் பார்த்து மகிழ்ந்து போற்றினர்.

அதே ஆண்டு மாங்தேகு இந்தியாவுக்கு வந்தார்; தாகூர் அவரைத் தமது ஜோரசங்க மாளிகையில் வரவேற்று உபசரித்தார். மாங்தேகு தமது தினசரிக் குறிப்பில் "இரவீந்திர சகோதரரின் சித்திரங்களைக் கண்டு மகிழ்ந்தேன். வங்காள அரசியல் கைதிகளின் நிலைமையைப் பார்த்து இரவீந்திரரும் அரசியல் வாதியானர்" என்று குறித்தார்.

---

## 31. மதுரையில் கண்டேன்

**1919-ஆம்** ஆண்டில், தாகூர் தென்னிந்தியாவிற்கு வந்தார்; பித்தாபுரம் மகாராஜா விருந்தாளியாகச் சில நாட்களிருந்தார்; பங்களூர், மைசூர், உதகமண்டலம், கோயமுத்தூர், பாலக்காடு, சேலம் தஞ்சாவூர், கும்பகோணம், திருச்சி, ஸ்ரீரங்கபட்ட

ணம், மதுரை முதலிய இடங்களைச் சுற்றிப் பார்த்துச் சென்னைக்கு வந்து, அடையாற்றில் அனி பெசண்டின் உபசரணையில் இருந்தார். பெசண்டம்மை நாட்டிய கலாசாலையில் (Centre of Indian Culture), "இந்தியக் கலையின் கேந்திரம்" என்பதைப் பற்றிப் பேசினர். மற்ற இடங்களிலெல்லாம் "Message of The Forest" (வன வாசகம்) என்னும் கட்டுரையே படித்து வந்தார். மதுரையில் அவரைக் காணும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. மதுரையில் அவர் மேஜர் கணபதிராய் வீட்டில் தங்கி யிருந்தார். அவருடன் ஸி. எப். ஆண்ட்ரூஸும் வந்திருந்தார். கவிக்கு உடம்பு சரியா யில்லை. பெரும்பாலும் அவர் படுக்கையிலே தான் இருந்தார். என்றாலும் அவர் கை எழுதிக்கொண்டே யிருந்தது. அவர் முகம் சாந்தகம்பீரமான ரிஷிமுகம்போல் விளங்கியது. தாகூர் சளசளவென்று பேச மாட்டார்; பெரும்பாலும் மௌன சுபாவத்துடன் இருந்தார். ஆனல், அவர் வாக்கினின்று வருவதெல்லாம் நமது இதயத்தை ஊடுருவும் இன்சொற் கவிதையா யிருந்தது. நண்பர் சிலர் அவரைப் பார்க்கச் சென்றிருந்தோம். நானும், நண்பரொருவரும் ஆங்கிலத்தில் கவிமாலை பாடிச் சென்றோம். நண்பர் ஆங்கிலத்தில் மகா மேதாவி; நன்றாகப் பாடுவார். தாகூருக்குத் தமிழ் வராது. ஆகையால், 'நமது புகழ்மாலையை ஆங்கிலத்தில் சூட்டுவோம்' என்றே நான் எண்ணினேன். எங்களை அவர் புன்னகையுடன் வரவேற்றார். நமது நாட்டுக் கலை விஷயமாகப் பேசினர். பிறகு "தகுந்த புலவர் கிடைத்தால் தமிழுக்கும் சாந்திநிகேதனில் ஒரு பவனம் அமைக்கலாம்" என்றார். அச்சமயம் என் நண்பர்

தமது புகழ்மாலையைத் தந்தார். தாகூர் பார்த்து, "இந்த மாதிரி தங்கள் தாய்மொழியில் பாடினால் நன்றாயிருக்குமே! நம்மவர் தாய்மொழியை மறந்து, பிழைப்புக்குக் கற்ற அன்னிய மொழியில் கவி பாடுவது பொருத்தமில்லாத வழக்கம். இந்தியர் சுதேச பாஷைகளை வளர்க்கவேண்டும். எனது வங்க ஹிருதயம் வங்கத்திலேயே பாடும். தமிழ் ஹிருதயம் தமிழிலேயே பாடுவது நல்லது. குயிலுக்குத் தன் பாட்டுத்தான் பொருத்தமாகும். குயில் கிளியை அபிநயித்தல் பொருந்தாது" என்றார். இம் மொழிகளை அவர் புன்னகையுடன் தாடியை நாலு தரம் உருவிக் கொண்டு சாந்தமாகவேசொன்னார். உடனே, எனது கவிதையைப் பைக்குள் திணித்துக் கொண்டேன். தாகூரின் தாய்மொழியன்பு எனக்குப் புதிய எழுச்சி தந்தது. அவர் வங்கத்திலேதான் எதையும் எழுதுகிறார். பிறகு ஆங்கில மொழிபெயர்ப்பு நடக்கிறது.

விக்டோரியா எட்வர்ட் ஹாலில் தாகூருக்கு அமோகமான வரவேற்பு நடந்தது. பிறகு அமெரிக்கரின் மிஷன் கல்லூரியில் ஃஜம்ப்ரோ அவரை அன்புடன் வரவேற்றார். ஒரு ரூபா, இரண்டு ரூபா என்று டிக்கெட் வைத்து ஆட்களை உள்ளே விட்டார்கள்; வசூல் பணத்தை சாந்திநிகேதனுக்கு அளித்தார்கள். தாகூரைப் பார்க்கக் கூட்டம் நெருங்கியிருந்தது. தாகூர் கம்பீரமாக மேடையேறி நின்றார். அவரைப் பார்க்கும்போது, இப்படிப்பட்ட கவியைப் படைத்த நமது தேசத்திற்கு வேறெந்த நாடும் இணையாகாது என்ற ஓர் உணர்ச்சி யுண்டாயிற்று. அந்த விழிகளிலிருந்து கருணையும், ஞானக்கனலும் கொட்டின. சபை முழுதுமே தாகூராகத் தோன்றிற்று.

நல்ல உயரம்; சரியான உருவம்; பரிசுத்தமான ஆடை; வஞ்சமற்ற திறந்த உள்ளம்; வெள்ளி மணிக் குரல்; எப்போதும் உயர்ந்த கனவில் ஆழ்ந்து கிடக்கும் சித்தம்—இவையே தாகூர். அவர் மேடையில் ஒரு நிமிஷம் மௌனமாக நின்றபோது, ஒரு கனவுலகில் இருந்ததுபோ லுணர்ந்தோம். பிறகு நிதானமாக இனிய கிண்கிணிக் குரல் கேட்டது. தாகூர் தாம் எழுதிய 'மெஸ்ஸேஜ் ஆஃப் தி ஃபாரஸ்ட்' (**Message of the Forest**) வன வாசகம் என்ற கட்டுரையைப் படித்தார். பெரும்பாலும் அவர் தமது கருத்தை எழுதி வைத்துக் கொண்டே பல இடங்களில் படித்தார். ஆனல் அவர் படிக்கக் கேட்பதே பெரிய இன்பம். "இந்திய நாகரிகம் ரிஷிவனத்தின் உள்ளத்திலேதான் பிறந்தது" என்பது அந்தக் கட்டுரையின் கருத்து. காளிதாஸனை அவர் மிகவும் கொண்டாடினர். சாகுந்தலம், குமார சம்பவம் ஆகிய காவியங்களை அவர் மிகவும் போற்றி அவற்றின் கருத்தைக் கட்டுரையில் அமைத்திருந்தார்; பிறகு, கீதாஞ்சலியிலிருந்து இரண்டு பாசுரங்கள் இனிமையாகப் பாடினர். அந்தப் பாசுரங்கள் இன்னும் செவியில் ஒலித்துக் கொண்டிருக்கின்றன. சென்ற பத்தாண்டுகளாக நான் வங்கப் பாடல்களைக் கேட்கிறேன். தாகூர் நூல்களில் சில கற்றேன். ஆனல், நேரே அவர் அன்று பாடிய பாட்டின் இனிமை வேறுதான். தாகூர் பாடல்களை இசைத்தட்டில் எடுத்திருக்கிறர்கள். தாகூர் குரலை வாழையடி வாழையாக உலகம் போற்றத் தரும்!

மறுநாள் விக்டோரியா எட்வர்ட் ஹாலில் தாகூர் கூட்டம் என்று அறிவித்தார்கள். ஆனல்

தாகூருக்கு உடம்பு குணமில்லை. அவருக்குப் பதி லாக ஸி. எஃப். ஆந்த்ரூஸ் வந்து பேசினர். ஆந்த்ரூஸ் அப்போது கதர் உடுத்தவில்லை; ஐரோப்பிய மோஸ் தரில் உடையணிந்தே வந்தார். அவர் பேச்சு முழு வதும் மகாத்மா காந்தியைப்பற்றியே இருந்தது. "தாகூர், காந்தி இருவரும் இந்தியாவின் இரண்டு திவ்யாத்மாக்கள். தாகூர் கலையினல் இந்தியாவை உலகிற்கு விளக்கினர். காந்தி ஸத்யாக்கிரகத்தால் மனித சமுதாயத்திற்கே புதிய வழி காட்டி இந்தியா வின் தெய்வப் பெருமையைத் துலக்கினர்...மகாத்மா வின் ஸத்யாக்கிரக வழி உலகில் ஒரு புதிய சகாப் தத்தை உண்டு பண்ணியது" என்று பேசினர்; தென் னஃப்ரிக்கா அனுபவங்களைச் சொன்னர்; பிறகு, காந்தியடிகளுக்கும் தாகூருக்கும் உள்ள நட்புரிமை யை அழகாக வருணித்தார். "பாரத இதயத்தைச் சுதேச மொழியால் உலகறியச் செய்த விசுவகவி தாகூர்" என்று அவர் சொன்னபோது என்னுடல் சிலிர்த்தது.

தென்னிந்தியப் பிரயாணத்திலிருந்து கல்கத்தா வுக்குத் திரும்பி வந்ததும் தாகூர் எம்பயர் தியேட்ட ரில் முதல்முதலாக ஆங்கிலத்தில் கல்வி முறையைப் பற்றிப் பேசினர்.

---

## 32. பட்டந் துறந்தார்

**1919-ஆம்** ஆண்டு நமது சுதந்தர வரலாற் றில் முதன்மையான கட்டம் நடைபெற்றது: காந்தி யடிகள் ரௌலட் சட்டத்தை எதிர்த்துச் சத்தியாக் கிரகம் தொடங்கினர்கள். அதனல் ஜனங்கள் கட்டுக்

கடங்காமல், பலாத்காரம் நேரிடும் என்று தாகூர் அபிப்பிராயப்பட்டார். ஜனங்கள் அடக்கமாகவே யிருந்தனர்; பலாத்காரப் புலிகள் சர்க்கார் குகையி லிருந்தே கிளம்பின. 13-4-1919; அமிர்தசரஸ் ஜலி யன்வாலாபாக்கில் டயரும், உடையரும் ஆகாசக் குண்டு போட்டு, நம்மவரைப் படுகொலை செய்தனர். பஞ்சாபில் இராணுவச் சட்டம் செய்த கொடுமை, கொடுமை, கொடுமை! ஒரு மாதம் செய்தியே தெரியாமல் அமுக்கி வைத்தனர். மே மாதமே தாகூருக்குச் செய்தியெட்டியது; தாகூர் வீரச்சினங் கொண்டெழுந்தார். வைசிராய் செம்ஸ்போர்டு பிரபுவுக்கு ரோஷமாக ஒரு கடிதந் தீட்டிவிட்டுத் தமது 'நைட்' பட்டத்தையும் வாபீஸ் செய்தார்.

"பஞ்சாபில், உள்ளூரில் அமைதியாகச் சத்தியாக் கிரகம் நடந்தது; அதை அடக்க சர்க்கார் கையாண்ட பலாத்கார முறை மகா மோசமானது, அமிதமானது, பயங்கரமானது! கேட்டவர் திகைக்கின்றனர், நடுங்குகின்றனர். பலமான படைவலியுள்ள சர்க் கார், ஆயுத மில்லாத சாது ஜனங்களுக்குச் செய்த இந்த மாதிரியான முரட்டுக் கொடுமை, சரித்திரத்தி லேயே இல்லை. இதனால், நாங்கள் இந்தியாவில் பிரிட் டிஷ் பிரஜைகளாயிருப்பது எவ்வளவு கிர்க்கதியான நிலை என்பது விளங்குகிறது. எவ்வளவு அடக்கி வைத்தும், இப் பயங்கரச் செய்தி நாடெல்லாம் பரவி எங்கும் கண்டிக்கப் படுகிறது. இந்த அட்டூழியத்தை ஆங்கிலோ—இந்தியப் பத்திரிகைகள் புகழ்கின்றன; எங்கள் துயரை நகையாடுகின்றன. எங்கள் முறை யீடு வீணானது. இப்படிப் பட்ட நிலையில் பட்ட மெதற்கு? இந்தப் பட்டம் என்னைப் பார்த்துச்

சிரிக்கிறது! ‘சர்க்கார்ப் பட்டம் தரிப்பதே வெட்கம்’ என்னும் காலம் வந்துவிட்டது. ஆதலால், மன்னர் பிரான் எனக்கு அளித்த நைட் பட்டத்தைத் திருப்பிப் பெற்றுக் கொள்ளுங்கள்! நான் சிறப்பான பட்டங்களில்லாமல், எனது நாட்டுப் பொது ஜனங்களுடன் சேர்ந்திருக்க விரும்புகிறேன்.” இதுவே ஜோரசங்க மாளிகையிலிருந்து 30-5-1919-ல் தாகூர் செம்ஸ்போர்டு பிரபுவுக்கு எழுதிய கடிதத்தின் சுருக்கமாகும். காந்திஜீ அழைப்பிற்கிணங்கி தாகூர் குஜராத்திற்குச் சென்றார்; சபர்மதியில் ஒரு நாள் தங்கினர்; பாவநகர், லிம்பிடி, ஆமதபாது, பம்பாய், சூரத் முதலிய இடங்களைப் பார்த்துக் கொஞ்சம் பண வசூலும் செய்துகொண்டு திரும்பினர்.

---

## 33. ஐரோப்பாவில்

**15-5-1920;** கெய்சர் போர் முடிந்தது; தாகூர் ஐரோப்பாவுக்குப் புறப்பட்டார். அகாகான், ஆழ்வார் மகாராஜா முதலியோர் கவிக்குத் துணையாகச் சேர்ந்தனர். இலண்டனில் பியர்ஸன் தாகூரை வரவேற்றார். ஏராளமான புலவர்நட்புக் கிடைத்தது—ரோதென்ஸ்டெயன், ஹட்ஸன், கிராஹாம், ரஷ்யச் சைத்திரிகன் நிகொலஸ் ரோரிச் (Roerich), பெர்னார்டு ஷா, டாக்டர் ராபெர்ட் ப்ரிட்ஜ் (கவி), ஆண்டர்சன், ஜில்பர்ட் முர்ரே, ஜார்ஜ் ரஸ்ஸல் (A-E) முதலியோர்.

ஆக்ஸ்ஃபோர்டிலும், கேம்ப்ரிட்ஜிலும் கவியரசருக்குச் சிறப்புகள் நடந்தன. மாந்தேகு பிரபுவுடன்

தாகூர் பஞ்சாப் படுகொலையைப் பற்றிப் பேசிப் பாராள் சபை டயரைக் கண்டிப்பதற்குப் பதிலாக இனமளித்துப் புகழ்ந்ததை அக்கிரமம் என்ருர்; அப்போது, இந்தியா உபகாரியதரிசியாயிருந்த சின்ஹாப் பிரபுவைக் கண்டு உறவாடினர்.

டயர்விசாரணையின்போது, தாகூர் இலண்டனில் இருந்தார்; அப்போது பல பத்திரிகைகளுக்குப் பேட்டி யளித்து, பஞ்சாப் விஷயமாகவும், இந்தியாவைப் பற்றியும் தம் எண்ணங்களைத் தெரிவித்தார். அவற்றின் சுருக்கமாவது :

"சகோதரர்களே, மிருக பலம் மனிதத் தன்மையை நசுக்கும்போதுதான் ஆன்மா வெல்லொணதது என்று உறுதியாக்கும் சமயம் வருகிறது. நாம் அஞ்சோம்; ஆனல், பழிக்குப் பழி வாங்கவும் கருதோம். தம்மை வென்று, பொறுமையை உபதேசித்து, அன்பைப் பரப்பிய புத்தரின் திருவுருவை நமக்குத் தந்த முன்னேர்களுக்கு நன்றி செலுத்துவோம்; பிறரைச் சார்வதால் நமக்கு மோட்சமில்லை; நமக்குள் உள்ள குறைகளை நீக்கவேண்டும்; நம் கல்வி, பொருளாதாரம், சமுதாய வாழ்வு-இவற்றை முறையாக அமைக்கவேண்டும். தியாகத்திற்குத் தயாராயிருங்கள்; பொது நலத்திற்காக இடர்களைப் பொறுங்கள்! இந்தச் சம்பவத்தால் ஒரு விழிப்பு எற்பட்டுள்ளது. இது, நாட்டில் சுயமரியாதை, பொருளாதார முன்னேற்றம், அத்யாத்ம சுதந்தரம் ஆகியவற்றிற்கு அடிப்படையாகும் என்பதுறுதி. சினமும், பழிவாங்கும் நினைப்பும் வீண்; கெஞ்சிக் கூத்தாடலும் வேண்டா! அச்சமின்றி நிலையான பணி புரிவோம். அதுவே பெருமை பெறும் வழி."

மாந்தேகு சீர்திருத்தத்தைப் பற்றி மக்கள் தாகூரைக் கேட்டனர். அதற்கு அவர் "அதில் எனக்கு அக்கறையில்லை; அதனால் விடுதலை யில்லை. எனது காலத்தை நிலையான பணியில் செலவிட விரும்புகிறேன். அரசியலைவிடச் செய்யவேண்டிய அரிய பணிகள் உள்ளன. அவற்றிலேயே நான் கவனம் செலுத்துவேன்" என்றார். ஆம், யார் யாருக்கு, எது எதுவோ, அதது அவரவர்க்குத் தகுதி. குயிலுக்கொரு வேலை—கோழிக்கொரு வேலை. காவி யச் சோலையில் கூவும் குயிலைக் கோழிச் சண்டைக் குப் பழக்கலாமா? தாகூர் போன்ற வரகவி அரசி யல் போராட்டத்தில் தம் காலத்தைக் கழிப்பது, அருங்கலை வளர்ச்சிக்கு நஷ்டமாகும். சாந்திநிகே தனில் அவர் செய்துள்ள பெரும் பணியே ஓர் அற்பு தம்! கல்வி, கலை, கவிதை, சித்திரம், தொழில், பத்திரிகை, பொருளாதாரம், சீர்திருத்தம், உரி மைப் போராட்டம் முதலிய எத்தனையோ வேலைகள் ஒரு நாட்டின் முன்னேற்றத்திற்கு வேண்டும். யார் யார் எதெதில் திறமை கொண்டவர்களோ, அவரவர் அததிலேயே ஈடுபட்டால், எடுத்த காரியம் பூரணமாக நிறைவேறும். தாகூரின் பணி மிகப் பெரிது:

"Where the mind is without fear
and the head is held high;
Where knowledge is free;
Where the world has not been broken up
into fragments by narrow domestic walls;
Where words come out from the depth
of truth;

Where tireless striving stretches its arms
towards perfection;
Where the clear stream of reason has
not lost its way into the dreary desert-
sand of dead habit;
Where the mind is led forward by Thee
into ever widening thought and action—
Into that Heaven of freedom, my Father,
let my country awake!"* *(Gitanjali)*

இலண்டனிலிருந்து தாகூர் பாரிஸ் சென்று மெஸ்ஸியே கஹன் (Kahn) என்னும் கோடீசுரர் விருந்தாளியா யிருந்தார்; பாரிஸில் 'கிழக்கும் மேற்கும்' என்பது பற்றிப் பேசினார்; பல பிரெஞ்சுப் புலவர்களைக் கண்டார். ஜெர்மன் போரால் பாழ்பட்ட ஊர்களைக் கண்டு வருந்தினார்; பிரான்ஸைச் சுற்றிப் பார்த்து, தாகூர் உலாந்தா (Holland) சென்றார்; ஹேக், லேடென், உட்ரெட்ச் முதலிய இடங்களில் கிழக்கு—மேற்குக் கலைகளைப் பற்றிப் பேசினார்; புருஸெல்ஸில் மன்னர் உபசரணை பெற்றார்; மீண்டும் பாரிஸ் சென்று இலண்டனுக்கு வந்தார். ஆங்கிலேயர் அவ்வளவு சுமுகமாயில்லை; அமெரிக்கா செல்ல உத்தேசித்தார் கவி. "வரவேண்டா; பொது ஜன அபிப்பிராயம் திருப்தியா யில்லை" என்று ஜே. பி. போன்ட் தந்தி கொடுத்தார். தாகூர் கேட்கவில்லை; "கிழக்கின் முறையீட்டை அமெரிக்கர் கேட்கவே வேண்டும்" என்று தைரியமாகக் கப்பலேறி நியூயார்க் வந்து சேர்ந்தார். இந்தத் தடவை அமெரிக்க விஜயம்

[* இதன் மொழிபெயர்ப்பை 63-ஆம் பக்கத்தில் காண்க.]

ஏமாற்றமே அளித்தது. புரூக்லின் அகெடெமியில் (Academy of Brooklyn), "The Meeting of East and West" (கிழக்கு-மேற்குச் சந்திப்பு) என்பது பற்றியும், ஃபிலடெல்ஃபியாப் பெண் கல்லூரியில் "The mystic Poets of Bengal" என்பது பற்றியும், நியூயார்க் National Art Club-ல் "The Poet's Religion" என்பது பற்றியும் பேசினர். ஆனல், தமது ஆசிரமத்திற்காகப் பணம் சேர்க்க முயன்றபோது, ஒரு டாலர்கூடக் கிடைக்கவில்லை ; ஏன் ? 'தாகூர் பிரிட்டிஷ் விரோதி ; ஜெர்மன் பணம் வாங்கிக்கொண்டு ஆங்கிலேயர் மேல் இப்படிச் சொற்குண்டு வீசுகிருர் !' என்ற புரளி நாடெங்கும் பரவி, எதிர்ப் பிரசாரமும் நடந்தது. அச்சமயம் இந்தியாவில் ஒத்துழையாமை இயக்கம் மும்முரமாக நடந்தது ; மகாத்மா காந்தி ஒரு முறை ஷௌகத்தலியுடன் சாந்திநிகேதனுக்கு வந்தார். (செப்டம்பர் 1920). ஒத்துழையாமை வேகம் காட்டுத் தீப்போலப் பரவியது. சாந்திநிகேதன மாணவர் அந்த ஆண்டு மெட்ரிகுலேஷன் பரீக்ஷையைப் பகிஷ்கரித்தனர். கல்கத்தாக் கல்லூரி மாணவர் பலர் படிப்பை விட்டு, கிராமசேவை செய்ய வந்து சேர்ந்தனர்—இது வேறே புரளி! அமெரிக்கர் "ஒத்துழையாமையைப் பற்றி உமது அபிப்பிராய மென்ன?" என்று கேட்டனர். "நான் ஆத்ம சக்தியை நம்புகிறேன் ; மிருக பலத்தை வெறுக்கிறேன்" என்று மகாத்மாவைத் தாங்கிப் பேசினர் ; ஆங்கில அதிகார வர்க்கத்தைத் தாக்கிப் பேசினர். பத்திரிகைகளிலெல்லாம் பலமான பேனக் குத்து; இரகசியப் பிரசாரம்—தாகூர் உத்தேசம் நிறைவேறவில்லை. நியூயார்க்குப் பிரசங்கம் ஒன்றில், தமது உணர்ச்சியைக் கொட்டித்

தள்ளித் தாகூர் இலண்டனுக்கு வந்தார். அங்கே "கிழக்கு-மேற்குச் சந்திப்பு" என்னும் கட்டுரை படித்தார்—பாரிசுக்குப் பறந்தார்; அங்கே ரோமா ரோலானை (Romain Roland)க் கண்டு அளவளாவினர்; சில இடங்களில்பேசினர். "The Public Spirit of India" என்பதே அவர் செய்த புதுப் பிரசங்கம். பாரிஸில் ஸ்ரீதர் ராணா என்ற முத்து வியாபாரி இருந்தான்; அவன் விசுவ பாரதிக்குப் பெரிய புத்தகசாலை தந்தான். கொஞ்சம் பணமும் சேர்ந்தது. பிறகு தாகூர் ஜெனிவாவுக்கு வந்து Roussean Institute-ல் "கல்வி" என்னும் பொருள்பற்றிப் பேசினர். பிறகு ஜெர்மனிக்குச் சென்றார். ஜெர்மனியில் அவருக்கு அபார மரியாதை நடந்தது. அன்று அவருக்கு 61-ம் ஆண்டுப் பிறப்பு; அந்த நாளை ஜெர்மனியில் சிறப்பாகக் கொண்டாடினர். கவியரசருக்கு ஓர் உபசாரப் பத்திரமும், ஜெர்மன் இலக்கியங்களும் அளித்தனர். ஜெர்மானியரின் அன்பைத் தாகூர் மெச்சித் தமது கடிதத்தில், "ஜெர்மானியர் என்னைத் தம்முள் ஒருவனாகக் கருதி அமோகமான மரியாதை செய்தனர்; நான் மாறிப் பிறந்ததுபோல் உணர்ந்தேன். மற்றெல்லா நாடுகளையும்விட ஜெர்மனி இந்தியக் கலையை அன்புடன் வரவேற்று ஆதரித்தது; அறிவுக் கலையிலும், ஆத்மக்கலையிலும் இந்த நாடு உலகிற்கே ஐக்கியவழிகாட்டி விளங்குகிறது. இந்தக் கவிவடிவாக இந்தியா ஜெர்மனியின் மரியாதையைப் பெற்று நன்றி தெரிவிக்கிறது!" என்று எழுதினர். *

ஜெர்மனியில் தாகூரின் அரிய பெரிய நண்பா

---

* இஃது அக்கால ஜெர்மனியைப்பற்றியது. நாஜீ ஜெர்மனி தாகூர் நூல்களைத் தடுத்துவிட்டது.

கௌண்ட் கெய்சர்லிங். இவர் டார்ம்ஸ்டாட்டில் பெரிய பொருட்செல்வர், கலைச்செல்வர். இவர் தாகூரைப் பலமுறை சந்தித்தார்: "1912-ல் கல்த்தாவில் இவரை நான் பார்த்தேன்; பிறகு இலண்டன் டார்ம்ஸ்டாட் முதலிய இடங்களிற் கண்டேன்; நான் கண்டவர்களில் மிகவும் வணங்கத் தக்க ஒருவர் இவரே; காலைமலர்கள்போல இவர் வாக்கில் கவி மலர்கள் பூக்கின்றன. தாகூர் பெரிய செல்வர்; இராஜகம்பீரமாக வாழ்கிறுர். இவர் தமது வாக்கினுல் புதிய வங்க சமுதாயத்தை ஆக்கினுர். நான் கவலையுற்றிருக்கும் ஒரு சமயம் தாமே ஒரு படம் வரைந்து அதனடியில்,

**" Faith is the bird which sings**
**Where the night is still dark "**

(மனவுறுதிப் பறவை இன்னும் இருண்ட இரவிலும் பாடுகிறது) என்று எழுதியனுப்பினுர். அஃது நண்பருக்கு ஆறுதலளித்தது."என்றுஎழுதியுள்ளார். தாகூர் கோபன் ஹேகன்சென்றுர்; பிறகு ஸ்வீடன்சென்றுர். அமோகமான வரவேற்பு நடந்தது. உப்சாலா ஆர்ச் பிஷப்பே முன்னின்று பெரிய ஊர்வலம் நடத்தினுர். ஸ்வீடன் அரசர் கவியரசருக்கு மிக்க மரியாதை செய்தார். வெற்றி மாலைகளுடன் தாகூர் பெர்லினுக்கு வந்து, சர்வகலாசாலையில் பேசினுர்; மூனிச் சர்வகலா சாலையில் உருக்கமான பிரசங்கம் செய்தார்; இப்படிப் பல இடங்களில் புகழ்பெற்று டார்ம்ஸ்டாட்டில் ஹெஸ் (Hesse) பிரபுவுடனும், கௌண்ட் கெய்சர்லிங் குடனும் அளவளாவினுர். அந்த ஊரில் கெய்சர்லிங் " அறிவுச் சாலை " (School of Wisdom) ஒன்று நடத்தினுர். அதில் தாகூர் இந்தியக் கலைஞானத்தையும்,

ஆத்ம ஞானத்தையும் பற்றிச் சில வகுப்புகள் நடத்தினர்; ஜெர்மன் தொழிலாளருக்கு ஓர் அரிய சொற்பொழிவாற்றினர். ஸ்டாஸ்பர்க், வியன்ன, ப்ரேக், ப்ராங்க்ஃபோர்ட் முதலிய இடங்களைப் பார்த்துக்கொண்டு கப்பலேறி, 16-7-1921-ல் தாகூர் இந்தியா வந்து சேர்ந்தார். இது தாகூரின் ஐந்தாவது உலக யாத்திரை.

---

## 34. தியாகம்

**தா**கூர் பெரிய எண்ணங்களுடன் கல்கத்தாவுக்கு வந்தார். எங்கே திரும்பினலும் ஒத்துழையாமைக் கூச்சல்; "நீரும் வாரும்; ஒத்துழையாமையில் சேரும்!" என்று அவரைச் சுற்றியும் பல குரல்கள் எழுந்தன. தாகூருக்கு இந்தத் தெருக்கூச்சல் பிடிக்கவில்லை; ஜாதிய சிக்ஷாபரிஷத்தில் "சிக்ஷார் மிளன்" (கலைகளின் கலப்பு) என்ருெரு கட்டுரை படித்தார். அதில் ஒத்துழையாமையைக் கண்டித்தார்; அது நாட்டிற்கு ஒத்துவராது என்று வெளிப்படையாகச் சொன்னர். பலர் இதை ஆட்சேபித்தனர்: எதிர்த்தனர். தாகூர் எதிர்ப்பைச் சொல்லால் எதிர்த்தார். 6-9-21-ல் மகாத்மா காந்தியே ஜோரசங்க மாளிகையில் தாகூருடன் ஒத்துழையாமையைப் பற்றிப் பேசிச் சமாதானம் சொன்னர்; எனினும், தாகூருக்கு அவ்வளவாகப் படவில்லை. அவர் உலகெல்லாம் கலையுறவுகொண்டு வாழ ஒரு பெரிய நிலயம் கண்டார். 22-12-1921-ல் விசுவபாரதிக்கு அங்குரார்ப்பணமானது. இராஜேந்திரநாத் ஸீல் தலைமை வகித்தார். விசுவபாரதி நடை முறை, கொள்கை, நிர்

வாகம் அனைத்தையும் பற்றித் தாகூர் விரிவாகப் பேசினர். இரதீந்திர நாதர் காரியதரிசி யானர். தாகூர் தமக்கென எதுவும் வைத்துக்கொள்ளாமல், விசுவபாரதிக்கே அனைத்தையும் தந்துவிட்டார்: நோபெல் பணம், தமது சொத்துசுதந்தரம், கட்டிடங்கள், நிலபுலங்கள், தம் இலக்கியச் செல்வங்கள், தாம் வசூலித்த பணம், இன்னும் வசூலிக்கும் பணம், தம் ஆயுள், ஆற்றல்—எல்லாவற்றையும் அந்தப் பெரிய விசுவகலாயக்ஞத்திற்கே அர்ப்பணித்தார். நாலா பக்கத்திலிருந்தும்கலைப்புலவர்கள் பலர் வந்து அந்த யக்ஞத்தில் தமது வாழ்வை வழங்கினர். கலைமட்டு மன்று, வறுமை நீங்கும் தொழில்களையும் நாட்டத் தாகூர் முயன்றார். 6-2-1922-ல், கிராமசேவைக்காக ஸ்ரீநிகேதனம் எழுந்தது. அதை வெற்றிபெற நடத்த வந்தார் எல்ம்ஹிர்ஸ்ட் (Elmhirst) என்னும் அமெரிக்கச் செல்வர்; சும்மா வரவில்லை; வருஷம் அரை லக்ஷம் ரூபா வரும்படியுடன் வந்தார். தாகூர் வாணியின் உருவமே விசுவபாரதியும் ஸ்ரீநிகேதனும். அன்று முதல் தாகூரின் கவனமெல்லாம் விசுவபாரதியிலேதான் இருந்தது. அதற்கு நிதி திரட்ட அவர் நாடெங்கும், உலகெங்கும் சுற்றினர். பம்பாய், பூனா, மைசூர், பங்களூர், திருவாங்கூர், கொச்சி, சென்னை, கொழும்பு, கத்தியவார், கராச்சி, சிந்து, ஐதராபாது, தக்கண ஐதராபாது முதலிய இடங்களி லெல்லாம் பெருந்தொகை சேர்ந்தது. சுதேசமன்னர் தாராளமாகப் பொருள் தந்தனர். நைஜாம் மட்டுமே இலட்சம் தந்தார்! டாடா கம்பெனி 25,000 தந்தது. தற்கால பாரதக்கலை, விசுவபாரதியின் நோக்கம், தமது வாழ்வின்பணி முதலியவைபற்றித் தாகூர் ஊர்

ஊராகப் பேசினர். இச்சமயமே மகாத்மா ஆறுண்டு தண்டனைபெற்று எராவாடாச் சிறைசென்றார்.

அதைக்கேட்டதும் தாகூர் தமது 60-ஆம் ஆண்டு விழாக் கொண்டாட்டத்தை நிறுத்திவிட்டார். மகாத்மாவின் தியாகத்தைப்பற்றி உருக்கமாகப் பேசினர். தம் சுற்றுப் பிரயாணங்களுக்கிடையே சபர்மதிக்குவந்து ஒரு நாள் இருந்து சென்றார். சுற்றுப்பிரயாணம் முடிந்ததும் தாகூர் தமது நிலயக் கொள்கையைப் பரப்பவும், கலையினால் உலகின் உள்ளத்தை ஒன்று சேர்க்கவும் விசுவ பாரதி என்னும் காலாண்டுப் பத்திரிகையைத் (Quarterly) தொடங்கினர். தாகூருக்குத் தம் நண்பரிடம் பரம விசுவாசமுண்டு. இச் சமயம் இத்தாலியிலிருந்து ஒரு 'கேபிள்' (கடல் தந்தி) வந்தது: பியர்ஸன் ஒரு ரயில் விபத்தில் இறந்தார். தாகூரின் துயருக்களவில்லை; தம் சகோதரர் சத்யேந்திரர் இறந்தபோது வருந்தியது போல், பியர்ஸன் பிரிவுக்காக வருந்தினர்; அவர் பெயரால் சாந்திநிகேதனில் பியர்ஸன் ஆஸ்பத்திரி கட்டினர்.

---

## 35. சீன யாத்திரை

**ம**றுபடியும் அழைப்பு—சீனப் பல்கலைக் கழகப் புலவர், தலைவர் லியாங்-சி-சாவோ (Liang-Chi-Chao) தாகூரைச் சில பிரசங்கங்களுக்காக அழைத்தார். எல்ம்ஹிர்ஸ்ட், க்ஷிதிமோஹன் ஸேன், நந்தலால் போஸ், காளிதாஸ் நாக் ஆகியவர்களுடன் தாகூர் புறப்பட்டார், (21-3-24). இந்த யாத்திரைக்கு J. K. பிர்லா ரூ. 10,000 அளித்தார். இரங்கூன், பினங்

கோலாலம்பூர், சிங்கப்பூர், சையாம் முதலிய இடங்களிலெல்லாம் குதூகலமான வரவேற்பு! 12-4-24; ஷாங்கை வந்தார்—அமோகமான வரவேற்பு; கவியரசர் வந்ததும் சீனர் மனம் பூரித்துப்போனார்கள்! இந்தியாவுக்கும் சீனத்திற்கும் உள்ள கலையுறவையும் கருத்துறவையும் பற்றித் தாகூர் அழகாகப் பேசினார். வெள்ளைக்காரர் நாகரிகத்தைக் காப்பியடிக்கக் கூடாதென்று வெளிப்படையாகச் சொன்னார். இஃது ஆங்கில மோகங்கொண்ட சிலருக்குப் பிடிக்கவில்லை. ஜப்பானியர் கூட்டமொன்றில் தாகூர் பேசினார். என்ன? "ஹே ஜப்பானே, நீயும் வெள்ளைக்காரர் போலே நாடுபிடிக்கும் வெறி பிடித்தலைகிறாய்! சீனத்தில் நீ செய்யும் கொடுமை, நாகரிக வாழ்விற்கே கேடாகும். உன் வெறியை அடக்கு; நீ கிழக்கொளி என்பதை அறி; மேற்கின் போர் வெறியை ஒழி!" என்று அழுத்தமாகப் பேசினார். ஆங்கில-அமெரிக்கச் சங்கமொன்றில் வெள்ளைக்காரரின் சுயேச்சாதிகாரத்தையும் அவர்கள் ஆசியாவில் அடிக்கும் கொட்டத்தையும், இந்தியாவைப் படுத்தும் பாட்டையும் பற்றிச் சண்டமாருதம் பொழிந்தார். ஆங்கில, அமெரிக்கப் பத்திரிகைகள் தாகூரைத் தூற்றின. "ஐயோ இவன் என் வாயைத் திறக்கிறான்?" என்று தலையில் அடித்துக் கொண்டது உண்மையால் உடம்பெரியும் சுயேச்சாதிகாரம்! பீக்கிங்கில் தாகூரை இளஞ்சீனர் உற்சாகமாக வரவேற்றனர். அனைவரும் தாகூருக்கு அடியா ராய்விட்டனர். சீனாவுக்கும் தாகூருக்கும் அன்புறவு மிகுந்தது. விசுவபாரதியில் சீனாப்பவனம் ஒன்று நாட்டி, சீன இலக்கியங்களை யெல்லாம் அவர் மொழிபெயர்க்கச் செய்தார். சீன அறிஞர் சில

ரும் விசுவபாரதியில் இருக்கின்றனர். ஜப்பானுக்குத் தம் பேச்சுப் பிடிக்கவில்லை யென்று தெரிந்தும், தாகூர் டோகியோவுக்குச் சென்றார். (29-5-24); அங்கே 'உலகோர் உறவு' என்பது பற்றிப் பேசினர். "ஜப்பானியரின் அறிவிலும் கலையிலும் எனக்கு ஆழ்ந்த மதிப்புண்டு; ஆனல், மேற்கு நாடுகளை அபிநயித்து மண்வெறியும், அதிகாரச் செருக்கும் கொண்டு, எளிய நாடுகளைப் பாய்ந்துபற்றித் துயர் செய்யும் கொடுமையை நான் பொறுக்க முடியாது" என்று தைரியமாகச் சொல்லிவந்தார். இரச்விகாரி வசு என்பவர் புரட்சிக் குற்றத்திற்காக நாடு கடத்தபெற்று ஜப்பானில் வசித்தார். அவர் தாகூரை அன்புடன் வரவேற் றுபசரித்தார்.

தாகூர் கல்கத்தா திரும்பி வந்தார்; வந்ததும் ஒரு விவாதம்: லிட்டன் பிரபு டாகா போலீஸாருக்குப் பரிந்து பேசும் போது, வங்கப் பெண்களைப்பற்றி ஏதோ ஆபாசமாகச் சொல்லி விட்டார்; நாடெல்லாம் கொதித்தெழுந்தது. தாகூர், "தாங்கள் எங்கள் பெண்களைப்பற்றி அப்படிக் கெடுதலாகச் சொன்னதற்கு ஆதாரம் காட்டுங்கள்! உங்களை எதிர்த்துப் பேச நாடு தயாராயிருக்கிறது" என்று லிட்டன் பிரபுவுக்கே ஒரு பலமான மறுப்பு எழுதியனுப்பினர்.

---

## 36. ஏழாவது பிரயாணம்

தென் அமெரிக்காவைச் சேர்ந்த பெரு (Peru) குடியரசின் நூற்றாண்டு விழாவிற்கு அழைப்பு வந்தது—உம் புறப்படு! தாத்தாவானலும் தளராமல் பிரயாணம்! எல்ம்ஹிர்ஸ்டுடன் தாகூர் தென்னமெரிக்கா

வுக்குப் புறப்பட்டார். வழியில் நோய்வந்தது; போனஸ் ஐர்ஸில் குதூகலமான வரவேற்பு நடந்தது. உடம்பு சரியாயில்லாததால், தாகூர் ஸான்இஸடோரில் ஓர் அழகான தோட்ட வீட்டில் தங்கியிருந்தார். மாதாம்விக்தோரியா ஒகாம்போ என்னும் பெண்மணி தாகூருக்கு அன்னைபோல் உதவினாள். இப்பெண் அறிவிலும் அழகிலும் காரியத் திறமையிலும் புகழ்பெற்று விளங்கினாள். தாம் அங்கே எழுதிய 'பூர்பி' என்னும் பாடல்களைத் தாகூர் இப்பெண்மணி பெயருக்கே அர்ப்பணித்தார்; அவள் பெயரை "விஜயா" என்று மாற்றினார்.

4-1-1925-ல் தாகூர் கப்பலேறி ஜெனோவாவுக்கு வந்தார்; மிலானில் சங்கீதத்தைப் பற்றி நீண்ட நேரம் பேசினார். வெனிஸ் நகரம் தாகூருக்குச் சிறப்பாக மரியாதை செய்தது. 17-1-25; தாகூர் இந்தியாவுக்கு வந்தார். சாவுச் செய்திகள் தொடர்ந்தன; அருமைத் தமையனார் ஜோதீந்திரநாதர் காலஞ்சென்றார்; தேசபந்து சித்தரஞ்சனர் காலஞ்சென்றார். அவரைப்பற்றித் தாகூர் நான்கு உருக்கமான வரிகள் பாடினார்.

---

## 37. சர்க்கா

இச்சமயம் மகாத்மா காந்தி கல்கத்தாவுக்கு வந்து, சாந்திநிகேதனுக்கு விஜயம் செய்தார். கவியும் மகாத்மாவும் நீண்ட நேரம் பேசினர். தாகூருக்குச் சர்க்கா சுற்றி சுயராஜ்யம் வரும் என்ற நம்பிக்கையில்லை; மாடேண் ரிவ்யூவில் அவர் 'The cult of the Charka' என்ற ஒரு நீண்ட கட்டுரை எழுதினார். எச்

சில் துப்பிக் குளம் நிறையுமா? பெரிய பெரிய யந்திரங்களுடன் இந்தப் பழைய சர்க்கா போட்டியிட முடியுமா? என்று வெளுத்து வாங்கினர். மகாத்மாவும் தகுந்த பதில் கொடுத்தார். ஸமரஸ போதினியில் இதைப்பற்றி நான்கு தலையங்கங்கள் எழுதியிருந்தேன். கட்டுரைத் தொகுதியில் காண்க! பி. ஸி. ரே. தாகூர் கருத்தை எதிர்த்து, மகாத்மாவை ஆதரித்துப் பேசினர்; அவர் எப்போதும் கதரே அணிபவர். பிற்காலம் தாகூரே கதர் அணிந்து ஒருமுறை மகாத்மாவை வரவேற்றார்.

---

## 38. உரோம் யாத்திரை

**தா**கூர் புகழ் ஐரோப்பாவில் பரவாத இடமில்லை; முஸ்ஸோலினி தாகூர் நூல்களின் இத்தாலிய மொழிபெயர்ப்பைப் படித்து, அவர்மேல் பேரன்பு பூண்டான்; புலவர் டக்கி என்பவர் மூலம் அரிய நூல்களை அன்புக் காணிக்கையாக அனுப்பினன்.

12-5-1926; தாகூர் எட்டாவது தடவை கப்பலேறி மேற்கே சென்று மிலானை அடைந்தார். அங்கிருந்து தனி வண்டியில் உரோமுக்கு வந்தார். "இத்தாலியத்தில் தங்கள் நூல்களைப் படித்து வியப்பவன்" என்று முஸ்ஸோலினி தன்னை அறிமுகப்படுத்தித் தாகூரைச் சந்தித்துப் பேசினன்; உரோமிலும், நேபிள்ஸிலும் விமரிசையான உபசரிப்புகளுக்கு ஏற்பாடு செய்தான். தாகூர் "கலையின் பொருள்" என்பதைப் பற்றியும், தமது இளமை நினைப்புகளைப் பற்றியும் அழகாகப் பேசினர். 30,000 பேர் கூட்டம்! தாகூர் வரும்போதும், போகும்போதும் அத்தனைப்

பேரும் எழுந்து மரியாதை செய்தனர். 1000 மாண வர் சேர்ந்து வரவேற்புப் பாடினர். ஊர்வலம் அமளியாக நடந்தது. இந்த வைபவத்தில் கலந்து கொண்ட என் ஐரோப்பிய நண்பர் ஒருவர் இங்கே வந்திருந்தார்; "அன்று உரோம் முழுதும் தாகூர் மயமாயிருந்தது" என்ருர். இத்தாலியில் பவோலினி என்ற சம்ஸ்கிருத வித்வான் இருந்தார். அவர் தாகூர்மேல் ஒரு சுலோகம் பாடினுர்:

पुष्पपुरमितिख्यातं
श्रुत्वा वाक्यामृतं गुरोः ।
एष्यत्यभिनवां सज्ञां
फलपुरमतः परम् ॥

(இதை முன்னே பூநகர் என்றனர்; குருதேவர் வாக்கமுதம் கேட்ட பிறகு இது பலபுரம் எனப் படும்.)

தாகூர் தமது ஆசிரமத்தைப் பற்றிப் பேசி ஞர்; அதைக்காணப் பலர் ஆவல்கொண்டனர். மறு நாள் தாகூர் முஸ்ஸோலினியுடன் நீண்டநேரம் பேசிக்கொண்டிருந்தார். ஆனல், இந்த உபசரணை யால் ஒரு கெடுதல் நேர்ந்தது. 'தாகூர் பாஸிஸத்தை ஆதரித்தார்' என்று பத்திரிகைகள் கட்டிவிட்டன. எதிரிகள் தாகூரை மொய்த்துக்கொண்டு, "நீர் பாஸி ஸ்டா?" என்று கிண்டத்தொடங்கினர். "முஸ் ஸோலினியின் அறிவாற்றல்களையும், கல்விக்காக அவர் செய்துள்ள காரியங்களையும் நான் மெச்சுகிறேன்; ஆனல், பாஸிஸத்தை நான் ஒப்பமாட்டேன்" என்று

தாகூர் பதில் எழுதி 'மாஞ்செஸ்டர் கார்டியன்' பத்திரிகையில் வெளியிட்டார். அதைக் கண்டதும் **Popolo d' Italia** என்ற பத்திரிகை தாகூர்மேல் சீறி விழுந்தது.

இத்தாலியில் அதிக அலேச்சலால் தாகூர் உடம்பு நோயுற்றது. அவர் அமைதிக்காக ரோமா ரோலான் வசித்த வில்நோவ் என்னும் சிற்றூர் சென்றார். அங்கே **Hotel Byrone**-ல் விக்தர் ஹ்யூகோ வசித்த அறையிலேயே தங்கியிருந்தார். அவரை ரோமா ரோலான் அன்புடன் கவனித்துத் தினம் இரண்டு மூன்று தடவை வந்துபார்த்துப் பேசிக் கொண்டிருந்தார். கலே, இலக்கியம், கிழக்கு-மேற்கின் உறவு, உலகமைதி, நவ நாகரிகம், மகாத்மா காந்தி, அவரது ஒத்துழையாமை, ஐரோப்பாவின் போர் வெறி—இவற்றைக் குறித்தே இருவரும் பேசினர். அங்கே, இன்னும் புலவர் சிலர் நட்புங் கிடைத்தது. அங்கிருந்து தாகூர் ஃஜூரிச்சுக்குச் சென்றார். அங்கே, பாஸிஸக்கொடுமைக்கு இலக்காகி ஓடி வந்த இத்தாலியப் புலவரொருவர் மனேவி (ஸால்வடோரி) அதன் பயங்கரங்களே வர்ணித்தாள். உடனே, தாகூர் பாஸிஸத்தைக் கண்டித்து, மாஞ்செஸ்டர் கார்டியனில் ஒரு காரமான கட்டுரை எழுதினர். அதைக்கண்ட பாஸிஸப் பத்திரிகைகள் தாகூரைக் கண்டபடி வைதன. முன்னே தந்த இசைக்கும் இந்த வசைக்கும் கணக்குச்சரி!

தாகூர் இங்கிலாந்து சென்று தம் நண்பர்களேக் கண்டு பேசி நார்வே வந்தார். ஸின்ஹா பிரபுவும், மஹலாநோபிஸ் என்னும் அரிய அன்பரும் உடனிருந்து கவியின் சௌகரியங்களேக்

கவனித்தனர். ஓஸ்லோவில் (Oslo) நார்வே மன்னரே தாகூரை வரவேற்றுபசரித்தார். கோபன் ஹேகன், ஹாம்பர்க் முதலிய நகரங்களில் உபசரணை பெற்றுத் தாகூர் பெர்லின் வந்தார். தலைவர் ஹிண்டன்பர்க் தாகூரை வரவேற்று அன்புடன் உபசரித் தார் Philharmonic Hall-ல் தாகூர் "இந்தியத் தத்துவ ஞான"த்தைப்பற்றி மிகவும் இனிமையாகப் பேசினர். ட்ரெஸ்டன், கெரிலோஞ், ப்ரேக், பெல்க்ராட், ஸோஃபையா, புகாரெஸ்ட், ஆதென்ஸ், அலக்ஸாண்ட்ரியா முதலிய இடங்களில் மன்னரும் ஜனங்களும் போற்றி வரவேற்கப் புகழ்மாலை சுமந்து அரிய பிரசங்கங்களால் பாரத நாகரிகத்தையும் கலையையும் விளக்கி, தாகூர் 19-12-26-ல் சாந்திநிகேதன் வந்து சேர்ந்தார். இதுவே அவருடைய யாத்திரைகளில் மிகவும் வெற்றி பெற்றதாகும். கிரீஸ் மன்னர் அவருக்கு 'Order of the Star' பட்டம் சூட்டினர். கெய்ரோவில் பாராள் மன்ற (Parliament) க்கூட்டத்தைக் கூட ஒதுக்கிவைத்து, எல்லாரும் கவியரசரை உபசரித்தனர்.

---

## 39. ஜாவாப் பிரயாணம்

இங்கே வந்தும் அலைச்சலே! சங்கீத மகா நாடுகள், இலக்கிய சபைகள், ஹிந்தி ஸம்மேளனம், சங்கங்கள், திறப்புவிழாக்கள், நாடகங்கள் எனச் சும்மா அழைப்பு வரும். நெய்குழல்போல அங்கும் இங்குமாக இருப்பார் தாகூர்; இடையே கவிதை, நாடகம் எழுதுவார்; நாடகம் நடிப்பார். தாகூருக்கு ஒரே இடத்தில் இருக்கப் பிடிக்காது. பிரயாணத்தில்

விருப்பம் அதிகம். சாந்திநிகேதனில் 'நடிர் பூஜை' என்ற நாடகம் நடத்தினர். 'நடராஜன்' என்ற புதிய நடன-நாடகம் எழுதி அரங்கேற்றினர். விசித்ரா என்ற பத்திரிகை சித்திரங்களுடன் கிளம்பியது; ஆசிர்வதித்தார். அதற்கு 'யோகா யோகம்' என்னும் நாவல் எழுதினர்—அங்கே இங்கே இலக்கியச் சங்கம் நடத்தினர்; அரசர் சிலர் உபசரணை பெற்ருர். பிர்லா தந்த ரூ. 10000-த்தைக் கொண்டு புறப்பட்டுவிட்டார் ஒன்பதாம் யாத்திரைக்கு! (12-7-27); இப்போது கிழக்கிந்தியத் தீவுகள் கவியரசரை உபசரிக்கின்றன; சிங்கப்பூரில் கவர்னர் தலைமையில் ஜன ஐக்கியத்தைப் பற்றிப் பேசினர்; பிறகு, மலாகா, பினுங்கு, சுமத்ரா, படேவியா, பாலி, ஜாவா முதலிய இடங்களில் சுற்றிப் பல பிரசங்கங்கள் செய்தார்; ஜாவா நடனத்தையும் நாடகத்தையும் கண்டு வியந்தார். பாங்காக், சையாம் முதலிய இடங்களில் உபசரணை பெற்றுப் பல புதிய அனுபவங்களுடன் தாகூர் கல்கத்தா சேர்ந்தார். கிழக்கிந்தியத்தீவுப் பிரயாணம் தாகூருக்குப் பெருமகிழ்ச்சி யளித்தது. அந்தப் பிரயாணத்தின் போதே அவர் 'விஜயலக்ஷ்மி' என்ற பாட்டெழுதினர்; அதை ஜாவாவில் படித்தார். ஜாவா அரசர் தாகூரை மிகவும் அன்புடன் வரவேற்ருர். ஜாவாவின்மேல் அவர் பாடிய பாட்டு ஜாவா பாஷையிலும், ஜப்பானியத்திலும் மொழிபெயர்க்கப் பெற்றது. ஜாவா நாட்டியத்தைப்பற்றித் தாகூர் மிகவும் மெச்சி யெழுதியிருக்கிருர்.

---

## 40. துலாபாரம்

சதுரங்க நாடகம் நடத்துகிருர் கவி: இந்திய ஸயன்ஸ் காங்கிரஸ் அப்போது நடைபெறுகிறது; ஸயன்ஸ் புலவர் பலர் சாந்திநிகேதனுக்கு வருகின்றனர்; மாதாம்க்ளாரா என்னும் பெரிய பாடகி வருகிருள்; ஜெர்மன் சர்வகலாசாலே சம்ஸ்கிருதப் புலவர் லென்ஸி வருகிருர்; அவர்களே யெல்லாம் வரவேற்று உபசரிக்கிருர். தாகூருக்கு இப்போது 67 வயது; திருவிழா நடக்கிறது; முற்கால அரசர் துலாபாரம் நடத்துவர்; தாகூருக்கும் அவ்வாறே நடத்தினர்; எப்படி? தாகூரை ஒரு தட்டில் வைத்து, பொன்னினும் அதிகமான அவர்தம் நூல்களே மற்ருெரு தட்டில்வைத்து, இடைதூக்கினர்; அவருடன் இடைதூக்கிய புத்தகங்களேப் புத்தகசாலேகளுக்குத் தானம் செய்தனர். அதானதும் மறுபடி பிரயாணம்!

---

## 41. அரவிந்த தரிசனம்

**12-5-1928;** ஆக்ஸ்போர்டில் மதசம்பந்தமாக ஹிபர்ட் பிரசங்கம் செய்ய அழைப்பு வந்தது. புறப்பட்டார் தாகூர்; சென்னே வந்து அடையாற்றில் ஒரு வாரம் இருந்தார்; பிறகு கொழும்புக்குக் கப்பலேறினர்; வழியில் ஸ்ரீ அரவிந்தரைத் தரிசித்தார். ஸ்ரீ அரவிந்தர் புன்னகையுடன் தாகூரை வரவேற்ருர்: "தாங்கள் என் ஐரோப்பாச் சென்று ஆத்மீக விஷயமாகப் பிரசங்கம் செய்யக் கூடாது?" என்று கேட்டார் கவி. "ஐரோப்பா உருப்பட வேண்டுமானுல், இந்தியாவுக்கு வரவேண்டும்" என்ருர் அரவிந்

தர். "அரவிந்தரைப் பார்த்ததுமே அவர் ஆத்மசித்தி பெற்று விட்டார் என்றறிந்தேன் ; உள்ளொளியால் அவர் முகம் பொலிந்தது ; அவர் ஆத்ம சுதந்தரமும், சர்வாத்ம தர்சனமும் பெற்ற பாரத ரிஷிபோல அமைதியாகப் பேசினர். 'தங்களிடம் வாக்குள்ளது ; அதைப்பெற நாங்கள் காத்திருக்கிறோம் ; 'என்னைக் கேள்' என்று இந்தியா தங்கள் வாக்கினல் உலகிற்குப் பேசும்' என்றேன். பல்லாண்டுகளுக்கு முன்னே அவரை வீரவாலிபராகக் கண்டு, 'அரவிந்த, இரவீந்திரர் வணக்கத்தை ஏற்றுக்கொள்!' என்று பாடினேன். இன்று பரமஞானியாய், உள்ளாழ்ந்த மோனியாய் அவரைக் கண்டேன் ! 'அரவிந்தா, இரவீந்திரன் வணக்கம் ஏற்றருள் !' என்று மனத்திற்குள் சொல்லி வந்தேன்" என்று தாகூர் மாடேண் ரிவ்யூவில் எழுதினர்.

தாகூர் கப்பலேறி இலங்கை சென்ருர், சுற்றிப் பார்த்தார் ; மேலே செல்ல உடம்பு இடந்தரவில்லை—நோய்; திரும்பி பங்களூருக்கு வந்து ஓய்வெடுத்துக் கொண்டார். மைசூர்ச் சர்வகலாசாலை உதவியத்யக்ஷகரான விரஜேந்திர நாத் ஸீல் என்னும் வங்க அறிஞர் தாகூரை வரவேற்று உபசரித்தார். அங்கும் கவி எழுதுவது நிற்கவில்லை. "ஸேஷேர் கபிதா"வை முடித்துக்கொண்டு கவி சாந்திநிகேதனம் வந்தார் ; பிரம சமாஜ நூற்றுண்டு விழாவுக்குத் தலைமை வகித்து இராம்மோஹனைப் பற்றிப் பேசினர்; கல்கத்தாவில் நடந்த சர்வமத மகாநாட்டைத் தலைமை வகித்து நடத்தினர்; இர்வின் பிரபுவை சாந்திநிகேதனில் வரவேற்ருர்.

---

## 42. கானடா பயணம்

மறுபடியும் கப்பலேறுகிறார்; கானடா கல்விச் சங்கத்திலிருந்து அழைப்பு! டோகியோவில் இரண்டு நாள் தங்கி வான்குவார் சேருகிறார்; கல்விச் சங்க விழாவில் 'விஸ்ராந்தியின் தத்துவம்' என்ற பொருள்பற்றிப் பேசினார்; அடுத்த நாள் இலக்கியத்தைப் பற்றிப் பேசினார். ஹாவார்டு, கொலம்பியா, கலிபோர்னியா, டெட்ராய்ட் சர்வகலாசாலைகள் அழைத்தன. தாகூர் ஐக்கிய நாடுகளிற்குப் புறப்பட்டு லோஸ் ஏஞ்ஜெல்ஸுக்குச் சென்றார்: வழியில் தமது பாஸ்போர்ட்டை (பிரயாண அனுமதிச் சீட்டை) இழந்துவிட்டார். அங்கிருந்த துறைமுக அதிகாரிகள் மற்றக் கறுப்புமனிதரை அவமதிப்பது போலவே தாகூரையும் இழிவாக நடத்தினர். தாகூர் அதைக் கண்டித்து ஐக்கிய நாடுகளில் நுழைய மறுத்து, ஜப்பானுக்குத் திரும்பினார். கப்பலில் 68-ஆம் பிறந்தநாள் கொண்டாடப்பெற்றது. அங்கிருந்தவர்கள் அனைவரும் அதில் கலந்துகொண்டு மகிழ்ந்தனர். யோகஹாமாவில் வரவேற்பு! 'கிழக்குக் கலையும், ஜப்பானின் கடமையும்' என்பதுபற்றித் தாகூர் உருக்கமாகப் பேசினார்: "ஆசிய நாடுகளில் ஜப்பானே சுதந்தரமாகத் தலைதூக்கிச் சக்திபெற்று விளங்குகிறது. அது தன்னைப்போன்ற மனிதரை நன்குமதிக்க வேண்டும். மரியாதைக்கும், அன்பிற்கும், இரக்கத்திற்கும் உதாரணமாயிருக்கவேண்டும். தன் கீழிருக்கும் நாட்டை இரும்புக்காலில் வைத்து நசுக்கி நசுக்கிப் பிழிந்ததாக அதற்குக் கெட்ட பெயர் வரக்கூடாது. ஜப்பான் கொரியாவில் செய்

யும் கொடுமை அதற்கே கெட்டபெயர் தருகிறது. இன்று எளியராயிருப்பவர் நாளை வலியராகலாம்; காலச்சக்கரம் மாறும்; சொல்லும் செய்கையும் மாறு; தங்களுக்கு ஜப்பான் செய்யும் கொடுமையைக் கொரியர் மறக்கமாட்டார்கள். 'ஜப்பானின் கீழ் நாம் மனிதருக்குரிய உரிமைகளைப் பெற்றுச் சந்தோஷமாக வாழ்ந்தோம்' என்று கொரியர் உலகிற்குச் சொல்லும்படி நீங்கள் நடக்கவேண்டும்! தெய்வம் ஒன்றுள்ளது; அது மௌனமாக எச்சரிக்கை செய்கிறது; அநியாயத்தை அது தாங்காது. எளியவரை மதித்து நடவுங்கள்!"—இதுவே தாகூர் அன்று பேசியதன் சாரம். தாகூர் ஜப்பானியரின் மண்வெறிக் கொடுமைகளை இறுதிமட்டும் எதிர்த்து வந்தார்; சைனுவில் சிறப்பாக வரவேற்கப் பெற்ருர். சீனரிடம் தாகூருக்கு அனுதாபம் அதிகம். 5-7-1929-ல் தாகூர் சென்னைக்கு வந்து கல்கத்தா சென்ருர். ஜப்பானில் வழங்கும் ஜியுஜித்ஸு பயிற்சி தாகூருக்குப் பிடித்திருந்தது. தமது ஆசிரமத்தில் அந்தப் பயிற்சி தர ஒரு ஜியுஜித்ஸு பயில்வானை அழைத்துவந்தார். ஜப்பானியச் சித்திரங்களும் அவரை மகிழ்வித்தன.

---

## 43. சித்திரம் எழுதினுர்

**தா**கூரும் சித்திரம் வரையத் தொடங்கினுர்—அவர் கையெழுத்தே சித்திரந்தான்! அவ்வளவு முதிய கிழவர், வயது 70, குடுகுடு தாத்தா—பிலி பிடித்துப் படம் படமாகத் தீட்டித் தள்ளிவிட்டார்! சாதாரணமாகப் பார்த்தால் அந்தப் படங்கள் பெப்பெப்பே

என்றிருக்கும்; கண்ணுக்கு அழகா யிரா; வேதா ளங்கள் போலிருக்கும்; ஆனல், அவற்றில் அடங்கிய பாவனை நன்று யிருக்கும். தாகூர் தம் படங்களை பரோடா, பாரிஸ், மாஸ்கோ முதலிய நாடுகளிலெல் லாம் அரங்கேற்றிப் புகழ் பெற்றுவிட்டார். பல படங்கள் அச்சிலும் வந்துவிட்டன. ஆனல், தாகூர் கவிதையைப் படிக்கும் இன்பம், அவர் படங்களைப் பார்ப்பதில் எனக்கு உண்டாகவில்லை. தாகூர் ஸ்ரீ நிகே தன வேலையில் கருத்தூன்றுகிறார். அதற்கு வங்க கவர்னர் ஜாக்ஸன் ரூ. 5000 மொத்தமாகவும், வரு ஷம் ரூ. 1000-மும் அளிக்கிறார்—இவ்வளவுதானு என்று எல்லாரும் சூழ் கொட்டுகிறார்கள்! தாகூரின் ஸ்தாபனம் அபாரச் செலவில் நடந்தது. தம் ஆஸ்தி பாஸ்தி, வாக்குச் செல்வம்—எல்லாம் அதற்கே அவர் அர்ப்பணித்தார்; கட்டவில்லை; இந்தியாவில் பொருள் வசூலித்தார்; கட்டவில்லை; அடிக்கடி உலக யாத் திரை செய்து ஏராளமான பொருள் சேர்த்து வந்தார்.

---

## 44. பதினோராம் யாத்திரை

இதோ, மறுபடியும் பதினோராவது உலக யாத் திரைக்குக் கப்பல் ஏறிவிட்டார், (2-3-1930)! மகன், மருமகள், நம் தமிழர் அரியநாயகம் மூவரும் கவி யுடன் செல்கின்றனர். கப்பல் கடலை உழுது விரைந்து மார்சேல்ஸ் வந்துவிட்டது; அங்கே மெஸ்ஸியோ காஹன் கவியை வரவேற்று உபசரிக்கிறார். பாரிஸில் கவியின் 69-ஆம் பிறந்த நாள் அமோகமாகக் கொண் டாடப்படுகிறது. தாத்தா தாம் வரைந்த 125 படங்

களைக் காட்டிச் சபையினருக்கு விளக்குகிறார் ; பிறகு இலண்டன் ; பிறகு பர்மிங்காம் செல்கிறார் ; அங்கே இந்தியாவில் நடக்கும் அமளிகளையும் அநியாயங்களையும் அறிகிறார்: இந்தியாவில் உப்புச் சத்தியாக்கிரகம் ; காந்தி கைதியானார் ; சிட்டகாங்கில் போலீஸ் தடபுடல்; சோளாபூரில் இராணுவச் சட்டம்; காங்கிரஸே அராஜகச் சங்கம் என்றெல்லாம் மகாப் பிரபு வெல்லிங்டன் முழு மூச்சாக அடக்குமுறைகளைப் புயல்போல் அவிழ்த்துவிட்டார்! சுதந்தர வுணர்ச்சி மிகுந்த தாகூர் இதெல்லாம் பொறுப்பாரா? மாஞ்செஸ்டர் கார்டியன் நிருபர் மூலம், "அதிகார வர்க்கம் குற்றமற்ற இந்தியர்களை மனம்போனபடி கொடுமை செய்கிறதே; கேட்பாரில்லையா? இராணுவ பலத்தால் இந்த அடக்குமுறை செய்வது சட்டமா? முறையா?" என்று விளாசிவிட்டார். ஆக்ஸ்ஃபோர்டில் முன்பே செய்ய ஒப்புக்கொண்ட ஹிபெர்ட் பிரசங்கங்களை நடத்தினர் ; அவை "Religion of man" என்ற பெரிய நூலாக வெளிவந்தன. அதில் அவர் தமது சமயக் கொள்கைகளையும், அனுபவங்களையும் தெளிவாக்குகிறார். சாதி சமயம், நாடு நிறம் என்ற வேறுபாடுகள் ஒழிந்து, மனிதனை மனிதன் கொடுமை செய்யாமல், எல்லாரும் இறைவனைத் தலைக்கொண்டு ஒன்றி வாழும் வழியை விளக்குகிறார் ; உடனே, இலண்டனுக்கு வந்து இந்தியாமந்திரி வெட்ஜ்வுட் பென்னைக் கண்டு தாய்நாட்டில் நடக்கும் அடக்குமுறைகளைப் பற்றி முறையிட்டுரைக்கிறார் ; உடனே, குவேகர் சங்கக் கூட்டத்தில் பேசுகிறார். இந்தியாவில் அதிகார வர்க்கம் அடிக்கும் கொட்டத்தை வர்ணிக்கும்போது, கூட்டத்தில் ஆரவாரம் உண்டாகிறது : ஸ்ஸ்......

தாத்தா இதற்கெல்லாம் பயப்படுவாரா? "பிரிட்டிஷ் காரர்களே, எங்கள் இடத்தில் நீங்கள் இருப்பதாகப் பாவியுங்கள்; எப்படி யிருப்பீர்கள்? இரத்தக் கலப் புள்ள உங்கள் அமெரிக்கச் சகோதரர்கள் இரத்தம் சிந்திச் சுதந்தரம் பெற்றதை உணருங்கள்!" என் ருெரு விளாசு விளாசினுர்—கப்சிப்! பிறகு பேச் சில்லே. பிறகு, ஆக்ஸ்ஃபோர்டில் இறுதிப் பேச்சை முடித்தார். அதற்குத் தலைமை வகித்த அத்யக்ஷகர் ஸர் மைகேல் ஸாட்லர், "ஆக்ஸ்ஃபோர்டில் தாங்கள் அளித்த சொல் வரத்தையும், அதனுல் எங்களுக் கெய்திய ஆவேசத்தையும் ஒருநாளும் மறக்க மாட் டோம்" என்று முடிவுரை கூறினுர். தாகூர் பர்மிங் காமில் கிழக்கிலும் மேற்கிலும் நடக்கும் கல்விமுறை யைப் பற்றிப் பேசினுர்; மகாத்மா காந்தியைப் பற்றி யும், அவரது சத்தியாக்கிரகத்தைப் பற்றியும், ஸ்பெக் டேடருக்கு உருக்கமான கட்டுரை எழுதினுர்; பிறகு, ஜெர்மனி சென்ருர்; பெர்லினில் ரீச்ஸ்டாக் (Reich stag) அங்கத்தினரைச் சந்தித்துப் பேசினுர்; புகழ் பெற்ற பௌதிகப் புலவரான ஈன்ஸ்டினேக் (Einstein) கண்டு அளவளாவினுர்.

ஈன்ஸ்டினுடைய Doctrine of Relativity (தொடர்புக் கொள்கை)யைப் பற்றி நீண்டநேரம் வினவி யறிந்தார். ஈன்ஸ்டின் கணக்கில் புலி; அத் துடன் பிடில் நன்ருக வாசிப்பார்! கொஞ்சம் சங் கீதம் நடந்தது; இருவரும் பிரியா விடை கொண்ட னர். மோல்லர் காலெரியில் தாகூர் தம் படங்களேக் காட்டினுர். பிறகு டிரெஸ்டன், மூனிச் முதலிய பல நகர்களே அரசச் சிறப்புடன் சுற்றினுர்; சில நாடகங்கள் பார்த்து மகிழ்ந்தார்.

சலோ நார்வே! கோபன்ஹேகன் புலவர் தாகூர்ச் சித்திரக் கலையை வியக்கின்றனர். அங்கிருந்து ஒரே தாவு—ஜெனீவா! ஜெனீவா ஏரிக்கரையில் ஒரு வாரம் காற்று வாங்குகிறார். அங்கும் இந்தியா நினைப்புத்தான். டாக்காவில் நடக்கும் இந்து முஸ்லிம் கலகங்கள் தாத்தா காதிற்கு எட்டுகின்றன! பேனாவை எடுக்கிறார்: "ஹூம்! சொல்ல முடியாத அக்கிரமம் அந்த ஊரில் நடக்கிறதே; போலீஸ் என்ன செய்கிறது? ஆங்கிலப் பத்திரிகைகள் பேச்சு மூச்சு இல்லையே!" என்று ஸ்பெக்டேடருக்கு ஒரு கட்டுரை விட்டு, ருஷியாவுக்குப் பறக்கிறார்! ஸோவியத் அரசாங்கமே ஆளனுப்பி அவரை அழைத்துச் செல்கிறது! பால்டிக் ஸ்டேஷனில் அமோகமான வரவேற்பு நடக்கிறது; மாஸ்கோப் புலவர்கள் நமது கவியரசைக் கண்டு பூரிக்கின்றனர். மாஸ்கோ காட்சிசாலை, ஸோவியத் சங்கங்கள், கலாசாலைகள், அரங்கங்கள்—எல்லாம் கண்டு கவியரசர் உளங் களிக்கிறார். **Peter the Great**, தோல்ஸ்தாயின் **Resurrection**, **Biaderka** முதலிய நாடகங்களைப் பார்க்கிறார். மாணவர் கூட்டத்தில் சாந்திநிகேதனைப் பற்றிப் பேசுகிறார். தொழிலாளர் சங்கம், குழந்தைகளின் தோட்டப் பள்ளிக்கூடம், மின்சாரசாலை, விநோதசாலை, சரித்திரசாலை, புரட்சிக் காட்சிசாலை, வர்த்தகச் சங்கம் முதலியவற்றைப் பார்வை யிடுகிறார். புலவர் புகழ் மாலை பாடுகிறார்கள்; தாகூர் வாணியின் ருஷிய மொழிபெயர்ப்பைப் பாடுகிறார்கள். **Post office** நாடகம் நடக்கிறது.

தாகூர் தம் பிரயாண அனுபவங்களை அவ்வப்போது கடிதங்களாக எழுதியுள்ளார்; சீனக் கடிதம்,

ஐரோப்பாக் கடிதம் என அவை வெளி வந்துள்ளன. அவர் எழுதிய 'ரஷ்யார் சிட்டி' (ருஷியக் கடிதம்) மிகவும் புகழ் பெற்றது; பொருள் பொதிந்தது; அனுபவம் நிறைந்தது. தாகூர் ருஷியாவிலிருந்து பர்லின் வருகிறார்; அங்கிருந்து அமெரிக்காச் செல்கிறார். ஜனாதிபதி ஹூவர் நியூயார்க் பால்டிமோர் ஓட்டலில் தாகூருக்குப் பெரிய விருந்தளிக்கிறார். பஹாய் சங்கத்தில் தாகூர் பாரசிக தீர்க்கதரிசிகளைப் பற்றிப் பேசுகிறார். போஸ்டனில் தாகூர் படங்கள் காட்டப்படுகின்றன. இன்னும் சில நகர்களைச் சுற்றிக்கொண்டு மறுபடி இங்கிலாந்திற்கு வருகிறார் தாகூர்; பெர்னார்ட் ஷாவுடன் நீண்டநேரம் பேசுகிறார். இச்சமயம் வட்டமேஜை மகாநாடு நடக்கிறது; அதற்கு காந்தி வரவேண்டுமென்று எழுதுகிறார்; வரவில்லை! இந்தியாவின் சமூகச் சிக்கலுக்கு விதாயகம் கூறத் தாகூரை அழைக்கிறது சர்க்கார். கவியரசர் அழைப்பை ஏற்றுக் கொள்ளவில்லை; இந்தியாவுக்கு வந்துவிடுகிறார். என்ன சுறுசுறுப்பு! என்ன அலைச்சல்!

---

## 45. இரவீந்திர ஜயந்தி

**பா**ட்டையாவுக்கு எழுபது வயதாய் விட்டது! அவர் பெயர் வங்காளிகளுக்குத் தாரக நாமமானது; வங்காளம் என்றால் **இரவீந்திரர்** என்றானது. ஆதலால், 16-5-1931-ல், கல்கத்தாச் சர்வகலாசாலை மண்டபத்தில் வங்கப்பிரமுகர் ஹரிப்ரசாத சாஸ்திரி தலைமையில் கூடி இரவீந்திர ஜயந்தி கொண்டாடத் தீர்மானிக்கின்றனர். அதற்காக J. C. போஸ் தலைமையில்

ஒரு சபை ஏற்படுகிறது. சியாமப்ரசாத முகர்ஜியும், அமல்ஹோமும் காரியதரிசிகளாகின்றனர். தாகூரின் அரிய பெரிய நண்பரான இராமானந்த சட்டர்ஜி தாகூர் பெயரால் ஒரு பொன்மலர் வெளியிட முன் வருகிறார். ஒருவாரக் கொண்டாட்டத்திற்குத் திட்டம் வகுத்து வேலை நடக்கிறது. சம்ஸ்கிருதக் கல்லூரி தாகூருக்குக் "கவி ஸர்வபௌமன்" பட்டம் சூட்டுகிறது!

25-12-1931-ல், இரவீந்திர ஜயந்தி தொடங்குகிறது; அதற்காகப் பொருட் காட்சிகளும், கலைக் காட்சிகளும் தாராளமாக வருகின்றன; எட்டுத் திசையிலிருந்தும் புலவர் மணிகள் விருது கூறுகின்றனர்; ஆசித்தந்திகளும், கடிதங்களும் வந்து குவிகின்றன; கல்கத்தா முழுதும் திருநாட்கோலம் பூண்கிறது. கவியின் படங்கள், கையெழுத்துப் பிரதிகள், அச்சு நூல்கள், உலக மொழிகளில் வந்துள்ள தாகூர் நூல்கள், தாகூரின் பல சாயற்படங்கள், தாகூருக்கு வந்த பதக்கங்கள், பரிசுகள், பட்டயங்கள், விசுவபாரதியில் செய்யப்பெற்ற கலைச்சாமான்கள், தொழிற்சாமான்கள், வங்காளத்தில் உண்டான செய்பொருள்கள், அழகுக் கலைவிளக்கங்கள், வங்கச் சித்திரக்கலை விளக்கங்கள், சுதேசச் சாமான்கள், விநோத சாமான்கள்—எல்லாம் காட்சி சாலையை அணிஅணியாக அலங்கரித்தன. பாட்டு, நடனம், நாடகம், வீர விளையாட்டுகள்—எல்லாம் அமளிபட்டன. தாகூர் நாடகங்கள் அமோகமாக நடிக்கப்பட்டன; பாடல்கள் இனிமையாகப் பாடப்பெற்றன. அன்று முதல் ஒரு வாரம் பாட்டு, நடனம், நாடகம், கூட்டம் பிரசங்கம்—எல்லாம் செவிக்குத் தெவிட்டா விருந்

தளித்தன. சரச்சந்திர சட்டர்ஜி தலைமையில் இலக்கியக்கூட்டம் நடந்தது. தாகூர் வங்க இலக்கியத்திற்காகச்செய்த அரிய பெரிய பணிகளையும், அவரது வாக்கின் மாண்பையும்பற்றித் தகுந்த புலவர் பேசினர்; இசைத்திருவிழாவில் தாகூர் பாடல்களை இனிது பாடினர். ஸர். S. இராதாகிருஷ்னன் தலைமையில் புலவர் கூட்டம் நடந்தது; பல நாடுகளிலிருந்து புலவர் மணிகள் வந்து தாகூரின் பலதிறப் புலமைகளைப்பற்றி ஆராய்ச்சியுடன் பேசினர்.

27ஆ கல்கத்தா நகர மாளிகை முன்னே பெரிய அலங்காரக் கொட்டகை போட்டு, வங்க சமுதாயம் மகாகவியை விமரிசையாக வரவேற்றுப் புகழ்மாலை சூட்டியது. ஐரோப்பா, அமெரிக்கா, ஜப்பான், சீனு, பாரசீகம், சையாம் முதலிய நாடுகளெல்லாம் மகிழ்வுச் செய்தி யனுப்பி யிருந்தன. இந்திய மாகாணங்களிலிருந்தெல்லாம் அறிவாளர் ஜயந்தி விழாக் காணச் சென்றனர். நமது தமிழ்நா டீன்ற ஸயன்ஸ் மணியான ஸி. வி. இராமன் அத்திருவிழா நிர்வாகத்திற் கலந்துகொண்டார். இரவீந்திர ஜயந்திக்குழுவினரின் அறிக்கைப் பத்திரத்தில் வங்காளிகள் வங்காளத்தில் கையெழுத்திட்டனர். ஐந்து ஆங்கிலக் கையெழுத்துக்களும் உருதுக் கையெழுத்துக்களும் இருந்தன; அவற்றிற்கிடையே,

"ஸி. வி. ராமன்"

—என்று தமிழிலேயே இந்த மாதிரிக் கையெழுத்திட்டிருந்ததைப்பார்த்ததும் என் உள்ளம் மகிழ்ந்தது. உலகப் புகழ்பெற்று ஆங்கிலத்திலேயே பயின்று, வங்காளத்தில் நீண்ட காலம் இருந்தும் இந்த ஸயன்ஸ் வித்தகர் தமிழை மறக்கவில்லை. தாகூரும் இதையே

அழுத்திச் சொல்லுகிறார்—தாய்மொழி மறவேல் என்று. J. C. போஸ் நோயாயிருந்ததால் கூட்டத்திற்கு வரமுடியவில்லை; இருவரும் உயிர்த்தோழரானமையால் ஒரே வரியில் செய்தி யனுப்பினார்: "நண்ப, உனக்கு வெற்றி! ஸ்ரீ ஜகதீச சந்திரவஸு"

பந்தலும் காட்சியும் பெரிய பட்டாபிஷேகம் போலிருந்தன. இனிய குரல்கள் "ஜன கண மன" என்ற புகழ்பெற்ற கீதம் பாடின. வேதம் முழங்கியது. சாந்திநிகேதன் பண்டிதர் விதுசேகர் சாஸ்திரி மந்திர பூர்வமாகக் கவியரசருக்கு அர்க்யம், பாத்யம் ஆசமன்யம்—எல்லாம் வழங்கினார்; சங்கு தீர்த்தம், சந்தனம் வழங்கினர்; விளக்கெடுத்தனர், தூபம் காட்டினர்; சோடசோபசாரமும் செய்தனர். இரண்டு பெண்மணிகள் சாமரம் வீசினர். கவியரசர் புன்னகையுடன் அனைத்தையும் ஏற்றார். பி. ஸி. ரே மாலை சூட்டி வங்கஸாஹித்ய சங்கத்தின் புகழுரையைப் படித்தார். ஹிந்தி சாஹித்ய ஸம்மேளன், ப்ரபாசி வங்க ஸாஹித்ய ஸம்மேளன், கல்கத்தா நகரசபை, ஜயந்தி சபை—எல்லாம் அழகான பத்திரங்கள் அளித்தன. சரத் சந்திரபோஸ் எழுதி அழகாகப் பொன்னெழுத்திற் செதுக்கிய புகழுரையைக் கவிமணி காமினி ராய் படித்தாள். "ஜயந்தி உத்ஸர்கம்" என்ற தலைப்பிட்டு வங்கப் புலவர்கள் தாகூர் மலர் ஒன்றளித்தனர். ஸ்ரீ இராமானந்த சட்டர்ஜி Golden Book of Tagore அளித்தார்—மிகப் பெரிய மலர்: முப்பது தேசத்திலுள்ள 200 புலவர் மணிகள் தாகூரைப் புகழ்ந்தெழுதிய கட்டுரைகள் அதில் உள்ளன. முதல் கட்டுரை மஹாத்மா காந்தியினுடையது.

“ உலகெலாம் போற்றும் பெரியோய், கல்கத்தா மகா ஜனங்களின் மகிழ்வுரையை ஏற்றருளுக! பரம்பரையாகத் தங்கள் குலமும், தாங்களும் இந்த நகரிலேயே வசித்தீர்கள். தங்களால் வங்க சமுதாயமே உலகப் புகழ்பெற்றது; வங்கமொழியைத் தாங்கள் அற்புதச் செல்வமாக்கி உலகப்புலவர் அதைப் போற்றி மதிக்கச் செய்தீர்கள். தங்கள் வாக்கு வங்காளத்திற்கே புத்துயிர் கொடுத்தது. தாங்களே தேசத்தின் பூசாரி; தேசிய வாழ்வின் ஆசான்! அன்புகூர்ந்து எங்கள் நிவேதனத்தை ஏற்றருள வேண்டும்” என்று கல்கத்தா மகா ஜனங்கள் வெள்ளித்தகட்டில் அன்புரை எழுதி, தாமரை வடிவான தங்கமைக்கூடும், ஒரு அழகான தங்கப் பேனுவும் வைத்துத் தாகூரிடம் வணக்கமுடன் அளித்தனர். மூன்று தங்க ஏடுகளில் எனுமலால் புகழுரை எழுதி இரவீந்திர ஜயந்தி சபை அன்பளிப்புச் செய்தது—எல்லாம் வங்கமயம்!

கவியரசர் மகிழ்வுடன் எழுந்து வங்க உபசாரப் பத்திரங்களுக் கெல்லாம் வங்க மொழியிலேயே பதில் சொன்னர். ஹிந்திப் பத்திரத்துக்கு ஹிந்தியில் பதிற் சொன்னர். அதன் சுருக்கம் :

“ முற்காலம் கவிகளைப் போற்றுவது அரசர் கடமையா யிருந்தது. கவிகளை மதிப்பதால் அரசர் மாண்பு மிகுந்தது. ஏனெனில், மண்ணரசு நிலையில்லை; கவிகளின் புகழே காலத்தை வென்று நிலைக்கும் என்று அவர்கள் உணர்ந்தனர். இக்காலம் பாரத தேசத்தி லுள்ள மேதாவிகளுக்கு, இராஜ சபையில் இடமில்லை. அரசர் பாஷைக்கும் கவியின் பாஷைக்கும் பொருத்தமில்லை. இன்று நகர ஜனங்கள் நாட்டின் சார்பாக,

கவிக்கு மரியாதை செய்கிற இது வெளியலங்காரம் மட்டுமன்று; இதனுல் என் உள்ளம் பெருமகிழ்வடைந்தது. நான் பிறந்த இந்த நகரின் சபை நீடூழி வாழ்க! அதன் ஆதரவில் சித்திரம், சிற்பம், சங்கீதம், கலைகள்—எல்லாம் தழைத்தோங்குக! அது மடமை யிருளை நீக்கும் கல்வியைப் பரப்புக! அதன் பிரஜைகள் செல்வச் செழிப்பும், உடலுறுதியும், மனவுறுதியும், இன்பமும் எய்துக! சமூகச் சண்டை என்னும் நஞ்சின் வாடை யில்லாமல், எல்லா வகுப்பினரும் ஒற்றுமையாக வாழ்க—இதுவே என் வேண்டுகோள்!"

வங்க ஸாஹித்ய பரிஷத்து தந்த புகழுரையின் சுருக்கமாவது:

"கவியரசே, வங்கப் புலவர் சார்பாகத் தங்களை அன்புடனும், பெருமையுடனும் போற்றுகிறேம். சிறு வயதிலிருந்தே தேவரீர் வங்கமொழிக்கு இன்று வரையில் அரிய தொண்டு செய்து பெரிய பலன் விளைவித்திருக்கிறீர்கள். மகாவாணி தங்களுக்கு அமரத்தன்மை அளித்துவிட்டாள். ஹே மஹாகவியே, தேவரீர் நூறுண்டு வாழ்ந்து, கலையின் உச்சியிலிருந்து கிழக்கும் மேற்கும், அழகும் அமைதியும், இன்பமும் ஓங்கும் வரம் பெற்ற வாக்கமுதைப் பரப்புவீராக!"—கவியரசர் சொன்ன பதிலின் சுருக்கம்:

"இந்த வங்கச் சங்கம் இளமை முதல் எனது உள்ளன்பைப் பெற்றது. எல்லாரும் விரும்பும் பிரபுல்ல சந்திரர் நிருக்காத்தால், இந்தப் பத்திரத்தை மகிழ்வுடன் எற்கிறேன். இச்சங்கத் தலைவர் ஹரிப்ரசாதர் வங்கவாணி அருள் எனக்குப் பெருகும்படி ஆசிர்

வதித்தார். அதைவிட முதுமையில் எனக்கு இன்பம் வேறில்லை.''

ஜயந்தி சபை, ''உலகக் கவியே, உமக்கு வந்தனம்; நீர் அழகின் விளக்கம்'' என்று நீண்ட புகழுரை கூறியது.

தாகூர் உருக்கமாகச் சொன்ன பதிலின் சுருக்கம் :

''கடவுளருளால் இன்று 'கவி' என்று என்னை உலகம் அறிகிறது. இந்த ஜயந்தி அதை உறுதியாக்கி விட்டது. இந்த மகோத்ஸவத்தைக் கண்டு பூரித்துப் பணிகிறேன். என் சிறு வயதுமுதல் நான் எந்தாயின் முன்றிலில் கவிவீணை மீட்டிவருகிறேன்; அவள் அதைச் சட்டை செய்யாதபோதும் எனது கடமையைச் செய்து வந்திருக்கிறேன். என் இசை எப்படியோ அவள் உள்ளத்தைத் தொட்டுவிட்டது. எனக்கு எழுபது வயதாயிற்று; உலகிலிருந்து விடை பெற்றுக்கொள்ளும் இச்சமயமாவது வாக்தேவி எனது கவி விருந்தை அங்கீகரித்தாளே! தேசம் இன்று என்னை மதிப்பதே இன்பம்; என் வாழ்வு நிறைவுற்றது. சந்திரனின் வளர்-தேய் பிறைகள் போல உலகவாழ்வில் அன்பும் பகையும் வருவதியல்பு; எனது வாழ்வும் இதற்கு விலக்கன்று; எனது கவிதைக்கு ஏராளமான எதிர்ப்புகள் இருந்தன. கொடிய துக்கம் என்னைச் சூழ்ந்தது. இடர்கள் குறுக்கிட்டன. ஆனால், இவை எனது ஆத்ம ஞானத்தை, உறுதியைத் தடுக்கவில்லை. இவற்றால் என்னிடம் உள்ள உண்மை மிகுதியாக ஒளிர்ந்தது. எனது புகழுக்கு வந்த துயர்களாலேதான் இந்தத் திருநாள் சோபிக்கிறது. வாழ்வில் தெம்பிருந்தபோது, இந்த நன்மதிப்பு

வந்திருந்தால் அதைச் சமசித்தத்துடன் தாங்கியிருக்க மாட்டேன் போலும்! எனது ஜீவன் சாவின் ஓரத்தில் போய் நிற்கிறது. என் இறுதிநாளில் தாங்கள் செய்யும் மரியாதைகளை வணக்கமுடன் ஏற்று நாட்டிற்கு நன்றி செலுத்துகிறேன்."

---

## 46. இஃதென்ன அட்டூழியம்?

**ஜ**யந்தியை இன்னும் ஐந்து நாள் நடத்த அன்பர் முயன்றனர். நாட்டின் நிலைமையால் முடியவில்லை. இதற்குமுன்பே தாகூர் உள்ளம் புண்பட்டது—வங்க அரசியல் கைதிகள் பட்ட துன்பத்தால். ஹஜ்லியில் இரண்டு வீரக் கைதிகளைச் சுட்டுவிட்டனர்; இது கவியின் உள்ளத்தைச் சுட்டது. அவர் நீண்ட கட்டுரை எழுதி இந்த அட்டூழியத்தைக் கண்ணீர் பீறும்படி கண்டித்தார்; பொதுக்கூட்டத்தில் ஆவேசமாகப் பேசினர். இப்புண் ஆறுமுன் மகாத்மா காந்தியும், சுபாஷ் சந்திர வசுவும் கைதியான செய்தி வந்தது. "இந்தமாதிரி தேசத்தலைவர்களைக் கண்டபடி அடக்குமுறையால் ஒறுப்பது இரண்டு நாடுகளையும் பிரித்து அன்னியமாக்குகின்றது. இது மிகவும் அக்கிரமம்" என்று இந்தியா மந்திரிக்கே தந்தியடித்தார். மகாத்மாவுக்கு இச்சமயம் தாகூர் ஒரு புகழ்மாலை சூட்டினர்.

---

## 47. பாரசிகத்தில்

**தா**கூர் ஒரு டச்சு விமானத்தில் ஏறி வட்டம் சுற்றினர்; விமானத்தில் பிரயாணம் செய்ய விரும்

னர். பாரசீக ஷாவின் அழைப்பு வந்தது. டம்டம் விமான நிலையத்திலிருந்து பறந்து, பாரசீகம் சென்ருர். இஸ்பஹானில் ஷா சிறப்பாக வரவேற்று உபசரித்தார். அவர்மேல் தாகூர் ஒரு கவி பாடினுர்; ஹஃபிஸின் சமாதைப் பார்த்தார்; டெஹிரானில் இரண்டு வாரம் இராஜபோகத்திலிருந்தார். அவரது 72-ஆம் ஆண்டு விழாவை ஷாவே புகழ்பெற நடத்தினுர். ரோஜா மழைதான்! ஜயமாலைகளுடன் கவியரசர் கல்கத்தா வந்துசேர்ந்தார் (3-6-32).

## 48. மகாத்மா பட்டினி

இச்சமயமே அரசாங்கம் ஹரிஜனருக்குத் தனித் தொகுதியளிக்கத் தீர்மானித்தது. மகாத்மா அத் தீர்மானத்தை நீக்காதவரையில் பட்டினிகிடப்பதாகத் தீர்மானித்தார். மகாத்மா உபவாசத்தை மேற்கொண்டதும் நாடு நடுங்கிப்போனது. தாகூர் எராவாடாவுக்குத் தந்தியடித்தார் :—“ இந்தியாவின் ஒற்றுமைக்கும், சமுதாய நன்மைக்கும் அரிய உயிரைத் தியாகம் செய்வது பொருத்தமே. இந்தத் தியாகத்தை அரசாங்கம் உணராவிட்டாலும் இதனுல் ஜனங்களுக்கு நல்ல விழிப்பேற்படும். ஆனுல், இந்தத் தியாகம் பிசகாக முடிய நாம் விடக்கூடாது. அப்படி முடிந்தால், துக்கத்தில் ஆழ்ந்த எங்கள் மனமும் தங்கள் உத்தம விரதத்தை அன்புடனும், ஊக்கமுடனும் எற்கும். (தங்கள் உபவாசம் அபாயமாக முடிந்தால் நாங்கள் உயிர் தரியோம்).”

விரத பலன் கிடைத்தது; அரசாங்கம் இளகி இணங்கியது; தாகூர் எராவாடாச் சிறைக்கு ஓடி ஞர். மகாத்மா பாரணை செய்த நாளில் ஒரு கீதம் பாடினர்: "மனிதனைப் பிடித்த சனியன் சாதிமத வேற்றுமை. அது பேத புத்தியால் வருவது; இதனல், நமது நாடு அன்னியருக்கு அடிமைப்பட்டு வருந்து கிறது. எப்போது சுதந்தரம் கேட்டாலும் 'உங்கள் சாதிமதவேற்றுமையைச் சமாதானம் செய்து வாருங்கள்!' என்கின்றனர் அன்னியர். தீண்டாமை கொடிது; அதை அடியோடொழிக்க வேண்டும்" என்று தாகூர் விறிட்டார்.

காந்திக்கு வருண தருமம் பிடிக்கும். அதைத் தாகூர் பலமாக எதிர்ப்பார்; ஹரிஜனங்களைக் கோவிலுள் விடவேண்டு மென்று அவர் கொச்சி ராஜாவுக்கு ஓர் உருக்கமான கடிதம் எழுதினர். பெரிய வைதிகரான மதன்மோகன் மாளவியா சாந்திநிகேதனுக்கு வந்தார். அவர் அச்சமயம் ஹரி ஜனரைச் சுத்திசெய்யும் காரியத்தில் ஈடுபட்டிருந் தார். அதைத் தாகூர் மிகவும் மெச்சினர். மகாத் மாவின் ஹரிஜன ஸேவையை அவர் கொண்டாடி ஞர்; "மகாத்மாவும் தாழ்த்தப்பட்டவரும்" என்ற ஓர் உருக்கமான கட்டுரை எழுதினர்; அதை மகாத் மாவிடம் பேரன்பு பூண்ட புலவர் பி. ஸி. ரே. பிறந்த நாளில் அவருக்கு நிவேதித்தார். தாகூர் கல்கத்தாச் சர்வகலாசாலையில் "கமலாப் பிரசங்கம்" செய்தார்; வால்டேரில் ஆந்திரசர்வகலாசாலையில் "ஸர். கிருஷ்ண சாமி ஐயர் பிரசங்கங்கள்" செய்து அவற்றை "மனி தன்" என்ற நூலாக வெளியிட்டார்; இராம் மோஹன் நூற்றுண்டு விழாவிற்குத் தலைமை வகித்து

"அறிவுக் கலப்பு" என்பதைப் பற்றிப் பேசினர்; அனைத்திலும் சமுதாயச் சிக்கல்களை ஒழித்து, நாடு ஒற்றுமைப்பட்டாலே உலகின்முன் தலைநிமிரலாம் என்று வற்புறுத்தினர். தாகூர் பழைய மாமூல் குப்பைகளையும், மூடக் கொள்கைகளையும் ஒருகாலும் அனுமதிக்க மாட்டார்: 1934-ல் மகாத்மா தென்னிந்தியாவுக்கு ஹரிஜனப் பிரசாரத்திற்கு வந்தார். அச்சமயமே பீஹார் பூகம்பம் நடந்து பயங்கரமான சேதம் உண்டானதாகும். தீண்டாமையின் சாபத்தாலே தான் பூகம்பம் உண்டானது என்று மகாத்மா பேசினர். உடனே, தாகூர் இந்தக் குருட்டு நம்பிக்கையைக் கண்டித்தார். போர்பந்தரில் காந்தி உண்ணு விரதம் இருந்ததையும் அவர் சம்மதிக்கவில்லை; டார்ஜீலிங்கிலிருந்து "பட்டினி வேண்டா" என்று தந்தி கொடுத்தார். நமது நாட்டிற்கு அவர் ஒரு மெய்காவலாயிருந்தார்; நாட்டிற்குச் சிறுமை செய்யும் எதையும் கண்டித்தார்; பெருமை செய்யும் எதையும் போற்றினர்.

---

## 49. சுற்றுப் பிரயாணம்

வெள்ளைக்கார நாடுகளில் நமது நாட்டைப் பற்றி இழிவான பிரசாரம் நடந்தது; அதை அடக்க V. J. படேல் ஐரோப்பாச் சென்றார். தாகூர் இந்த முயற்சியைப் போற்றினர். ஐரோப்பியரின் வசையைக் கண்டித் தெழுதினர். இப்படி அவர் சமயங்களில் விட்டுக் கொடுக்காமல் அரசியலில் புகுந்து கொண்டார்; சமுதாய சீர்திருத்தத்தைத் தளராது

செய்தார். இவற்றோடு அவர் தமது உயிரான கலையை வியப்புற வளர்த்தார்; கலைஞரை ஆதரித்தார்; உதய சங்கரைத் தமது ஆசிரமத்திலேயே வரவேற்று நடனக்காட்சி பார்த்து மகிழ்ந்தார். நாடகக் கலையில் அவருக்கு வெகு உத்ஸாகம். அவர் அரிய நாடகங்கள் எழுதி மாணவருக்குப் பயிற்றி அரங்கேற்றினர்; மாணவருடன் பெரியஊர்களுக்கும் சென்று நாடகம் நடத்தி ஆசிரமத்திற்குப் பொருள் சேர்த்தார். லக்னோ சங்கீத விழாவிற்குத் தாகூர் செல்வதுண்டு. அதில் ஒரு தடவை "சாப மோசனம்" என்ற நடன - நாடகம் அரங்கேற்றினர்; பம்பாயில் ஒருவாரம் தம் மாணவருடன் நாடகம் நடத்தினர். சரோஜினி அம்மையும் அந்த வைபவத்தில் கலந்துதவினள்.

தாகூர் தரும சிந்தனை மிக்கவர்; பணம் சேர்த்துப் பூட்டுவதில்லை; உடனே மாணவருக்காகவும் பொது நலத்திற்காகவும் செலவிடுவார். அமெரிக்காவில் ஒருதரம் இரண்டு அழகான நடிகள் தாகூர் பாடல்களைப் பாடி நடித்துப் பணம் வசூலித்துக் கொடுத்தனர். அதை நியூயார்க்கில் உள்ள இந்திய மாணவர் உபயோகத்திற்கே தாகூர் தந்தார்; வெள்ளச் சேதங்கள் வந்தபோது நாடகம் நடத்திப் பணம் வசூலித்து ஜனோபகாரமாகத் தந்தார்; பீஹார் பூகம்பத்தின்போது இங்கிலாந்திலிருந்த ஆந்துரூஸுக்கும் மற்ற நண்பருக்கும் தந்தியடித்து, ஜனங்கள் படும் அவதியை விளக்கிப் பணம் திரட்டிக் கொடுத்தார். இவ்வளவு காரியங்களுக்கும் தாகூர் யாத்திரைகளையும் நிறுத்தவில்லை; பாரத நாட்டை வட்டமிட்டுக் கொண்டிருந்தார். அவர் சென்ற விடமெல்லாம் அரசருக்குரிய சிறப்புடன் வரவேற்கப்பட்டார்.

அவர் கேட்காமலே பணம் குவிந்தது. ஒருதரம் ஹைதராபாது நிஜாம் அவரை உபசரித்து முன் கொடுத்த லகாரத்துடன், இஸ்லாமியக் கலை வளர்ச்சிக்காக மேலும் 25000 தந்தார்.

*6-5-1934 :* தாகூர் சாந்திநிகேதன் கலைஞருடன் இலங்கைக்குப் புறப்பட்டுக் கொழும்பு வந்து சேர்ந்தார்; விசுவபாரதியைப் பற்றி ஒரு பெரிய பிரசங்கம் நடத்தினர்; அஃது ஒலிபரப்பப் பெற்றது. பிறகு ஐந்துநாள் '**சாப மோசன்**' என்ற நாடகத்தையும், மற்ற நாடகங்களையும் அழகாக நடத்திக் காட்டினர். தம் சித்திரங்களையும், தமது கலாபவனச் சைத்திரிகர் படங்களையும் காட்டினர்; ஏராளமான வரவேற்புகளும் புகழ்மாலைகளும் சுமந்து, ஒரு நாவலையும் முடித்துக்கொண்டு சென்னைவந்து, சாந்திநிகேதனம் சேர்ந்தார். அப்போது சென்னையில் பொப்பிலி ராஜா முதன் மந்திரியாயிருந்தார். அவர் தாகூரைச் சென்னைக்கு அழைத்தார் (24-10-34). நகரசபை உபசாரப் பத்திரம் அளித்தது. வங்க மறுமலர்ச்சியைப் பற்றித் தாகூர் பேசினர்; மாணவருக்குத் தாய்மொழியைப் போற்றும்படி உபதேசித்தார்; மாணவரைக் கொண்டு ஒரு நாடகம் அரங்கேற்றினர்; சாந்திநிகேதனத்தில் செய்த அரிய பொருள்களையும் சித்திரங்களையும் காட்டினர். கவர்னர் ஸ்டான்லியின் விருந்தை ஏற்று, மறுநாள் புறப்பட்டு விசாகபட்டினம் இராணியின் விருந்தாளியாக இருந்தார்; ஆந்திர மாணவருக்குப் பிரசங்கம் செய்து விடைபெற்றுக் கொண்டு கல்கத்தாவுக்கு வந்தார். இவ்வளவு அலைச்சலுக்குப் பிறகும் ஓய்வுண்டா? இல்லை, இல்லை! வங்க கவர்னர் ஸர் ஜான்

ஆண்டர்சன் பலமான போலீஸ் பாதுகாப்புடன் சாந்திநிகேதனுக்கு வந்தார். இந்தப் பாதுகாப்பு தாகூருக்குப் பிடிக்கவில்லை. மாணவரை யெல்லாம் ஸ்ரீநிகேதனுக்கு அனுப்பிவிட்டு வெறும் ஆசிரமத்தை கவர்னருக்குச் சுற்றிக் காட்டி அனுப்பினார். உடனே, காசி ஹிந்து சர்வ கலாசாலையின் அழைப்பு வந்தது; கலாசாலை, தாகூருக்கு டாக்டர் பட்டம் வழங்கியது. அல்லாஹபாது கலாசாலையில் பேசினார்; பஞ்சாப் மாணவர் கூட்டத்தில் தலைமை வகித்து மாணவர் கடமையைப் பற்றிப் பேசினார். லக்னோ மாணவருக்குப் பிரசங்கம் செய்தார். குருத் வாரத்தில் சீக்கியர் உபசாரத்தை ஏற்றுக்கொண்டு வந்தார். மகா போதி சங்கம் புத்த ஜயந்தி நடத்தி யது; அதில் பேசினார். இச்சமயம் புகழ்பெற்ற ஜப்பானியக் கவி நோகுசி இந்தியாவுக்கு வந்து மகாத்மாவைப் பார்த்துவிட்டுத் தாகூரிடம் வந்தார். தாகூர் அவரை நல்வரவேற்று உபசரித்தார். இதே கவிக்குத் தாகூர் சீனத்தில் ஜப்பான் செய்யும் கொடு மைகளைப் பற்றிக் காரமாக எழுதினார்.

1935-ஆம் ஆண்டு காங்கிரஸ் பொன்விழா நடந் தது. தாகூர் வாழ்த்துச் செய்தி யனுப்பி, இந்திய சுதந்தரத்தில் தமக்கிருக்கும் ஆர்வத்தைத் தெரிவித் தார்.

---

## 50. மகாத்மாவின் உதவி

**வி**சுவ பாரதிக்கும், ஸ்ரீநிகேதனுக்கும் ஏராள மான பணம் வேண்டியிருந்தது. தாகூர் மறுமுறை வட இந்தியாவில் சுற்றினார்; நாடகங்களால் பணம்

வசூலித்தார்; டில்லிக்கு வந்தார். "இந்த வயதில் இப்படிச் சுற்றலாமா?" என்று மகாத்மா காந்தி இரங்கி, "உங்களுக்கு எவ்வளவு வேண்டும்?" என்றார். "60,000". சரி; ஒரு செல்வச் சீடரிடம் ரூ. 60,000 அதே நிமிஷம் வசூலித்துத் தந்தார். பணங்கொடுத்தவர் தமது பெயரைக்கூட வெளியிற் சொல்லவில்லை. ஓசைப்படாமல் காரியம் நடந்தது. இந்த நன்றியைத் தாகூர் பெரிதும் பாராட்டினர். டில்லி நகரசபையும், பொது ஜனங்களும் தந்த வரவேற்புக்களை ஏற்றுக்கொண்டு சாந்திநிகேதனம் வந்தார்.

---

## 51. பல அலுவல்கள்

இச்சமயம் புரூஸெல்ஸில் உலக சமாதான மகாநாடு நடந்தது. அதற்குத் தாகூர், "வலியர் பேராசையை விடுக; எளியர் தைரியங் கொள்க!— இஃதின்றி உலக சமாதானம் வராது". என்று செய்தியனுப்பினர். சரத் சந்திர போஸின் அறுபதாண்டு விழா நடந்தது; தாகூர் ஆசி கூறினர். வங்க ஸ்த்ரீ சேவா சம்மேளனம் நடந்தது. "பெண்கள் நாட்டிற் பாதி; பெண்கள் முன்னேற்றத்தாலேதான் தேசம் முன்னேறும்; அறிவும், ஆற்றலும், சுதந்தர உணர்வுங் கொண்ட பெண்கள் சமுதாய சேவை செய்க!" என்று பேசினர். கல்கத்தாச் சர்வகலாசாலைப் பட்டமளிப்பு விழா வந்தது—17-2-37. இதுகாறும் பட்டம் பெற்ற பெரிய பெரிய ஆட்களைத்தான் அதற்குத் தலைவராக்குவது வழக்கம். அபூர்வமாக இந்தத் தடவை தாகூரைத்

தலைமைவகிக்கச் சொன்னார்கள் அதிகாரிகள். வழக்க மாக ஆங்கிலத்திலேதான் தலைவர் பிரசங்கம் நடக்கும். தாகூர் தலைமை வகித்து இனிய வங்காளத்தில் பேசினார். "ஆங்கிலப் படிப்பால் தாய்மொழியை மறக்கக் கூடாது. கல்வி, தாய்மொழி மூலமே நடக்கவேண்டும். அவரவர் இரைப்பை மூலமே உணவைச் செரிப்பிப்பது போல, அவரவர் சொந்த பாஷை மூலமே அறிவைச் செரிப்பிக்க வேண்டும்" என்று பேசினார். சர்வகலாசாலைச் சரித்திரத்திலேயே அந்தப் பேச்சு ஒரு தனிச் சிறப்பாயிருந்தது. இராமகிருஷ்ண பரமஹம்ஸர் உலகிற்கு விவேகானந்தரைத் தந்து ஞான வொளி பரப்பினர். அவரது நூற்றாண்டு விழா நடந்தது. அதற்கு ஸ்ரீ அரவிந்தரைத் தலைமைவகிக்கும்படி பேலூர் துறவிகள் வேண்டினர். ஸ்ரீ அரவிந்தர் மறுத்தார். தாகூரை வேண்டினர். கவியரசர் தலைமையில் சர்வமத சங்கம் சிறப்பாக நடந்தது; (3-3-37).

எத்தனை காரியம்! எவ்வளவு அலைச்சல்! வயது 78; குடு குடு தாத்தா! உடம்பு தளர்ந்தது; படுத்தது; நோய் முதிர்ந்தது. ஸர் நீலரத்ன சர்கார் வைத்தியர்களுடன் சென்று கவிப் பழத்தைக் கல்கத்தாவுக்குக் கொண்டு வந்து சிகிச்சை செய்தார். கொஞ்சம் குணமாயிற்று. அச்சமயமே அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கல்கத்தாவில் கூடியது; சுபாஷுக்கும் காந்திக்கும் வாதம் நடந்தது; 'வல சாரி—இட சாரி' என்று இரண்டு பிரிவுகள் எழுந்தன; சுபாஷின் பார்வேடு பிளாக் (Forward Block) கிளர்ந்து அமளி செய்தது. மாகாத்மாவை வங்காளிகள் கிண்டல் செய்தனர். இதைத் தாகூர் பலமாக எதிர்த்து அறிக்கைவிட்டார்; மகாத்மாவின் எழுபதாம் ஆண்டு விழாவைச் சாந்தி

நிகேதனில் விமரிசையாகக் கொண்டாடினர். சுபாஷ் காங்கிரஸ் அக்கிராஸனரானர்; தாகூர் அவரை ஆசிரமத்தில் வரவேற்று உபசரித்தார். தாகூருக்குத் தாய் மொழி போலவே ராஷ்ட்ர பாஷையிலும் விருப்ப முண்டு. சீனத்திற்குச் சீனபவனம், இஸ்லாமியத் திற்கு இஸ்லாம் பவனம் போல, ஹிந்திபாஷாபிவிருத் திக்கு ஹிந்திபவனம் அமைத்து, ஜவஹர்லாலைக் கொண்டு திறப்புவிழா நடத்தினர். ஜவஹர் சீனத் திற்குப் போகும்போதும் தாகூரைக்கண்டு பேசிச் சென்ருர்.

மகாத்மா வருகிருர். இரண்டு தாத்தாக்களும் சந்திக்கும் ஆனந்தமே ஆனந்தம்! அதைப் படம் பிடித்தவர்களுக்கு நன்றி. இருவரும் தலைவணங் கிக் கைகுவித்து நமஸ்காரம் செய்துகொண்டு இதயக்கலப்புடன் அன்புப் புன்னகை ததும்ப நட்புறவாடும் இன்பத்தை நினைத்தாலே உள்ளம் சிலிர்க்கிறது. மகாத்மா கஸ்தூரிபாயுடன் இரண்டு நாள் சாந்திநிகேதனில் தங்கினர். மகாத்மா- தம்பதிகளைத் தாகூர் உயர்ந்த இடத்தில் அமர்த்தி மரியாதை செய்து, உபசார மொழிகள் கூறி னர்; மகாத்மாவிடம் ஒரு கடிதம் கொடுத்துப் பிறகு திறந்து பார்க்கச்சொன்னர்; அதில் விசுவ பாரதிக்கு நிதி வேண்டுமென்று குறித்திருந்தார். மஹாத்மா நிதி வசூலுக்கு ஏற்பாடு செய்தார். அவ் வளவு பெரிய நிலயம் நீடித்து நடக்கவேண்டுமே என்ற கவலை தாகூருக்கு நிரம்ப இருந்தது. அதனல் அவர் சென்ற விடமெல்லாம்அதற்காகப் பணம் திரட் டினர். 12-2-1940; அவருக்குப் பெருந்துக்கம் நேர்ந் தது:—உயிர் நண்பர் ஸி. எஃப். ஆந்துரூஸ் கல்கத்தா

நர்ஸிங்ஹோமில் இறந்தார். அவர் நினைவுக்காக சாந்திநிகேதனில் பெரிய கட்டிடம் எழுப்பத் தாகூர் பணம் வேண்டினர் ; மகாத்மாவும் அறிக்கை விடுத்தார். பொது ஜனங்கள் ஏராளமாக நன்கொடையளித்து வேண்டிய தொகைக்குமே வசூலித்துக் கொடுத்தனர்.

---

## 52. இறுதி நாட்கள்

இறுதி நாட்களில் பட்டம் பதவிகள் தாகூரைத் தேடி வந்தன. டாகா கலாசாலையும், இஸ்லாமிய சர்வ கலாசாலையும் அவருக்கு டாக்டர் பட்டம் அளித்தன. ஆந்திரர் 'கவி ஸம்ராட்' என்ற பட்டம் சூட்டினர். திப்பேரா மன்னர் பாரத பாஸ்கரன் என்ற பட்டம் சூட்டினர் இப்பட்டங்களுக்கெல்லாம் சிகரம் போன்றது ஆக்ஸ்ஃபோர்டு சர்வ கலாசாலை சாந்திநிகேதனுக்கே வந்து அளித்த இலக்கியப் புலமைப் பட்டம் (Doctorate of literature honoris causa). இந்தியா நீதிபதி சர் மோரிஸ் க்வயர், ஸர் எஸ். இராதாகிருஷ்ணன், ஜஸ்டிஸ் ஹெண்டெர்ஸன் ஆகிய மூவரும் ஆக்ஸ்போர்டு பிரதிநிதிகளாகப் பட்டமளிப்பு வைபவத்தை நடத்தினர்; அலங்காரச்சபை கூட்டி வேத கோஷத்துடன் தொடங்கினர். ஆக்ஸ்ஃபோர்டு வழக்கப்படி முதலில் இலத்தீனில் பட்டப் பிரசங்கம் படித்தனர் ; இராதாகிருஷ்ணன் அதை ஆங்கிலத்தில் படித்தார். பட்டம் சூட்டியதும் தாகூர் சம்ஸ்கிருதத்தில் பதில் சொன்னார். (மேனாட்டுக்கு இலத்தீன்போல் இந்தியாவுக்கு சம்ஸ்கிருதம் அல்லவா ?). இந்தியக் கவியாகிய தம்மைக் கௌரவித்தது, கிழக்கும் மேற்கும் நட்

புரிமை ஓங்கிவாழும் அறிகுறியாகும் என்று தாகூர் பட்டமேற்ருர். "தங்களைக் கௌரவித்த ஆக்ஸ்ஃபோர்டு தன்னையே கௌரவித்தது" என்ருர் மோரிஸ் க்வயர்.

இதன் பிறகு தாகூர் படுத்த படுக்கையுடனிருந்தார். வைத்தியர்கள் கைகட்டிக்காத்துச் சிகிச்சை செய்தனர். இச்சமயத்திலும் அவர் பேஞ ஓடிக்கொண்டுதான் இருந்தது. இச்சமயத்திலும் அவர் உலக நிகழ்ச்சிகளைப் படிக்கக்கேட்டு அபிப்பிராயங்களை வெளியிட்டுக் கொண்டேயிருந்தார்; ஜெர்மனி ருஷ்யாவைப் படையெடுத்த அக்கிரமத்தைப் பலமாகக் கண்டித்தார். இறுதிநாட்களில் அவர் எழுதிய நூல்கள் இருக்கட்டும்; அவர் தீட்டிய இரண்டு கட்டுரைகள் மனித சமுதாயத்தின் நினைப்பில் என்றுமிருக்கும்! ஒன்று, தாகூரின் 81-ஆம் ஆண்டு விழா நாடெங்கும் கொண்டாடப் பெற்றபோது, அவர் உலகிற்கே விடுத்த கிரைஸிஸ் ஆஃப் ஸிவிலிஸேஷன் (Crisis of Civilisation) என்ற மணிவாசகம். மற்ருென்று பார்லிமெண்டில் எலினர் ராத்போன் அம்மையார் இந்தியாவைப் பற்றிக் கண்டபடி பிதற்றியபோது, தாகூர் தந்த சொற்சவுக்கு! இரண்டின் கருத்தையும் அறிவாம்:

---

## 53. நாகரிகம் கெட்ட கேடு!

"இன்று எனக்கு எண்பது வயதாகிறது. எனது நீண்ட வாழ்வையும் அனுபவத்தையும், உலகப்போக்கையும் கவனிக்கும்போது மனம் திகைக்கிறது. நாம் ஆங்கிலேயர் மூலம் விரிந்த உலகுடன் உறவு கொண்

டோம். அக்காலம் நாம் ஆங்கில இலக்கியத்தையே கண்டு மயங்கினேம். பர்க்கின் பேச்சும், மெகாலே யின் எழுத்தும்,ஷேக்ஸ்பியர் நாடகமும், பைரன் கவி யும், பத்தொன்பதாம் நூற்ருண்டின் ஆங்கில அரசி யல் விவகாரமும் படித்து மயங்கினேம். தமது சுதந் தரத்திற்காக அவ்வளவு போராடிய ஆங்கிலே யரின் நேர்மையில் நமக்கு நம்பிக்கை யிருந்தது. நாமும் விடுதலைக் கிளர்ச்சி செய்தோம்; என்ருலும் ஆங்கிலேயரிடம் நமக்கொரு அபிமானம் இருந்தது. நம்மை அடக்கியாளும் அவர்களே ஒரு நாள் நமக்கு விடுதலை தருவார்கள் என்று நம்பி யிருந்தோம். மற்ற நாடுகளில் சுதந்தரத்திற்காகப் போர்புரிந்து புகல டைந்த வீரரை ஆங்கிலம் வரவேற்றுக் காப்பாற்றிய தைக் கண்டோம். ஆங்கிலேயரின் நேரிய ஒழுக்கத் தைக் கண்ட நான், அவர்களை மிகவும் உயர்ந்த நிலை யில் வைத்துப் போற்றினேன். அக்காலம் சுயேச் சாதிகாரச் செருக்கு ஆங்கில அரசியலை மாசுறுத்த வில்லை. அச்சமயம் நான் ஒரு பையன்; சீமையில் படித் தேன்; ஜான் பிரைட் பார்லிமெண்டிலும், பொது மேடையிலும் பேசுவதைக் கேட்டேன்; அப்பேச் சின் சுதந்தர வுணர்ச்சி இன்னும் என் உள்ளத்தில் உள்ளது. ஆங்கில இலக்கியம் இன்னும் நமது உள் ளத்தை அள்ளுகிறது. 'அன்னியராயினும் அவர்களும் மனிதர்; மனிதருக்குரிய உரிமையை நமக்கு மறுக்க மாட்டார்கள்; அறிவுள்ள நாகரிக மனிதர்' என்று நான் நம்பினேன். என் வாழ்வின் முதல் அத்தியாயம் இப்படிச் சென்றது.

பிறகு, எனது நம்பிக்கை தளர்ந்தது. பெரிய நாகரிகம் படைத்த நாட்டாரிடம் உள்ள சுயநலத்

தைக் கண்ணாரக் கண்டேன். வெறும் இலக்கிய மோகத்தினின்று நான் விடுபட்டேன். என் விழி திறந்தது; கனவொழிந்தது. நம் நாட்டு ஏழைகளின் பரிதாபம் எனது நெஞ்சைப் பிளந்தது. வேறெந்த நாட்டிலும் வாழ்விற்குத் திண்டாடும் இந்த வறுமை கிடையாது. இருப்பினும் இந்த நமது நாடுதான் ஆங்கிலேயரின் செல்வச் செழிப்பை ஊட்டியது. நம்மை அவர்கள் வெகு அலட்சியம் செய்கிறார்கள். ஆங்கிலேயர் இயந்திரத் திறமையால் இந்த நாட்டை அடக்கியாளுகிறார்கள்; அதை இந்தத் திக்கற்ற நாட்டிற்குத் தெரியாமல் மூடிவைத்திருக்கிறார்கள். நமது கண்முன் ஜப்பான் செழித்து வளர்வதைக் காண்கிறோம்; அது, தற்கால அறிவைப்பயன் படுத்தி முன்னேறும் அற்புதத்தை நான் கண்டேன். நான் மாஸ்கோவில், ஸோவியத் ருஷ்யாவின் சுறுசுறுப்பான முன்னேற்றத்தைக் கண்டேன். கல்வியும் தொழிலும் உரிமை யுணர்ச்சியும் அங்கே அபாரமாக வளர்ந்து, மடமையிருள் வறுமைத் துயர் கீழ்மை யுணர்ச்சி ஆகிய இவை அடியோ டொழிந்தன. அதன் நாகரிகத்தில் சாதி, வகுப்பு வேறுபாடே கிடையாது. முன்னேறிச் செழிக்கும் நாடுகளையெல்லாம் நான் கண்ணாரக் கண்டேன். நமது நாடு வரவரப் பொலிவிழந்து வாடி அலங்கோலமாவதைக் கண்டு பரிதவிக்கிறேன். மற்ற நாடுகள் ஐக்கியத்தால் சிறக்கின்றன; நமது நாடு அன்னியக் கொள்ளையால் வருந்துகிறது. முன்னேறும் நாடுகள்முன், இந்தியா பிரிட்டிஷ் ஆட்சிச் சுமையால் அழுந்தி நொந்து இன்னது செய்வதென்று தெரியாமல் திகைக்கிறது. சீனத்தின் வாழ்வையும் அபினி மயக்கம் ஊட்டிக் கெடுத்

தார்கள். ஜப்பானும் மண்வெறி கொண்டு சீனத்தை விழுங்குகிறது. ஸ்பெயின் குடியரசுக்கு நேர்ந்த துன்பத்தையும் நான் கண்டேன். நமது நாட்டின் பரிதாபம், பரிதாபம்! அன்னிய ஆட்சியின் துரதிட்டம் நம்மைப் பிடித்தாட்டுகிறது. மனிதவாழ்விற்கு அவசியமான சோறும் உடையும், கல்வியும், வைத்திய வுதவியும் கூட நமக்குச் சரியாகக் கிடைக்கவில்லை; அத்துடன் நம்மிடையே கிளர்ந்த வகுப்பு வேறுபாடுகளும் கலகங்களும் கண்டு மனம் தாளவில்லை. பிரித்தாளும் சூழ்ச்சியே நம்மைப் பிரிக்கிறது. மேலிருந்து யாரோ வகுப்புக் கலகங்களைத் தூண்டி, நம்மை, என்றும் அடிமைப்படுத்தி வைத்திருக்கிறார்கள். ஜப்பானைவிட நமது நாடு தாழ்ந்ததில்லை. அது சுதந்தரமாயிருக்கிறது; இஃது ஆங்கிலேயருக்கு அடிமையாயிருக்கிறது—இதுவே வித்தியாசம். ஐரோப்பிய நாகரிகத்தின் உயிர்நாடி உரிமை, மனிதருக்கு மனிதர் சமவுறவு; நமக்கு அஃது இரண்டையும் மறுக்கிறது. தடி கொண்டு சட்டம் செலுத்தும் போலீஸ் ஆட்சியே நமது தலைவிதியானது. மனித சமுதாயத்தில் அமைதியும், ஐக்கியமும் உண்டு பண்ணுவதே நாகரிகம். இங்கோ பிரிவினைச் சண்டைகள், காலிகளின் கொட்டம்—இவை சட்டத்தை மீறிக் கிளம்புகின்றன. காட்டுமிராண்டித்தனமான வகுப்புக் கலகங்கள் அதிகரிக்கின்றன. பார்க்கவே வெட்கமா யிருக்கிறது. காட்டுமிராண்டித்தனம் போர்ப் புயலாகக் கிளம்பி அங்கே மனிதரைக் கொன்று குவிக்கிறது! இதுவா நாகரிகம்! ஒரு நாள் ஆங்கிலேயர் இந்தியாவை விட்டுச் செல்லவே நேரிடும்; அப்போது துன்பக்காடான இந்தியாவே

அவர்கள் பின்னாலிருக்கும். ஒரு நூற்றாண்டு ஓடிய ஆங்கில ஆட்சி வற்றிப்போன பிறகு, வெறும் மண்ணும், சகதியுந்தான் மிஞ்சும்! ஒரு காலம் நான் ஐரோப்பிய உள்ளத்தில் நாகரிக ஊற்று எழும் என்றிருந்தேன். நான் உலகைவிட்டுச் செல்லப்போகும் இப்போது, அந்த நம்பிக்கை போயே போய்விட்டது. என்னைச் சுற்றிலும் அந்த நாகரிகத்தின் குட்டிச் சுவர்களையே காண்கிறேன். ஆனால், நான் மனிதனிடம் நம்பிக்கை யிழக்கமாட்டேன். இந்தப் பிரளயம் ஒழிந்த பிறகு, மனிதவாழ்வு புதுமை பெறும், சேவையும் தியாகமும் உலகைப் பாவனமாக்கும் என்றே நம்புகிறேன். அந்த அருணோதயம் கிழக்கிலிருந்தே வரும். மனிதன் மண்வெறிகளையும், உலகைக் கட்டி பலாத்காரமாக ஆளும் பேராசையையும் விட்டு, மனிதத் தன்மையுடன் நடக்கும் நாள் வரும் என்றே எதிர்பார்க்கிறேன். இன்று நாம் காணும் அபாயங்களூடும், வல்லரசுகளின் அகம்பாவக் கொடுமைகளூடும் ஒரு ரிஷிவாக்கின் உண்மை எனக்கு நம்பிக்கையை ஊட்டுகிறது: "அதர்மத்தால் மனிதன் இலாபம் அடையலாம்; பகைவரை வென்று தழைக்கலாம்; ஆனால், முடிவில் அதர்மன் வேரோடழிகிறான்."

---

## 54. இலட்சணத்தை நீயே பார்!

பிரிட்டிஷ் பார்லிமெண்டில் அங்கம் வகிக்கும் ராத்போன் அம்மை "ஆங்கிலக் கல்வியாலே முன்னுக்கு வந்த இந்தியர், ஆங்கில ஆட்சியைத் தூஷிப்பது நன்றிகெட்ட தனம்......" என்றெல்லாம் கார

மாகத் திட்டிவிட்டாள். முக்கியமாக ஜவஹரை அவள் தாக்கினுள். தாகூர் சரியான பதில் கொடுத் தார். அதன் சாரமாவது : "இந்தியர்களுக்குத் திரு மதி ராத்போன் எழுதிய பகிரங்கக் கடிதம் கண்டு மிக வும் வருந்தினேன். அவள் முக்கியமாக ஜவஹரைக் குறித்தே பேசுகிருள். ஜெயிலில் இல்லாவிட்டால் ஜவஹர் அதற்குச் சரியான பதில் கொடுத்து வாயை அடக்கியிருப்பார். அவர் சிறைக்கட்டில் மௌனமாயிருக்க நேரிட்டது ; ஆதலால் நான் நோய்ப் படுக்கையிலிருந்து இந்த அம்மையாரின் வேண்டா உபதேசங்களுக்குப் பதில் சொல்ல அவ சியம் எற்பட்டது. இந்த அம்மையாரின் அதிகப் பிரசங்கம் நமது மனச்சாட்சியைக் குத்தி விடுகிறது. ஆங்கில எண்ணங்களையே அள்ளிப் பருகி முன் னேறினேமாம் ; நன்றி கெட்டோமாம் ; பிதற்று கிருள் ! தூற்றுகிருள் ! ஆங்கிலக்கருத்து மேனுட் டறிவின் சிறந்த விளக்கமாயிருக்கிறது. ஆனல், அதைக் கற்ற நம்மவரும் தமது முயற்சியாலே தான் கற்றறிந்தனர். பிரிட்டிஷார் நமக்கு நல்ல கல்வி தரவில்லை ; நாம் வேறு ஐரோப்பிய மொழியா லும் அந்த அறிவைப் பெற்றிருக்கலாம். உலகிலுள்ள நாடுகளெல்லாம் பிரிட்டிஷாராலேதான் அறிவு பெற் றனவா ? அவர்கள் போதிக்காவிட்டால் நாம் இரு ளில் ஆழ்ந்திருப்போம் என்று பிரிட்டிஷ் நண்பர் சிலர் சொல்வது வெறும் ஜம்பமாகும். பிரிட்டிஷ் அதிகாரவர்க்கம் இந்தியருக்குத் தரும் கல்வி வெறும் சக்கை, குப்பை ! அது நமது நாட்டுக்குரிய கலை யையும் இழக்கச் செய்தது. அப்படிப் பிரமாத மாகக் கல்வி தந்ததாகவே வைத்துக்கொள்வோம்.

அதன் வெட்கக் கேட்டைச் சென்ற ஜனத்தொகையில் பார்த்து விட்டோமே—இருநூறுண்டு பிரிட்டிஷ் அரசாட்சிக்குப் பிறகு நூற்றில் ஒருவருக்கு இங்கிலீஷ் வாசனை யிருக்கிறது! சோவியத் ருஷ்யாவில் பதினைந்தே ஆண்டில், நூற்றுக்கு 98 பேர் நல்ல கல்வி பெற்றிருக்கிறார்கள். இருநூறுண்டாக எங்கள் நாட்டைக் கொள்ளை யடித்துப் பணப்பையை இறுகக் கட்டிக் குவித்த பிரிட்டிஷார், ஏழை மக்களின் வறுமையைத் தீர்க்க என்ன செய்திருக்கிறார்கள்? என்னைச் சுற்றிலும் சோற்றுக்கு அலறும் பஞ்சை மக்களையே காண்கிறேன். குடிதண்ணீருக்காகக் கிராமப் பெண்கள் மணலைத் தோண்டுவதைக் கண்டிருக்கிறேன். கிராமங்களில் கிணறு வசதியில்லை. இந்த வறிய மக்களுக்கு ஒரு வண்டியுணவுகூடக் கொண்டுவரக் காணோம்; எங்கள் நாட்டிலிருந்துமட்டும் கப்பல் கப்பலாக உணவுப் பொருள்களை பிரிட்டிஷார் ஏற்றிச் செல்கிறார்கள். சட்டம், ஒழுங்கு என்று பேசுகிறார்கள். அந்த வண்டவாளமும் சுற்றிப் பார்த்தால் தெரியும்—நாடெங்கும் கலகக்காடு! நூற்றுக்கணக்கான இந்தியர் உயிரிழக்கிறார்கள்; பெண்கள் மானமிழக்கிறார்கள்; பொருள்கள் கொள்ளை போகின்றன; பிரிட்டிஷ் ஆயுதங்கள் தூங்குகின்றன! வீட்டை ஆள எங்களுக்குத் திறமையில்லை என்றுமட்டும் கடல் கடந்து பிரிட்டிஷ் சத்தம் வருகிறது! மேற்கே பிரிட்டன், பிரான்ஸ், கிரீஸ் போன்ற தேசங்களை வலுத்த குண்டுகள்முன் விலகி ஓடவேண்டியிருக்கின்றன. இங்கே ஆயுதமற்ற ஏழைகள் குண்டர்களால் படும் இடர்களைத் தடுக்காமல் ஏளனமாகச் சிரிக்கின்ற

னர்! இன்று இங்கிலாந்தில் ஒவ்வொருவனும் தற் காப்பிற்காக ஆயுதம் வைத்திருக்கிறான்; ஆனால், இந்தியாவிலே தடி சுழற்றக்கூடத் தடை! எங்கள் ஜனங்களை சாசுவதமான அடிமைகளாக்கவே ஆயு தந் தொடாமல் செய்திருக்கிறார்கள். உலகை ஆளப் புறப்பட்ட நாஜிகளை பிரிட்டிஷார் வெறுக்கிறார்கள். எமது கையில் விலங்குமாட்டிய கைகளை நாங்கள் முத்தங் கொஞ்சுவோம் என்று இந்த ர்ராத்போன் எதிர்பார்க்கிறாளா என்ன? அரசியல் வாதியின் பேச்சாலன்று; பிரஜைகளுக்குச் செய்துள்ள நன் மையினின்றே நாம் ஒரு தேசத்தை மதிக்க முடி யும். அன்னியர் என்பதற்காக நாங்கள் பிரிட்டி ஷாரை வெறுக்கவில்லை; எங்கள் நலத் தைப் பாதுகாப்பதாக வேஷம் போட்டு, ஆங்கில முதலாளிகளின் பைகளைத் திணறத்திணற நிரப்பக் கோடானுகோடி மக்களின் சுகத்தைக் கெடுக்கும் படுமோசத்தையே நாங்கள் வெறுக்கிறோம். இதெல் லாம் பொறுத்து நாங்கள் சாதுவாயிருப்பதற்கு நன்றி செலுத்தாமல், இப்படிக் கேவலயாகப் பேசி எங்கள் புண்ணில் எரிகோல் நுழைப்பதே சொல்ல முடியாத அநாகரிகமாகும்."

எப்படி பதில்?

---

## 55. சாவின் அழைப்பு

உடல் எவ்வளவுதான் தாங்கும்? அதன் காரி யம் ஆயிற்று; தாகூரின் நோய் முதிர்ந்தது. இராஜ கம்பீரமான உடல் வற்றி உலர்ந்து தளர்ந்துபோனது; உலகெல்லாம் சுற்றிய திருமேனி, படுக்கையோடு

படுக்கையானது. உறக்கம் போயிற்று; சாப்பாடு இறங்கவில்லை; வயிற்றில் வலி. கண்பார்வைகூட மங்கிப்போயிற்று; அவ்வளவு நூல்கள் எழுதிய கை பேனா பிடிக்க முடியாமல் மெலிந்தது. வரவரப் பேச்சும் குறைந்தது; கைச்சாடைதான் அன்பரை ஆசீர்வதித்தது. அத்துடன் கவலை! கவலை எதைப்பற்றி—உலகைப்பற்றித்தான். மேற்கே ஆகாய குண்டும் நாசகாரியும் கொண்டு மனித சமுதாயம் தற்கொலை செய்துகொள்ளும் கோரமான காட்சி அவர் மனத்தை வருத்தியது. சீனரும் ருஷ்யரும் படுந்துயரைக் கண்டு கவி துன்புற்றார். நோய் எப்படி யிருந்தாலும் உலக நடப்பை அவர் தினம் விசாரித்தார்; ஜெர்மனி ஜப்பான் இரண்டும் செய்யும் அசுரக் கொடுமையைக் கண்டித்தார்; சாந்திநிகேதனைப்பற்றி அடிக்கடி நினைத்தார்; சமையல் சாப்பாடு முதலிய ஏற்பாடுகளைப்பற்றிக் கருத்துடன் விசாரித்தார். மாணவருக்கு நெய் நிரம்பவிடச் சொன்னார்; சிறு குழந்தைகளைப் பிரியமுடன் அழைத்துச் சாகெலேட், பெப்பெர்மெண்டு கொடுத்துப் பிரியமாகப் பேசினார்; (குழந்தைகளுக்காக அவரிடம் எப்போதும் இவை இருக்கும்); சுபாஷிதரத்ன பண்டாகாரத்தில் சில சுலோகங்களைக் குறித்து மாணவருக்குப் போதிக்கச் சொன்னார்; வங்க மொழியை உணர்ச்சியுடன் சொல்லித்தரவேண்டுமென்றார். "குழந்தைகளுக்குச் சொல்லித் தருவது எனக்குப் பேரின்ப மளிக்கும். இனி அந்த இன்பம் எனக்குக் கிடைக்காது; உபாத்தியாயர்களை மேற்பார்க்கவும் முடியாதே! இந்தத் துர்ப்பலம் எனக்கெப்படி வந்தது! தொண்டைகூட அடைக்கிறதே!" என்று கம்மிய குரலுடன் விசனப்

பட்டார். ஊலு (நாய்) வந்து வாலாட்டி நின்றது. அதைத் தட்டிக்கொடுத்து பிஸ்கோத்து தந்தார்; இரண்டுமாதக் குழந்தைபோல க்ளாக்ஸோதான் சாப்பிட்டார். அப்போது வேடிக்கையாகப் பேசினர். "நான் இப்போது எத்தனை மாதக் குழந்தை?" என்று கேட்டார்; செடிகொடிகளை அன்பாக நோக்கினர். குழந்தைகளுக்கடுத்தபடி அவருக்குச் செடிகள்மேல் பிரியம் அதிகம். தாம் வளர்த்த மரத்திலிருந்து கனிகள் பறித்துவரச் சொன்னர்; அக்கனிகளை அவர் புசிக்கவில்லை. சுற்றிலும் இருப்பவருக்குத் தந்து "சுவைத்துப் பாருங்கள் என் கனிகளை!" என்று கொடுத்தார். எல்லாம் சரி; நோய் தணியவில்லை; காய்ச்சல் கனல்போ லெரிந்தது. வயிற்றில் நோய் அதிகரித்தது. டாக்டர்கள் கல்கத்தாவிற்குச் செல்வதே நல்லதென்றனர். "நான் அமைதியாக இறக்கிறேனே; இருந்தது போதுமே" என்றார். "நோய் தீரும்; தாங்கள் இன்னும் இருக்க வேண்டும்; தேசத்திற்குத் தங்கள் சேவை வேண்டும்; கல்கத்தாவில் வேண்டிய சிகிச்சை செய்து சொஸ்தப் படுத்தலாம்" என்றனர் வைத்தியரும் அன்பரும்.

"இந்த மரங்களை இனிக் காண்பேனே?" என்று குழந்தைபோல வருந்தினர் கவியரசர்; சிற்றப்பா பிள்ளை அபனிந்திரநாத தாகூரின் 71-ஆம் ஆண்டு விழாவைச் சிறப்பாகக் கொண்டாட வேண்டும் என்றார்.

உத்தராயண் வீட்டைச் சுற்றி விழியை ஓட்டினர்; மோட்டார் பஸ் வந்தது; "சலாம்" (போவோம்) என்றார். மாடியிலிருந்து நாற்காலியில் அன்பர் கொண்டு வந்தனர்; பூப்போல வண்டி யேற்றினர்.

கறுப்புச் சட்டையும் புகைக் கண்ணாடியும் பூண்டு கவியரசர் கம்பீரமாகத் தோன்றினர். ஆசிரமவாசிகள் துயரத்தை விழுங்கி மௌனக் கண்ணீருடன் நின்றனர். சிலர் படம் பிடித்தனர். மாணவர் "அமாதேர் சாந்திநிகேதன்" என்ற பாட்டைப் பாடினர். மோட்டார் விரைந்தது ; வழி நெடுக ஜனங்கள் வியப்புற்று நின்றனர். கவியரசரைப் பார்க்க ஏராளமான கூட்டம் வந்தது. உடம்பு நலமாகித் திரும்பி வரும்போது பெரிய திருவிழா நடத்த வேண்டும் என்றனர் அன்பர்.

விதி வேறு நினைத்தது ! குருதேவர் மீளா விடை பெற்றுக் கொண்டார். ஹௌராவில் இரயிலேற்றி கவனமாக மாலை 3-15 மணிக்கு ஜோரசங்க மாளிகையில் கவியரசரைக் கொண்டு சேர்த்தனர். பிரயாணம் ஆயாசப்படுத்தியது : ஆள் அயர்ந்து அசைய முடியாது படுத்தார். முகம் வெளுத்தது. இரவில் நல்ல தூக்கம் ; காலையில் காப்பி சாப்பிட்டதும் அபனீந்திரர், சோமேந்திரர், சாருசந்திரர், டாக்டர் அமியாசக்ரவர்த்தி முதலியோரைக் கவியரசர் அழைத்துப் பேசுகிறார். வாலிப நினைப்புகள் வருகின்றன. சுதேசிக் கிளர்ச்சியில் தாம் செய்ததைப்பற்றிப் பேசுகிறார். திடீரென்று அபனீந்திரரைப் பார்க்கிறார். "அபனீ, உனது 71-ஆம் ஜயந்தியை எல்லாரும் கொண்டாட வேண்டுகிறார்கள் ; நீ தடுக்கிறாயாமே ; ஜன சம்மதத்தைத் தடுக்க உனக்கு என்ன உரிமை? உனக்கு மட்டுமன்று ; உன் கலைக்கும் மரியாதை செய்ததாகும் ; ஒத்துக்கொள் ! இந்த மாதிரிக் கொண்டாட்டம் நல்ல பயனளிக்கும்" என்கிறார். "தங்கள் தாட்சிண்யத்திற்காகப் பொது மரியாதையைப்

பொறுக்கிறேன்" என்கிறார் அபனீந்திரர். "அபனி சரஸ்வதி புதல்வர்; அழகின் உபாசகர்; நாடு முழுதும் அழகை மதிக்கச் செய்தவர்" என்கிறார் கவி மன்னர்.

30-7-41-ல் சத்திர சிகிச்சை செய்ய ஏற்பாடு நடந்தது. 29-ஆந்தேதி வரையில் தாகூருக்கு இது தெரியாது. அவர் காலையில் தெளிவாயிருந்தார்; போர்ச் செய்திகளைக் கேட்டார்; தமாஷாகப் பேசினார். டாக்டர் தொல்லைதான் அவருக்குத் தாங்கவில்லை. அறுப்பு வைத்தியத்திற்கு முன்னே நரம்பில் க்ளூகோஸ் (Glucose) செலுத்தினர். அதனால் அதிர்ச்சி உண்டானது.

29-ந்தேதி மாலை; 'ஆபரேஷன்' விஷயம் தாகூருக்குத் தெரிகிறது. "அஃது எவ்வளவு வலி தரும்? சொன்னால் தயாரித்துக் கொள்வேன்" என்று டாக்டர் ஜோதிப்ரகாச சர்க்காரிடம் குழந்தைபோலக் கேட்கிறார். "வலிக்கவே வலிக்காது; ஆபரேஷன் நடப்பதாகவே தோன்றாது; நீங்கள் ஒரு கவிகூட எழுதலாம்" என்றார் டாக்டர். "கவி கட்டுவதைவிடச் சிரமமா யிராதென்றால், தயார்; கூப்பிடு இராணை வைத்தியரை!" என்றார் தாகூர். "நாங்கள் மிகவும் சாவதானமாகவே செய்வோம்" என்றார் டாக்டர். "சாவிடம் உங்கள் சாவதானம் பலிக்காது!" என்றார் தாகூர்.

## 56. இறுதிப் பாட்டு

**தா**கூர் மீளாப் பிரயாணத்திற்குத் தயாராகி விட்டார். "இராணி, எழுது!" என்றார்—(இராணி என்னும் பெண்மணி அச்சமயம் அவருக்கு எழுத்து

வேலை பார்த்தாள்). உடனே ஒரு பயங்கரமான பாட்டு வந்தது. "**துக்கேர் ஆந்தார் ராத்ரி பாரே பாரே**" என்று தொடங்கும் அப்பாட்டின் மொழி பெயர்ப்பைத் தருகிறேன்: "சாவின் காரிரவு திரும்பித் திரும்பி என் வாயிலுக்கு வந்துவிட்டது. கஷ்டத்தால் புருவம் சுளித்தல், அந்தகாரத்தில் வழி தப்பி ஏமாறிச் செல்வதற்கு முன்னணியான பயத்தின் நெளிப்புகள்—இவையே அந்தச் சாவின் ஆயுதங்கள் எனக் கண்டேன். பயத்தின் வேஷத்தை நாம் நம்பின போதெல்லாம், பயனற்ற தோல்வியே வந்தது. வெற்றி - தோல்வியான இந்த ஆடலே வாழ்வின் மித்தையாகும். பிள்ளைப் பருவத்திலிருந்து ஒவ்வொரு பதத்திலும் தூக்கத்தின் பரிகாஸத்தால் நிரம்பிய இந்தப் பயபீதி நம்மைப் பற்றிக்கொள்கிறது. பல வித பயங்களின் சலனப்படம்—சாவின் நிபுண சிற்பம், விகீர்ண அந்தகாரம்—இதுவே வாழ்வின் மோகம்!"—

சாவைப் பற்றித் தாகூர் பல கவிகள் பாடியிருக்கிறார்: "எமன் வந்து என் காதில் 'உன் காலம் ஆயிற்று' எனும்போது, 'நான் அன்பில் வாழ்ந்தேன்; வெறுங்கால வுணர்வுடனன்று' என்று அவனுக்குச் சொல்வேன். என்னவோ தெரியாது, நான் பாடும்போதெல்லாம் அமரத் தன்மை பெற்றேன் என்பேன். மலர் கனியாய் விட்டது; இனி இதழ்கள் உதிருமே என்ற பயமில்லை; இதோ கனியும் அவ்யக்தப் பிரமனுக்கு நிவேதனமாகிறது."

30-ஆந்தேதி 'ஆபரேஷன்' தினம். வீடு டாக்டர் மயம்! வராந்தாவில் ஆபரேஷனுக்கு ஏற்பாடாகிறது. இதோ தூக்கிச் செல்லப் போகிறார்கள். அப்போது

ஒரு கவிதை வந்தது; அதுவே தாகூரின் இறுதிக்கவி. "தோமார் ஸ்ருஷ்டிர் பத" என்று தொடங்கும் அந்தக் கவியின் கருத்து இதுவாகும்:

"ஹே ஜாலமயனே, உனது சிருஷ்டியின் பாதையை விசித்திரமான ஜாலங்களால் மூடி யிருக்கிறாய். வஞ்சமற்ற ஜீவர்களுக்குப் பொய் நம்பிக்கைகளான வலை விரித்திருக்கிறாய். ஒரு மகானைக்கூட உனது ஜாலத்தால் ஏமாற்றுகிறாய்; இரவின் இரகசியத்தை அபகரிக்கிறாய். எளிய நம்பிக்கையால் பிரகாசிக்கும் இதய வழியே உனது தாரகை அவனுக்கு இலங்குகிறது. அது வெளியே இரணவேதனை தந்தாலும் உள்ளே நேராயிருக்கிறது; அதுவே அவன் பெருமை. அந்த மகானை மனிதர் வீணன் என்றாலும், அத்தரங்கத்தில் அந்தர் ஜோதியால் சுத்தமான சத்தியத்தை அவன் காண்கிறான். யாரும் அவனை ஏமாற்ற முடியாது. தனது இறுதிப் பரிசைத் தன் பொக்கிஷத்திற்கு அவன் கொண்டுபோகிறான். உனது ஜாலத்தை எளிதாகத் தாங்கக்கூடியவன் உன் கரங்களால் நித்திய சாந்த வுரிமை பெறுகிறான்."

30-7-1941; காலை 9-30; கவியைப் பார்த்துத் திருத்த நினைத்தார்; முடியவில்லை. "ஆ நான் எவ்வளவு தளர்வடைகிறேன். நான் சௌக்கியமாவேன் என்று டாக்டர்கள் சொல்லுகிறார்கள்; கவி தாமதிக்கட்டும்" என்றார். அச்சமயம் பிரதிமாதேவி கடிதம் வந்தது; அவள் சாந்திநிகேதனில் நோயாயிருந்தாள். அவளுக்குப் பதில் சொல்லி எழுதச்செய்து கையெழுத்திட்டார். அத்துடன் சரி. பிறகு பாடவுமில்லை; பேனாத் தொடவுமில்லை.

---

## 57. நான் தயார்

டாக்டர் L. M. பானர்ஜி வருகிருர். "எல்லாம் தயார்; சரி; இன்றே இப்போதே ஆபரேஷன் செய்தாலென்ன?" என்கிருர். குருதேவர் சிறிது திகைக்கிருர். "பிறகு அதுவும் சரிதான்; நான் தயார்" என்கிருர். டோலிகட்டி தாகூரை வராந்தாவுக்குக் கொண்டு செல்கின்றனர்; எல்லாரும் அப்புறம் செல் கின்றனர். டாக்டர்கள் ஒருமணி நேரத்தில் (11-45 A. M.) வேலே செய்து "ஆபரேஷன் முடிந்தது" என்ற னர். அது வெற்றியாகவே முடிந்தது; தாகூர் சந் தோஷமாகவே யிருந்தார்; அதைக்கண்டு எல்லார் முகமும் மலர்ந்தது. "வலித்ததோ?" என்று டாக்டர் பானர்ஜி வினவினர். "பொய் சொல்லச் சொல்லுகி றீரா?" என்று வேடிக்கையாகச் சொன்னுர் தாகூர். பகல் நல்ல போதாகப் போனது. இரவில் உறக்க மில்லே; மறுநாள் (31-7-41) நிலேமை மோசமானது. சூடு அதிகரித்தது; தாது பட படத்தது; நிம்மதி யில்லே; வலி; டாக்டர்கள் என்னென்னவோ செய் தனர்; அவர்கள் முகமும் வாடியது; இரவு கொஞ் சம் உறங்கினுர். ஆபரேஷனுகி மூன்றும் நாள் (ஆகஸ்டு முதல் தேதி) உடல் நலங் கண்டது; சூடு நிதானம்; தாது நிதானம்; சிறிது பார்லி கஞ்சியும் இறங்கியது. மறுநாள்; ஆபத்தில்லே என்று எல்லா ரும் மகிழ்ந்தனர். பிள்ளே இரதீந்திரரும் 'அப்பா பிழைத்தார்; சாந்திநிகேதனம் செல்லலாம்' என்று மூட்டை கட்டினுர். மூட்டை வண்டி யேறவில்லே; மறுபடியும் அலட்டல், வலி, தளர்ச்சி! சூடு ஏறியது; தாது படக் படக் என்று அடித்துக்கொண்டது

சாயங்காலம் கொள்ளு கொள்ளென்று இருமல் கண்டது. இரவில் உறக்கமில்லை.

4-ஆந் தேதி நிலைமை மோசமானது; பிரதிமா தேவி வந்து பார்த்தாள். தாகூருக்குப் பிரக்ஞை யில்லை; பேச்சில்லை; இருமல் விடவில்லை. மருந்து மேல் மருந்து வைத்துத் திணித்தும் பயனில்லை. நண்பர் நீலரத்ன சர்க்கார் வந்தார். மயக்கம்; பேச்சு மூச்சில்லை. 7-ஆந் தேதி கண் வீங்கி யது; கண்ணீர் கொட்டியது; உயிர் சாவின் பிடி யில் சிக்கியது. 7-8-41 காலை பத்து மணிக்குத் தொண் டைக்கும் நெஞ்சுக்கும் இழுத்தது; ஆத்மா சூக்ஷ்ம தேகத்தைச் சுமந்து வெளியே செல்லப்போகிறது. டாக்டர்கள் விடவில்லை; பிராண வாயுவைச் (Oxy- gen) செலுத்தினர். மூச்சு மெல்ல மெல்ல ஒடுங்கிப் பன்னிரண்டு மணிக்கு அடங்கிப் போனது. இந்த உடற் சட்டையை உதறி ஆத்மா சென்றது. தாகூர் என்னும் பெயரால் உடலில் அடைபட்டிருந்த ஆன்மா விடுதலை பெற்றுச்சென்றது! அது மற்றோ ருடல் தாங்கி வரும்:

"I shall be born again and again. With all her poverty, misery and wretchedness, I love India best."

இதைத் தாகூர் அடிக்கடி சொன்னார்: "வறுமை, துயர், தொல்லைகளால் வருந்தினாலும் இந்தியாவை நான் நேசிக்கிறேன். அதன் சேவைக்கே மீண்டும் மீண்டும் பிறப்பேன்...ஆம்!" கவிக் குயில் மற்றொரு வடிவில் வந்து மீண்டும் ஜயகானம் செய்யும்!

---

## 58. சடங்குகள்

தாகூர் மறைவு உலகிலேயே ஓர் அதிர்ச்சியை உண்டு பண்ணியது. சாதி, மதம், நாடு, நிறம், கட்சி வேறுபாடில்லாமல், மேற்கும் கிழக்கும் அனுதாபத் தந்திகள் அனுப்பின. கடிதங்கள் மலையாய்க் குவிந்தன. ஒருவாரம் பத்திரிகைகளெல்லாம் தாகூர் மயந்தான். உலகப் பத்திரிகைகளெல்லாம் தாகூர் ஆவிக்கு வணக்கம் செலுத்தின. ஒவ்வொரு இந்திய மொழியிலும் தாகூர் மலர்கள் வெளிவந்தன. அவற்றுள் தலைசிறந்தது கல்கத்தா முனிசிபல் கெஜட் வெளியிட்ட விசேஷ மலர். அதில் ஏராளமான படங்களுடன் தாகூரைப் பற்றிய எல்லா விஷயங்களும் வெளிவந்தன. கல்கத்தாக் கலாசாலைகள், கடைகள், சந்தைகள், கச்சேரிகள் எல்லாம் தாகூர் இறந்த செய்தி கேட்டதுமே அடைபட்டன. சர்க்கார்க் கட்டிடங்களில் கொடிகள் பாதி சாய்ந்தன. ஜன சமுத்திரம் ஜோரசங்க மாளிகைமுன் வந்து நெருங்கியது. எள்போட இடமில்லை என்றால் அந்தக் கூட்டத்திற்கே தகும்.

தாகூர் உடலுக்குப் பட்டணிந்து ஏராளமான மலர்களால் அதை அலங்கரித்தனர். கிளிபறந்துபோன அந்தக் கூட்டைப்பார்க்க வரிசை வரிசையாக நகரப் பிரமுகர் வந்தனர். பிரேத ஊர்வலம் மாலை 3-30-க்குப் புறப்பட்டது. சித்பூர் ரோடு, விவேகானந்தர் ரோடு, சித்தரஞ்சன் சாலை, கொலுடோலா தெரு முதலிய வீதிகள் வழியே பவனி சென்றது. மாடிகளிலும் உப்பரிகைகளிலும் திண்ணைகளிலுமிருந்து ஜனங்கள் மலர்மாரி பெய்தனர்; பன்னீர் வாரித் தெளித்தனர்;

கவியின் உடலை வணங்கினர்; கண்ணீர் விட்டனர். காலேஜ் தெருவில்,ஸெனேட் ஹௌஸுக்கு முன்பு, கல்கத்தாச் சர்வ கலாசாலை கவிக்கு வணக்கம் செலுத்தி மாலை சூட்டியது. கவர்னர் மாலையை உப அத்யக்ஷகர் போட்டார். கலைவாணர் மாலைகளைக் குவித்தனர். காரன்வாலிஸ் தெருவிலுள்ள சாதாரண பிரம சமாஜத்தின்முன் பவனி சிறிது நின்றது. பிரம சமாஜிகள் வேதகானம் செய்து தாகூர் உடலுக்கு மாலை சூட்டினர். பவனி கிரே தெரு, கிருஸ்து பால் சாலை வழியாகச் சென்று, நீம்தோலா வழியாக மயானத்தை அடைந்தது. இருபுடையிலும் ஆயிரக் கணக்கான அன்புக் கரங்கள் மலர்கள் சொரிந்து கண்ணீர் பொழிந்தன ; தாகூர் பெயரைக் கூவி அழுதனர். பாடை போகக்கூட முடியாமல் கூட்டம்! கங்கைக் கரையில் பாடையை வைத்ததுதான். கடைசியாக அந்தக் கலைமுகத்தைப் பார்க்கக் கூட்டம் இடித்து நெருங்கியது. அதனால், செய்யவேண்டிய கிரியைகள் மிகவும் தாமதப்பட்டன.

உத்தரக் கிரியை இரவு 8-மணிக்குத் தொடங்கியது ; நிசி 12 மணிக்கே முடிந்தது. பிரம சமாஜிகளுக்குத் தேவேந்திரநாதர் வகுத்த அனுஷ்டான பத்ததிப்படியே கிரியைகள் நடந்தன. ஜதையில் உடம்பை வைத்துத் தீ மூட்டினர். மகன் முகாக்கினி மட்டும் போட்டுச் சென்றான். உலகெல்லாம் சுற்றி மலை மலையாகப் புகழ்மாலை சுமந்த அந்த ஊனுடல் வெந்து சாம்பலானது. சாம்பலை ஒரு வெள்ளிப் பேழையில் ஏந்தி, இரதீந்திரர் சாந்திநிகேதனுக்குக் கொண்டு சென்றார்.

---

## 59. சிராத்தம்

**17-8-41;** ஞாயிற்றுக்கிழமை சாந்திநிகேத னில் தாகூருக்குச் சிராத்தச் சடங்கு நடந்தது. இரதீந் திரநாதர் நடத்தினர். தேவேந்திரநாதர் தியான மேடைக்குமுன் பெரிய அலங்காரப் பந்தலில் சுமார் 2000 பேர் அமர்ந்தனர். தாகூர் தம் ஈமக்கடன் களை அடக்கமாக, எளிய முறையில் நடத்தச்சொல்லி யிருந்தார். அப்படியே எல்லாம் நடந்தன. "ஒளியே போற்றி" என்ற காலைப் பாட்டுடன் சடங்கு தொடங்கியது. பண்டித க்ஷிதிமோகன் ஸென், பண் டித விதுசேகர் சாஸ்திரி இருவரும் வேதமந்திரம் சொல்லிக் கிரியைகளைப் பண்ணி வைத்தனர்.

"மாணவர்" தொமாரி இச்சாஹோக் பூர்ண கருணாமய ஸ்வாமி என்ற பாசுரம் பாடினர். சிராத் தம் தொடங்கியது. பிரம சமாஜிகள் சொல்லும் வேதமந்திரங்கள் எனது* உபநிஷத் ஸாரத்திலுள்ளன; காண்க. மந்திரங்களானதும் எல்லாரும் தாகூர் இருந்த உத்தராயணத்தைச் சென்று பார்த்தனர். அங்கே தாகூரின் பட்டங்கள், பட்டயங்கள், அவர் மேஜை, நாற்காலி, பேனா எல்லாம் அழகாக அணி பெற வைக்கப்பெற்றிருந்தன.

அன்று சுமார் 3000 ஏழைகளுக்குச் சாப்பாடு நடந்தது. அதுவே கவியரசர் கட்டளை. உடல் பிடிசாம்பலானது; ஆன்மா காணா உலகம் சென் றது. ஆனால், தாகூர் இதோ நம்மிடையே இருக் கிறார்; உலகுள்ளளவும் இருப்பார். அவர் கவிதை கள், கதைகள், கட்டுரைகள், நாவல்கள், கடிதங்கள், நாடகங்கள், படங்கள் எல்லாம் என்றும் இருக்கும்.

---

* இந்நூல் அடுத்த ஆண்டு வெளிவரும்.

அவர் நாட்டிய விசுவபாரதி உலகின் சிறந்த கலா நிலயமாக என்றும் விளங்கும். தாகூருக்குப் பிறகு மகாத்மாவின் விருப்பப்படியே சித்திர வித்தகரான அபனீந்திரநாத தாகூர் விசுவபாரதியைத் தலைமை வகித்து நடத்துகிறார். முன்போலவே எல்லாம் சிறப்பாக நடக்கின்றன. தாகூரின் நூல்களே அவரது உள்ளம்; விசுவபாரதி அந்த உள்ளம் விளங்கும் கலைக்கோயில்.

---

## 60. விசுவ பாரதி

மஹர்ஷி தேவேந்திரர் சாந்தி நிகேதனம் கண்டார்; இரவீந்திரர் அதை விசுவ பாரதியாக வளர்த்தார். தேவேந்திரர் தியானபீடத்தின் கீழ், "அவன் என் பிராணனின் ஆராமம், மனத்தின் ஆனந்தம், ஆத்மாவின் சாந்தி" என்று எழுதியிருக்கிறது. இந்த மூன்றுடன் அங்கே கல்வியும் கலையும் தொழிலும் இன்று துலங்குகின்றன. வெறும் பொட்டலைப் பொழிலாக்கி ரூ. 6000 முதல் வைத்து சாந்தி நிகேதனம் தொடங்கினர் மஹர்ஷி; இராஜாராம் மோஹன் ஏற்படுத்திய பிரம்ம மந்திரச் சட்டதிட்டங்களையே அதற்கு விதித்தார். ஆத்ம சாந்திக்காக அங்கே யாரும் வந்திருக்கலாம்; எந்த மதத்தையும் தூஷிக்கக் கூடாது; ஊனுணவு கூடாது. அங்கே அனைவரும் பிரார்த்தனை செய்ய ஒரு கோயிலும் எழுந்தது. 30 ஆண்டுகள் அங்கே ஜனங்கள் அதிகமாக வருவதில்லை. 1901-ஆம் ஆண்டுதான் தாகூர் அதில் வித்தியாலயம் தொடங்கினர். தாகூர் அதைக் கலைத் தவ நிலயமாக்

கினார். உபநிஷத் ஞானம், காளிதாஸன் கவிதை இரண்டும் அவர் கருத்தில் உருக்கொண்டன. இயற்கை வனத்தில் சுயேச்சையாக உலாவிப் பழைய பிரமசரிய முறையில் கல்வி கற்பதே சிறந்த கல்வி முறை. ஆசிரம வேலைகளை மாணவரே பங்குகொண்டு செய்தனர். சமையலுக்கு மட்டும் தனி ஏற்பாடு. வித்யாலயத்துடன் கர்மாலயமும் இணைத்து மாணவருக்குப் பல தொழில்களைப் பயிற்ற தாகூர் முயன்றார். முதலில் மிகச்சில மாணவரே வந்தனர்; ஆதரவு அதிகமில்லை. பலர் 'இது வெறும் கவிக்கனவு; காரியத்திற்குதவாது' என்று நினைத்தனர். அஃது, இருக்கிற ஆங்கிலக் கல்வியையும் பாழ்பண்ண வந்ததாகச் சிலர் சூழ்க் கொட்டினர். சிலர் இந்தப் பிரம சமாஜியிடம் தங்கள் குழந்தைகளைவிட மறுத்தனர். எப்படியோ பத்துப் பிள்ளைகளுடன் தாகூர் வித்யாலயத்தை நடத்தினர். தேவேந்திரர் ஆசி அவருக்கிருந்தது; மனோதைரியம் இருந்தது. முதலில் தாமே எல்லா வகுப்புகளையும் எடுத்துக்கொண்டு நடத்திவந்தார்; பிள்ளைகளுடன் படித்தார், ஆடினார், பாடினார்; வேலை செய்தார். பிறகு பிரமபாந்தவ உபாத்தியாயர், சதீஸ் சந்திர ரே, மோஹித் சந்திர ஸேன் முதலிய அறிஞர் உதவிசெய்தனர்; ஆனால் அவர்களைச் சாவு கொண்டு போயிற்று. தமது சொத்துச் சுதந்தர மெல்லாம் தியாகம் செய்து தாகூர் சாந்திநிகேதனை அன்புடன் வளர்த்தார்; முதலில் மாணவருக்கு இனமாகவே வித்யாதானம் செய்தார். உணவுகூட இனம்! பிறகு செலவு அதிகமானது. ஆசிரமம் விசாலித்தது; மாணவருக்கு ரூ. 15 வீதம் மாதா மாதம் குருதட்சிணை வசூலிக்கப் பெற்றது.

வந்தது சுதேசி இயக்கம்: தாகூர் அதில் தீவிர மான பங்கு கொண்டார். நாட்டில் ஒற்றுமை, ஒருமனப் பான்மை, ஏழைகள் படும் வறுமைதீரத் தொழிலறிவு, மடமையிருள் நீங்கும் கல்வி,—இம் மூன்றிலேயே அவர் கருத்தூன்றினர். கல்கத்தாவில் சுதேசக் கல்லூரிக்காக அவர் சங்கம் சேர்த்துப் பாடு பட்டார்; தமது ஆசிரமத்தைக்கூட அதில் சேர்க்க உத்தேசித்தார். ஆனல், காலநிலை மாறியது. அவ ருக்கு மேடைக்கூப்பாடு பிடிக்காது. அவர் அடக்க மாகத் தமது காரியத்தில் கருத்தூன்றினர். நோபெல் வெகுமதி கிடைத்த பிறகே அவருக்குச் சுக்கிரதசை வந்தது. தாகூரின் கீதாஞ்சலிப் பிரயாணத்தால் அவர் புகழுடன், சாந்திநிகேதன் புகழும் ஓங்கியது. அவருக் குத் துணைபுரிய அறிஞர் பலர் வந்து கூடினர். ஆந் துரூஸ், பியர்ஸன் ஆகிய இருவரும் அவருக்குக் கண்ணு யிருந்தனர். இனி, "ஆசிரமம் வங்காளத்திற்கு மட்டு மன்று, உலகிற்கே பொதுவாக வேண்டும்; பல நாட் டுக் கலைகள் அதில் வந்து இணைய வேண்டும்; மேற் கும் கிழக்கும் பொருந்தி வாழவேண்டும். பழைய ரிஷி ஞானத்தை அடிப்படையாகக் கொண்டு காலத் திற்கேற்ற புதுமை பெறவேண்டும்" என்ற விசால மான கொள்கையுடன் விசுவபாரதி எழுந்தது; 1918.

உலகெலாம் எங்கு சேர்ந்து வாழுமோ அதுவே விசுவபாரதி. 'விசுவம்' என்றால் உலகம். 'பாரதி' என்றால் ஞானம். அகில ஞான நிலயமே விசுவபாரதி. பாரதி என்றதில் பரதன், பாரத நாடு என்னும் பெயரும் அடக்கம். பாரதக் கலை உலகளாவி, உலகக் கலைகளுடன் இணைந்து விசாலமாக விளங்கவேண்டும் என்பதே கொள்கை. விசுவபாரதியில் வேதக்கலை,

புத்தகக்கலை, பாலி, பிராகிருதம், திபேதியம், சீனம் ஆகியவற்றின் கலைகளும் சம்ஸ்கிருத இலக்கியங்களும் வளர்ந்தன. நுண்கலைகளும் இசைக் கலையும் வித்தியாலயத்தில் முதன்மை வகித்தன.

அழகுடன் இணைந்து வாழ்வது கல்வியின் நோக்கங்களில் ஒன்று. 1918-ல் கலா பவனம் எழுந்தது. நந்தலால் போஸ் வந்து அதைச் சிறப்பாக நடத்தினார். அதில் சித்திரமும் சங்கீதமும் இன்னும் பல இனிய கலைகளும் வளர்ந்தன. நாடகக்கலை இனிய முறையில் கற்பிக்கப்பெற்றது. சென்ற ஜெர்மன் போருக்குப் பிறகு, தாகூர் மேனாடுகளில் யாத்திரை செய்து மேற்கும் கிழக்கும் பொருந்தியதான கல்வி முறைகளைப் பல இடங்களில் விளக்கினார். அமெரிக்காவில் L. K. எல்ம்ஹிர்ஸ்ட் என்ற செல்வர் ஆசிரமத்தில் கிராம நிர்மாண வேலைசெய்ய உடன்பட்டு வந்தார்; முன்பே ஸூருளிஸ் பெரிய நிலம் வாங்கிப் பயிர்த்தொழில் நடத்தினார். தாகூர் தம் மகனையும் அத்தொழிலில் தேர்ச்சிபெறச் செய்தார்.

1921-ல் ஒத்துழையாமை இயக்கம் பிரமாதமாக எழுந்தது. அதில் தாகூரைச் சேரும்படி தலைவர்கள் வற்புறுத்தினார்கள். தாகூர் ஒதுங்கியிருப்பது பலருக்குப் பிடிக்கவில்லை. தாகூர் தமது உலக சமரசக் கொள்கையை விளக்கினார்: "உலகின் உள்ளத்தில் நமக்கு ஓர் இடம் வேண்டும். உலகை அதிதிபோல் நாம் வரவேற்று உபசரிக்கவேண்டும்; நமது ஆத்மீகக் கலையைத் தந்து உலகிடம் உள்ள நயத்தைப் பெற வேண்டும். விசுவபாரதி பாரத மாதாவின் உலக விளக்கமாகும். அதில் சாதி சமய நாடு நிற வேறுபாடின்றி, எல்லாரும் ஒற்றுமையாக வசிக்கலாம்.

மனித சமுதாய ஐக்கியமே விசுவபாரதியின் நோக்கம்" என்று தாகூர் தெளிவாகச் சொன்னார்.

உலக இலக்கியங்களுக்கு வித்தியாலயம், தற்கால முற்கால ஆராய்ச்சிகளுக்கு வித்யா பவனம், கலை வளர்ச்சிக்குக் கலாபவனம், பெண்களுக்கு நாரீ பவனம், தற்காலத்திற்கேற்ற கல்வி பயில சிக்ஷா பவனம், கிராம சேவைக்கும் தொழில் வளர்ச்சிக்கும் ஸ்ரீநிகேதனம்—ஆகிய ஸ்தாபனங்கள் விசுவபாரதியில் அடங்கியுள்ளன. விசுவபாரதி சேவைக்காக ஏராளமான அறிஞர் முன்வந்தனர். ஐரோப்பாவில் புகழ்பெற்ற புலவர்களும் அவ்வப்போது வந்து பிரசங்கம் செய்தனர். அவர்களுள் பிரான்ஸிலிருந்து வந்த **Sylvain Levi** (ஸில்வேன் லேவி), செக்கோஸ்லோவாகியாவிலிருந்து வந்த வின்டெர்னிட்ஸ் (**Winternitz**), நார்வேயிலிருந்து வந்த ஸ்டென் கோனௌ (**Sten Konow**), இதாலியிலிருந்து வந்த பார்மிஸி (**Formici**), துக்கி (**Tucci**), ஹங்கேரியிலிருந்து வந்த ஜெர்மானஸ் (**Germanus**) முதலியோர் முதன்மையானவர்கள். விசுவபாரதியில் பல கலை நிலயங்கள் எழுந்தன. வங்கம் ஆங்கிலம் ஆரியம்—இவை தவிர பம்பாய் பார்ஸிகள் உதவியால் ஜோராஸ்திரியக்கலைக்கு ஒரு பவனமும் எழுந்தது. நைஜாம் உதவியால் இஸ்லாமியக் கலைக்கு ஒரு சிறந்த ஸ்தாபனம் எழுந்தது. சீன திபேத்தியக் கலைக்காகச் சீனர் உதவியால் ஒரு நிலயம் எழுந்தது.

1937-ல் சீனு தந்த இலட்சம் நூல்களுடன் சீன பவனம் சிறந்த பணி செய்யத்தொடங்கியது. 1939-ல் ஹிந்தி பவனம் எழுந்தது. கலா பவனத்தில் பருவத் திருநாட்கள் நடந்தன. மணிபுரம் குஜராத்து தென்

ளிந்தியாவிலிருந்து பரத நாட்டியப் புலவரை வரவழைத்து நாட்டியக்கலே கற்பிக்க தாகூர் பக்கா ஏற்பாடு செய்தார். இப்போது சங்கீதத்திற்கும் பரத நாட்டியத்திற்கும் தனியாக ஒரு சங்கீத பவனம் நடக்கிறது. தாகூர் பாடல்களில் பேர்பெற்ற தினேந்திரநாத தாகூர் அதை நிர்வகிக்கிருர். ஸ்ரீநிகேதனில் கிராம சேவைக்காக ஒரு தொண்டர் படை உண்டானது (வ்ரதிபாஸக சேனே). கிராம சுகாதாரம், கல்வி, விவசாயம், ஐக்கிய நாணயச் சங்கம், குடிசைத் தொழில்கள், (நெசவு, பானே செய்தல், மரவேலே, தோல் வேலே முதலியன) ஏராளமாக விருத்தியாகின்றன. கைத்தொழிற் சாமான்கள் வங்க நாடெங்கும் விலேயாகின்றன. "விசுவபாரதியைப் பார்க்காதவன் இந்தியாவைப் பார்க்காதவனுகிருன்" என்று ஜவஹர்லால் சொன்னது மிகவும் சரியாகும்.

விசுவபாரதியில் இருப்பதே அழகின்பம். வரிசை வரிசையாகப் பல மாளிகைகள் உள்ளன. தேவேந்திரர் கட்டிய முதல் வீடு இப்போது அதிதி மந்திரமாயிருக்கிறது. ஸ்ரீமதி ராதன் தாதா நன்கொடையால் ஐரோப்பிய விருந்தினருக்கு ராதன் குடில் ஏற்பட்டுள்ளது. தாகூர் இருந்த வீடு உத்தராயணம். அதுவே பெரிய வீடு. அதில் தாகூர் குடும்பமும் உள்ளது. தாகூருக்கென்று ஒரு தோட்டம் உள்ளது. மாணவருக்கும், உபாத்தியாயர்களுக்கும் சமையலுக்கும், தொழில்களுக்கும், தனித் தனியாக அழகான கட்டிடங்கள் உள்ளன. விசுவபாரதி இன்று கலேயும் திருவும் சேர்ந்து வாழும் அறிவுச் சோலேயாக விளங்குகிறது.

"யத்ர விஸ்வம் பவ்யதி ஏகநீடம்"

"எங்கு உலகம் ஒரு கூட்டில் சேருகிறதோ" என்பது விஸ்வபாரதியின் சுருதி வாக்கியம். ஒரு தாய் பெற்ற குஞ்சுகளெல்லாம் ஒரு கூட்டில் கூடி இன்பமாக வாழ்வது போல, உலகெல்லாம் ஒன்று பட்டு வாழும் சாந்த நிலயம் என்பது பொருள். தாகூர் பிரம சமாஜத் தலைவர்; இறைவனை உள்ளத் திற் கொண்டு, அழகும் அணியும் அருங்கலை யின்ப மும் பொலிய உலக வாழ்வு வாழ்வதில் நம்பிக்கை யுள்ளவர். "பைராக்கிய ஸாதனே முக்திஸே ஆமார் நய்" ("உலகை வெறுத்துத் துறக்கும் முக்தி சாதனம் எனது கொள்கையன்று") என்கிறார்.

"ஈசா வாஸ்ய மிதம் ஸர்வம்
யத்கிஞ்ச ஜகத்யாம் ஜகத்
தேன த்யக்தேன புஞ்ஜீதா
மாக்ருத: கஸ்ய ஸ்வித்தனம்"

என்னும் உபநிஷத் வாக்கே தாகூரின் கொள்கை. மகாத்மா, அரவிந்தர் முதலிய மஹான்களின் உள் ளத்தை அள்ளியது இந்த ரிஷி வாக்கே. "உலகமெல் லாம் இறைவன் உறையுள். அந்த உணர்வால் மனத் துறவுடன் உலகை அனுபவி; பிறர் பொருளுக்குப் பேராசைப்படாதே!" என்பது கருத்து. சாதி, சமயம், நிறம், சாத்திரம், கோத்திரம், மொழி, நாடு என்னும் வேற்றுமை சிறிதுமின்றிச் சாந்தி நிகேதனில் நல்லறி ஞர் வாழுகின்றனர். மாணவ மாணவிகள் விகற்ப மின்றிச் சேர்ந்து கற்கின்றனர். அங்கே மூலாதாரக் கல்வி, உயர்தரக் கல்வி, கல்லூரி, கல்விச்சாலைகள் உள்ளன; பல கலை ஆராய்ச்சிகள் நடக்கின்றன;

காவியம், ஓவியம், பாட்டு, கைத்தொழில்கள், வேளாண்மை, கிராம நன்மைக்கான வேலைகள் நடக்கின்றன ; ஐக்கிய நாணயச் சங்கமும், சுகாதார நிலயமும் உள்ளன ; நல்ல தேகப் பயிற்சி தரப்படுகிறது. ஜ்யூஜித்ஸு (Jiujitsu) என்னும் தற்காப்புப் பயிற்சி, ஜப்பானிய பலவான் ஒருவனால் தரப்படுகிறது.

சாந்தி நிகேதனைச் சேர்ந்த ஸ்ரீநிகேதனில் கிராமப் பணிகள் நடக்கின்றன. அழகும், எளிமையும், அறிவும், சுயேச்சையும், தூய்மையும், ஒற்றுமையும் விசுவபாரதியில் கூடி வாழ்கின்றன. இது வரகவிஞரின் வரம் பெற்ற கலா நிலயம். வரகவிஞர் வாழ்க ! விசுவபாரதி வாழ்க ! தாகூர் வாணியிலிருந்து ஒன்று சொல்லி, இந்நூலை முடிப்போம் :

“ உள்ளத்தானே, என் உள்ளத்தை மலர்ப்பி ; என்னை நிர்மலமாக்கு ; உஜ்வலப்படுத்து ; அழகு செய் ; என்னை விழிப்புறுத்து ; ஊக்கு ; அச்சமறச் செய் ; மங்களமாக்கு ; ஐயமறச் செய் !”

“ அந்தர மம விகஸித கர அந்தர தரஹே !
நிர்மலகர உஜ்வல கர ஸுந்தர கரஹே !
ஜாக்ரத கர உத்யத கர நிர்பய கரஹே !
மங்கல கர, நிரவஸநிஸ் ஸம்சய கரஹே ! ”

ஓம் ! ஓம் ! ஓம் !

---